# சங்க இலக்கியங்களில் நாடுகளும் ஊர்களும்

பெரியார் பல்கலைக்கழக முனைவர் (தமிழ்) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**ப. பிரதீபா**

பதிவு எண். : PU/COE/RD4/Ph.D/727//2012

நெறியாளர்

முனைவர் **இரா. சந்திரசேகரன்**





தமிழ்த்துறை

**அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி**

நாமக்கல் – 637 002.


ஜூலை - 2015

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் இரா. சந்திரசேகரன்**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை
அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி
நாமக்கல் 637 002

"சங்க இலக்கியங்களில் நாடுகளும் ஊர்களும்" என்னும் பொருள் குறித்தமைந்த இந்த ஆய்வேடு பெரியார் பல்கலைக்கழகத்திற்கு ப. பிரதீபா அவர்களால் அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில் 2012 – 2015 ஆம் கல்வியாண்டில் முழுநேர ஆய்வாக என் மேற்பார்வையில் (பிஎச்.டி.) பட்டத்திற்காகத் தன்னிலையாக ஆக்கப்பட்டது எனச் சான்றளிக்கிறேன். இதற்குமுன் இப்பொருள் குறித்து எந்தப் பல்கலைக்கழகத்திலும் எந்த ஆய்வாளருக்கும் எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் வழங்கப்படவில்லை எனச் சான்றளிக்கிறேன்.

நாமக்கல்
08·07·2015

(முனைவர் இரா. சந்திரசேகரன்)
நெறியாளர்

Dr. R. CHANDRASEKARAN
M.A., M.A., M.A., M.A., M.Phil., Ph.D., Ph.D.,
Assistant Professor,
PG & Research Department of Tamil,
Arignar Anna Government Arts College,
Namakkal - 637 002. Tamilnadu. India.

# ஆய்வாளர் உறுதிமொழி

ப. பிரதீபா
முனைவர் பட்ட ஆய்வாளர் (முழுநேரம்)
தமிழ்த்துறை
அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி
நாமக்கல் 637 002

பெரியார் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காக அளிக்கப்பெறும் "சங்க இலக்கியங்களில் நாடுகளும் ஊர்களும்" என்னும் பொருள் குறித்தமைந்த இந்த ஆய்வேடு, 2012 – 2015 ஆம் கல்வியாண்டில் முழுநேர ஆய்வாக அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில் முனைவர் இரா. சந்திரசேகரன் அவர்களை ஆய்வு நெறியாளராகக் கொண்டு என் சுய முயற்சியில் உருவானதாகும். இதற்குமுன் இப்பொருள் குறித்து எந்தப் பல்கலைக்கழகத்திலும் எந்த ஆய்வாளருக்கும் எவ்வகை ஆராய்ச்சிப் பட்டமும் வழங்கப்படவில்லை என உறுதி கூறுகிறேன்.

நாமக்கல்
08.07.2015

(ப. பிரதீபா)
ஆய்வாளர்

நெறியாளர்

(முனைவர் இரா. சந்திரசேகரன்)

Dr. R. CHANDRASEKARAN
M.A., M.A., M.A., M.A., M.A., M.Phil., Ph.D., Ph.D.,
Assistant Professor,
PG & Research Department of Tamil,
Arignar Anna Government Arts College,
Namakkal - 637 002. Tamilnadu. India.

# நன்றியுரை.

சங்க இலக்கியங்களில் நாடுகளும் ஊர்களும் என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதியளித்த பெரியார் பல்கலைக்கழகத்திற்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில் முனைவர் பட்ட ஆய்வை மேற்கொள்ள அனுமதியளித்த கல்லூரி முதல்வர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

எங்களை வழிநடத்திய அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

பல நல்ல நெறிமுறைகளை வழங்கியும் ஆய்வுக்குத் தேவையான நூல்களைக் கொடுத்து உதவியும் ஆய்வு தொடர்பான ஆலோசனைகளையும் அறிவுரைகளையும் வழங்கி ஆய்வைச் செம்மைப்படுத்தி வழிகாட்டியாகத் திகழும் எனது நெறியாளர் அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரித் தமிழ் உதவிப் பேராசிரியர் முனைவர் இரா. சந்திரசேகரன் அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

முனைவர் பட்ட ஆய்வை மேற்கொள்ளத் தூண்டுதலாகவும் முதற்காரணமாகவும் இருந்த நெறியாளரை அறிமுகப்படுத்திய கணிதப் பேராசிரியர் திரு. சின்னுசாமி (பணி நிறைவு) அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சங்க இலக்கியங்களில் நாடுகளும் ஊர்களும் என்னும் தலைப்பிலான இவ்வாய்விற்கு முனைவர் பட்ட ஆய்வு உதவித்தொகை நல்கிய செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்விற்கு உதவி செய்த அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வு சிறக்கப் பல நூல்களைத் தந்து உதவிய அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறை நூலகப் பொறுப்பாளர் மற்றும் உதவிப் பேராசிரியர் முனைவர் மு. நடராஜன் அவர்களுக்கும் நாமக்கல் மாவட்ட மைய நூலகத்தார்க்கும் பெரியார் மற்றும் பாரதியார் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் கல்வி வளர்ச்சிக்கு உறுதுணையாய் நின்ற என் கணவர் எஸ். மோகன்ராஜ், குழந்தைகள் மோ. சர்வேஷ் அஸ்வின், மோ. சிவானி சண்ஷிதா மற்றும் குடும்பத்தினர் அனைவருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வேட்டினைச் செம்மையாகத் தட்டச்சு செய்து கொடுத்த நாமக்கல் இராசராசன் நிறுவனத்தாருக்கும் கணினி அச்சு செய்த ஆல்பா நிறுவத்தாருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகத். | - அகத்திணையியல் |
| அகம். | - அகநானூறு |
| உ.ஆ. | - உரையாசிரியர் |
| ஐங்குறு. | - ஐங்குறுநூறு |
| கலித். | - கலித்தொகை |
| குறள். | - திருக்குறள் |
| குறுந். | - குறுந்தொகை |
| சிலம்பு. | - சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - சிறுபாணாற்றுப்படை |
| செய். | - செய்யுளியல் |
| தொ.ஆ. | - தொகுப்பாசிரியர் |
| தொல். | - தொல்காப்பியம் |
| நற். | - நற்றிணை |
| நெடுநல். | - நெடுநல்வாடை |
| ப. | - பக்கம் |
| பக். | - பக்கங்கள் |
| ப.ஆ. | - பதிப்பாசிரியர் |
| பட்டினப். | - பட்டினப்பாலை |
| பதிற். | - பதிற்றுப்பத்து |
| பரி. | - பரிபாடல் |
| பழமொழி. | - பழமொழி நானூறு |
| பா.எண். | - பாடல் எண் |
| புறத். | - புறத்திணையியல் |

| | | |
|---|---|---|
| புறம். | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணிமே. | - | மணிமேகலை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மரபு. | - | மரபியல் |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மேலது. | - | மேலே குறிப்பிட்ட நூல் |
| மொ. பெ. | - | மொழிபெயர்ப்பு |

# பொருளடக்கம்

# முன்னுரை

ஒரு நாட்டின் வரலாற்றை அறிந்து கொள்ள இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், புதைபொருள் அகழ்வாராய்ச்சி முடிவுகள், நாணயங்கள், பிறமொழி இலக்கியங்கள். அயல்நாட்டார் குறிப்புகள் போன்றவை உதவிபுரிகின்றன. இக்காரணிகளில் இலக்கியங்கள் அவை இயற்றப்பட்ட கால மக்களின் வாழ்க்கை முறை, பண்பாடு, நாகரிகத்தை குறிப்பிடுவதோடு வரலாற்று நிகழ்வுகளையும், அரசியல், சமூக நிலைகளையும் உணர்த்துகின்றன. பேராசிரியர் கே.ஏ.நீலகண்ட சாஸ்திரியார் "பிற நாடுகளில் இலக்கியம் வரலாற்றிற்கு அடிப்படையாக அமைய இந்தியாவில் அது அடிக்கடி சோதனையாக அமைந்து விடுகிறது" என்கிறார். ஏனெனில் சங்க இலக்கியங்களைக் கொண்டு வரலாற்றை அறிய முற்படுகையில் பல இடர்பாடுகள் தோன்றுகின்றன. சங்க இலக்கியங்கள் வரலாற்றை விளக்குவதற்காக எழுந்தவை அல்ல. இது மக்களின் வாழ்க்கையை அகம், புறம் எனப் பாகுபடுத்தி வரையறையோடு விளக்குகிறது. இவற்றினூடாக வரலாற்று நிகழ்வுகளையும் ஆங்காங்கே குறிப்பிட்டுச் சென்றுள்ளனர்.

சங்க இலக்கியங்கள் பண்டைய தமிழ் மக்களின் சமூக படிநிலை வளர்ச்சியைக் காட்டும் நிலையில் உள்ளன. பண்டைய மக்கள் நாடோடிகளாக இருந்த நிலை மாறி குழுக்களாக வாழத் தொடங்கிய இனக்குழு சமுதாயத்தையும் இதன் பிறகு தோற்றம் பெற்ற உடைமைச் சமுதாயத்தையும் விளக்குவதாக சங்கப் புறப்பாடல்கள் அமைகின்றன. இனக்குழு சமுதாயத்தின் வளர்ச்சி மற்றும் எச்சங்களாக சிற்றரசர்கள், குறுநில மன்னர்கள் திகழ்ந்தனர். உடைமைச் சமூகத்தின் தலைவர்களாக பேரரசர்கள் திகழ்ந்தனர்.

சங்கப் பாடல்களில் புறப்பாடல்களில் மட்டுமல்லாது அகப்பாடல்களிலும் வரலாற்று நிகழ்வுகள், அவை நடைபெற்ற இடங்களான ஊர்கள், நகரங்கள் ஆகியவை இடம் பெறுகின்றன. சங்க காலத் தமிழகத்திலிருந்த நாடுகளும் நாட்டை ஆட்சி செய்த மன்னர்கள், வேந்தர்கள் பற்றிய செய்திகளையும் குறிப்பிடுவதோடு சங்க காலத்திலேயே தமிழர்கள் பிற நாட்டினரோடு வணிகத்தொடர்பு கொண்டிருந்தனர் என்றும் பிற நாட்டு

மக்கள் வணிகம் மற்றும் போர் காரணமாக தமிழகத்திற்கு வந்ததையும் சங்க பாடல்கள் பதிவு செய்துள்ளன. இதனை சங்க காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுகள், அயல்நாட்டாரின் பயணக் குறிப்புகள், அகழாய்வுகள் மூலமாக ஒப்பிட்டு ஆய்வு செய்வதும் அவசியமாகிறது.

இதனடிப்படையில் சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள பேரரசு, சிற்றரசு நாடுகள், அந்நாடுகளின் தலைநகரமாகவும், துறைமுகமாகவும். வணிகக் களமாகவும் விளங்கிய நகரங்கள், சங்கத் தமிழகத்திலிருந்த ஊர்கள், மற்றும் அயலக ஊர்கள், நாடுகள், அயல் இன மக்கள், போன்ற கூறுகளை ஆராயும் விதமாக இந்த ஆய்வு அமைக்கப்பட்டுள்ளது.

**ஆய்வுத் தலைப்பு**

“சங்க இலக்கியங்களில் நாடுகளும் ஊர்களும்” என்பது இவ்ஆய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

சங்க காலத் தமிழகத்தை வேந்தர்களும் மன்னர்களும் ஆட்சி செய்துள்ளதை அறிவோம். புலவர்கள் வேந்தரைக் காட்டிலும் மன்னர்களையே பெரிதும் புகழ்ந்துள்ளனர். எனினும் மன்னர் ஆட்சிபுரிந்த நாடுகள், அவற்றின் வளங்கள், இந்நாடுகளை வேந்தர்கள் கைக்கொண்டமை ஆகியவற்றையும் பழங்காலத் தமிழகத்திலிருந்த நகரங்கள் மற்றும் ஊர்களின் உருவாக்கம், அமைப்பு, முக்கியத்துவம், இன்றைய நிலை ஆகியவற்றை ஆராய்ந்து காண்பதோடு சங்க காலத் தமிழகத்தோடு தொடர்பு கொண்டிருந்த அயல்நாடுகள், மக்கள், ஊர்கள், நகரங்கள் ஆகியவற்றையும் ஆராய்வதே இவ்ஆய்வின் நோக்கமாக அமைகின்றன.

**ஆய்வு எல்லை**

செவ்வியல் இலக்கியங்கள் எனப் போற்றப்படும் சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியன ஆய்வின் எல்லையாக அமைகின்றன.

**ஆய்வுக்கான சான்றாதாரங்கள்**

எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் அவற்றிற்கு எழுந்த உரைகளும்

முதன்மை ஆதாரங்களாகின்றன. சங்க இலக்கியம் குறித்து எழுந்த திறனாய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வேடுகள், சங்க காலத் தமிழக வரலாறு தொடர்பான நூல்கள், இடப்பெயராய்வு குறித்த நூல்கள், தொல்காப்பியம், நிகண்டு நூல்கள், அயல்நாட்டாரின் பயணக் குறிப்புகள் முதலியன துணைச் சான்றாதாரங்களாக கொள்ளப்படுகின்றன.

### முன் ஆய்வுகள்

சங்க இலக்கியங்களைப் பற்றி பல பொருண்மையின் கீழ் ஆய்வு செய்துள்ளனர். இவற்றில் வரலாறு தொடர்பாக வெளிவந்த நூல்கள் ஆய்வின் முன்னோடிகளாக திகழ்கின்றன. அவ்வகையில் திரு.வி.கனகசபை அவர்கள் வெளிநாட்டினர் குறித்துள்ள பெயர்களைக் கொண்டு அவற்றை சங்க இலக்கியத்தோடு ஒப்பிட்டு தமிழக வரலாற்றை அறியும் பொருட்டு ஆய்வு செய்து “1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்” எனும் நூலை வெளியிட்டார். இதனை கா.அப்பாதுரையார் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். டாக்டர். மா. இராசமாணிக்கனாரின் “பத்துப்பாட்டு ஆராய்ச்சி” என்ற நூலில் பத்துப்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ள நாடு, நகரங்கள், அவற்றின் இன்றைய எல்லை ஆகியவற்றை இனங் காண்பதாக அமைந்துள்ளது. மேலும் கி.நாச்சிமுத்து அவர்களின் “தமிழ் இடப்பெயராய்வு”, பேராசிரியர். ரா.பி.சேதுப்பிள்ளையின் “தமிழகம் ஊரும் பேரும்”, ஆர்.ஆளவந்தாரின் “இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்-1”, கே.பகவதி அவர்களின் “இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் -2”, ஆகிய நூல்களும் முன் ஆய்வுகளாகத் திகழ்கின்றன. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரியாரின் “தென்னிந்திய வரலாறு”, மயிலை சீனி.வேங்கடசாமி அவர்களின் தமிழக வரலாற்று நூல்களும் முன் ஆய்வுகளாகக் கொள்ளப்படுகின்றன.

### ஆய்வு அணுகுமுறைகள்

சங்கப் பாடல்களில் பதிவு செய்யப்பட்ட வரலாற்றை ஆய்வதன் பொருட்டு வரலாற்று அணுகுமுறையும், இவ்வரலாற்றுக் கருத்துக்களை தேவையான இடங்களில் விளக்கியும் பகுத்தும் கூறுமிடங்களில் விளக்கவியல் அணுகுமுறையும், பகுப்பாய்வு அணுகுமுறையும் மேற்கொள்ளப்படுகின்றன.

**ஆய்வுப் பகுப்பு**

இவ் ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாகக் கீழ்க்காணும் நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

1. சங்க கால நாடுகள்
2. சங்க கால நகரங்கள்
3. சங்க கால ஊர்கள்
4. அயலக நாடுகளும் ஊர்களும்

**முன்னுரை**

முன்னுரையில் ஆய்வுப்பொருள், ஆய்வு நோக்கம், ஆய்வின் எல்லை, ஆய்விற்கான சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், முன் ஆய்வுகள், ஆய்வுப் பகுப்பு, இயல் விளக்கங்கள் ஆகியன இடம் பெற்றுள்ளன.

**இயல் - 1**

**சங்க கால நாடுகள்**

சங்க காலத் தமிழகத்திலிருந்த நாடுளைப் பேரரசு நாடுகள், சிற்றரசு நாடுகள் என இரண்டாகப் பகுத்து இவ்வியலில் ஆராயப்படுகிறது. இந்நாடுகளை ஆட்சி செய்யும் தலைவர்களை வேந்தன், மன்னன் எனக் குறிப்பிடும் சொல்லாட்சியே அத்தலைவன் எத்தகைய நிலப்பரப்பைக் கொண்டவன் என்பதை உணர்த்தும். நாடுகளின் பாதுகாப்பு அரண்களாக மதில், அகழி, காவற்காடு, மலைகள் போன்றவை திகழ்ந்தன.

சேர, சோழ, பாண்டிய நாடுகள் அவற்றை ஆட்சி செய்த வேந்தர்கள் நாட்டின் வளங்கள், இம்முப்பேரரசுகளும் சிற்றரசு நாடுகளை தன் ஆட்சியின் கீழ் கொண்டு வந்து நாட்டின் பரப்பை விரிவுபடுத்திய விதம் போன்றவை ஆராயப்படுகின்றன. சங்க காலத்தில் கொங்கு நாடு பரப்பில் பெரியதாக விளங்கியது எனினும் தனியொரு மன்னனால் ஆளப்படாது பல சிற்றரசர்களால் சிறுசிறு பகுதிகள் ஆளப்பட்டு வந்தன. கொல்லிமலை, மலாடு, பொதினி, முதிரமலை, விச்சி நாடு, எருமைநாடு போன்றவை கொங்கு நாட்டின்பாற்பட்டதாகும். துளு நாடு, புன்னாடு, பூழிநாடு, பறம்புநாடு, நாஞ்சில் நாடு, கண்டீரநாடு, பொதியில் மலை, கோடைமலை, தோன்றி மலை, வேங்கடநாடு, பாணன் நாடு, மிளைநாடு, தொண்டை நாடு, ஓய்மானாடு,

பல்குன்றக் கோட்டம் போன்ற சிற்றரசு நாடுகள் வேளிர்களாலும், மன்னர்களாலும் ஆளப்பட்டுள்ளன. இச்சிற்றரசர்கள் பேரரசர்கள் கீழ் தன் ஆட்சியை மேற்கொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு உட்பட்டதை இவ்வியல் விளக்க முற்படுகிறது.

**இயல் - 2**

**சங்க கால நகரங்கள்**

மருத நிலப்பகுதிகளில் அமைந்த ஊர்கள் நகரங்கள் எனப்பட்டன. சங்க இலக்கியங்களில் நகரம் என்பது வீடு, கோயில், அரண்மனை, இல்லம் போன்ற பொருட்களை உணர்த்தும் சொல்லாகவும், பேரூர், மூதூர், பதி போன்றவை நகரத்தை குறிக்கும் சொல்லாகவும் வந்துள்ளன. இதனை நகரங்கள், தலைநகரங்கள், துறைமுக நகரங்கள் எனப் பாகுபடுத்தி இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

அம்பர், அரையம், அலைவாய், ஆமூர், ஆவிநன்குடி, கடம்பின் பெருவாயில், துறையூர், பரங்குன்றம், மாவிலங்கை, மோகூர், வாகை, ஆகியவை நகரங்களாகத் திகழ்ந்தன. அழுந்தூர், உறையூர், காஞ்சி, கிடங்கில், கோவலூர், செங்கண்மா, தகடூர், துவரை, பாழி, மதுரை, வஞ்சி போன்ற நகரங்கள் தலைநகரங்களாகத் திகழ்ந்தன. எயிற்பட்டினம், காவிரிப்பூம்பட்டினம், கானலம் பெருந்துறை, கொற்கை, நீர்ப்பெயற்று, மருங்கூர்ப்பட்டினம், முதுவெள்ளிலை ஆகியவை கிழக்கு கடற்கரையில் அமைந்த துறைமுகங்களாகவும் தொண்டி, நறவு, பந்தர், மாந்தை, முசிறி போன்றவை மேற்குக் கடற்கரையில் அமைந்த துறைமுகங்களாகவும் விளங்கின.

மேற்கூறிய நகரங்களின் அமைப்பை விளக்குவதோடு வெளிநாட்டாரின் குறிப்புகளைக் கொண்டு ஆராய்ந்தும், இன்றைய நிலையினை எடுத்துரைக்கும் விதமாகவும் இவ்வியல் அமைய உள்ளன.

**இயல் - 3**

**சங்க கால ஊர்கள்**

“எங்கு வரலாறு மௌனம் சாதிக்கத் துவங்குகிறதோ அங்கு ஊர்ப்பெயர்கள் பேசத் தொடங்குகின்றன” என்பது இடப்பெயர்

ஆய்வாளர்களின் கருத்தாகும். இன்றும் சில ஊர்ப்பெயர்கள் தன் பழமையை பறைசாற்றிக் கொண்டுள்ளதை காண முடிகிறது. அவ்வகையில் சங்க காலத்திலேயே இலக்கியங்களின் ஊடாக தலைவியை வர்ணிக்கும் இடங்களிலும், உவகை பயின்று வருகின்ற இடங்களிலும் ஊர்ப்பெயர்கள் குறிப்பிடுகின்றனர் புலவர்கள்.

அகப்பா, அட்டவாயில், அரிமணவாயில் உறத்தூர், அழும்பில், அழுங்கண் மூதூர், அள்ளூர், ஆமூர், ஆய்குடி, ஆர்க்காடு, ஆரேறு, ஆலமுற்றம், ஆவூர்மூலம், ஆலங்கானம், இடையாறு, இருங்குன்றம், இருந்தையூர், இருப்பையூர், ஈர்ந்தை, உம்பர், ஊணூர், எயில், ஏரகம், ஓடுங்காடு, ஓகந்தூர், குடவாயில், குழுமூர், குறிஞ்சி நல்லூர், குறும்பூர், குறுக்கை, குன்றூர், கொடுகூர், கொடுங்கால், சாய்க்காடு, சிறுகுடி, செல்லூர், தலையாறு, திருமருதமுன்துறை, திருவணைக்கரை, தேனூர், நல்லூர், நாலூர், நியமம், நீடூர்(நீழல்), நெடுந்தெரு, நெய்தலங்கானல், நேரி, நேரிவாயில், பருவூர், பவத்திரி, பழமுதிர்ச்சோலை, பாரம், பிசிர், பிடவூர், புறந்தை, போஓர், போந்தை, மணற்குன்றம், மாங்காடு, முதுகுன்றம், முள்ளூர், மையல், வல்லம், வல்லார், வாட்டாறு, வியலூர், விளங்கில், வீரை, வெண்குடை, வெண்ணி, வெண்மணி, வெளியம், வேம்பி, வேளூர் உள்ளிட்ட பல ஊர்கள் சங்கப் பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

இவ்வூர்களின் பண்டைச் சிறப்பு, முக்கியத்துவம், இன்றளவும் இப்பெயருடனே விளங்கி வரும் ஊர்ப் பெயர்கள், பெயர்த் திரிபுகள், அவ்வூர்களின் இன்றை நிலை ஆகியவற்றை இவ்வியல் ஆராயந்து விளக்குகின்றன.

**இயல் - 4**

**அயலக நாடுகளும் ஊர்களும்**

சங்க இலக்கியங்கள் வரலாற்றை உணர்த்துவதற்காக இயற்றப்படவில்லை எனினும் சிறந்த வரலாற்றுப் பெட்டகமாகத் திகழ்கின்றன. தமிழகத்தைப் பற்றிய செய்திகள் மட்டுமல்லாது அயல்நாட்டின் பெயர்களையும் நகரங்கள் மற்றும் மக்கள் இனத்தாரின் பெயர்களையும் அவர்கள் பற்றிய குறிப்புகளையும் கொண்டதாக விளங்குகிறது.

வடநாடு, ஈழம், காழகம், நீர்த்துருத்தி, போன்ற நாடுகளையும் மோரியர்,

நந்தர், வடுகர், கலிங்கர் போன்ற மக்கள் பற்றிய குறிப்புகள் வாயிலாக மௌரியப் பேரரசு, நந்தரின் மகத நாடு, வடுகதேசம், கலிங்க நாடு, ஆகிய நாடுகளையும் கோசர், ஆரியர், யவனர், மிலேச்சர், பற்றிய பதிவுகளும் பாடலிபுரம், வாரணவாசி, தண்டகாரண்யம், சாலியூர் போன்ற அயல்நாடுகளிலிருந்த நகரங்களையும் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இவையும் வரலாற்று ஆதாரங்களாகின்றன.

பழந்தமிழக மக்கள் வாணிகம், போர் காரணமாக அயல்நாட்டினரோடு தொடர்பு கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகிறது. இச்செய்திகளை வெளிநாட்டினர் குறிப்புகளோடு ஒப்பிட்டு இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

முடிவுரை

நான்கு இயல்களின் வழியாக கண்டறியப்பட்ட கருத்துக்களான முடிவுகள் இப்பகுதியில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. பின்னிணைப்பாக துணை புரிந்த நூல்களின் பட்டியல்கள், ஆய்வு தொடர்பான பிற ஆவணங்கள் இணைக்கப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று

## சங்ககால நாடுகள்

பண்டைக் காலத்தில் தமிழகம் குறிஞ்சி முதலிய ஐவகை நிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பிரிவிலும் வாழ்ந்த மக்கள் பல காரணங்களால் பிறநில மக்களோடு போரிட வேண்டிய நிலைமை ஏற்பட்டு வந்தது. அதனால் அவ்வந்நில மக்கள் தம்முள் அறிவாலும் ஆற்றலாலும் சிறந்தவனைத் தம் தலைவனாகக் கொண்டனர். இத்தலைமையே அரசன், அரசு, நாடு ஆகியவை தோற்றம் பெறக் காரணமாக அமைந்தன. குறிஞ்சி நிலத்தில் உணவு தேடி வாழும் வாழ்க்கையான வேட்டையாடுதல் நிலவியது. பின் புன்புல வேளாண்மை உருவானது. முல்லை நிலத்தில் ஆடுமாடுகளை மேய்க்கும் மேய்ச்சல்நில வாழ்க்கையை மையமாகக்கொண்டு அமைந்தது. ஆநிரையைச் சொத்தாகக் கொள்ளும் நிலை உருவானது. இது பிற நிலத்தாரால் கவரப்படின் அவர்தம் வாழ்வு கெடும். எனவே கால்நடைகளைப் பாதுகாக்கவும் முல்லைநில மக்களுக்காகவும் அரசு உருவாக்கப்பட்டது. போருக்குத் தலைமையானவனே மக்களுக்கும் தலைவனாகக் கருதப்பட்டான்.

மலையிலும் காட்டிலும் அலைந்து திரிந்த நிலையிலிருந்து வளர்ச்சி பெற்று ஆற்றங்கரையில் நிலையாக வாழத் தொடங்கிய இடம் மருத நிலமாகும். இங்கு உழவுத்தொழிலின் மூலம் உணவு உற்பத்தி நிகழ்ந்தது. ஆற்றுநீரை நேரடியாகவும் நீர்நிலைகளில் தேக்கி வைத்தும் பயன்படுத்தினர். இதன்மூலம் கிடைத்த செல்வங்களுக்குப் பாதுகாப்பு தேவைப்பட்டது. பிறநிலத்தார் கவராதிருக்கும் பொருட்டு இங்கும் அரசு உருவானது. இவ்வாறு உருவான அரசு நிலைத்த அரசாக உருப்பெற்றது. இவ்வரசுகள் தனது எல்லைகள் இவை எனப் பிரித்துப் பாதுகாத்ததில் நாடுகள் தோற்றம் பெற்றன. முல்லை, மருத நிலங்களில் உருவான அரசு, அரசன், நாடு போன்றவை மற்ற நிலங்களிலும் உருப்பெறத் துவங்கின.

குறிஞ்சி நிலத்திலும் முல்லை நிலத்திலும் உருவான அரசு மலைப்பகுதியிலும் காட்டுப்பகுதியிலும் அ்மைந்ததால் அங்கு உருவான நாடுகளின் சிறு மலைகளையும் காட்டுப் பகுதிகளையும் உள்ளடக்கியே

அமைந்தன. இந்நிலம் கரடுமுரடானது என்பதால் இங்கு வளர்ச்சியின் அளவு குறைவு. எனவே இந்த நாடுகளில் அமைந்த அரசுகள் சிற்றரசுகளாகவே அமைந்தன. முல்லை நிலத்தில் முதலில் அரசு நாடுகள் தோற்றம் பெற்றன என்பது சங்க இலக்கியங்கள்வழி காணமுடிகின்றன என்பது அறிஞர்களின் கருத்தாகும். இதனை கோ, கோன் என்று மன்னனைக் குறிக்கும் சொற்களால் அறியலாம். இது கோவலர் என்னும் சொல்லிலிருந்து உருவானது. மேலும் மன்னர்களின் கையில் உள்ள செங்கோலானது ஆயர்களின் கையில் உள்ள கோலையே[1] அடியொற்றி வந்ததாகும்.

மருத நிலத்தில் அமைந்த அரசு நீர்வளம் மிக்க பகுதியில் அமைந்ததால் செல்வம் நிறைந்ததாகவும் சமவெளிப் பகுதியாகவும் விளங்கியது. இங்கு ஓய்வு நேரம் மிகுதி என்பதால் நாகரிகம், கலை, பண்பாடு ஆகியவற்றில் சிறப்புற்று இப்பகுதி நன்கு வளர்ச்சியடைந்தது. இங்கு உருவான நாடும், அரசும் தன்னை நிலையானதாக அமைத்துக்கொண்டன. இங்கு உற்பத்தி அதிகமானதால் வணிகம் வளரும் பொருட்டு நெய்தல் நிலப்பகுதியையும் மருதநில அரசு தன்னுடன் அரவணைத்துக் கொண்டது. நெய்தல் பகுதியினை வணிக மையமாகவும் மருதப்பகுதியை நாட்டின் நிர்வாகத்திற்காகவும் நிர்ணயித்து நாட்டின் வளர்ச்சியை உயர்நிலைக்குக் கொண்டு சென்றன. பரப்பளவில் பெரியதாகவும் செல்வத்தில் மிகுதியாகவும் விளங்கிய இவையே பேரரசாகத் தன்னை நிலைநிறுத்திக் கொண்டன.

முல்லை, குறிஞ்சி நிலங்களில் உருவான அரசுகளான சிற்றரசுகளின் நாடுகள், மருத நிலத்தில் உருவாக்கம் பெற்று நெய்தல் நிலத்தையும் தன்னுடன் இணைத்துக் கொண்ட பேரரசு நாடுகள் ஆகியவற்றின் வரலாறு, ஆட்சி செய்த மன்னர்கள், நாடுகளின் எல்லைகள், நாட்டின் வளம், மக்கள் மற்றும் பேரரசு நாடுகள் சிற்றரசு நாடுகளை வெல்ல முயன்றமை, நாட்டை விரிவுபடுத்திய விதம் ஆகியவை இவ்வியலில் விரிவாக ஆராயப்படவுள்ளன.

### நாடு என்பதன் சொல்விளக்கம்

நாடு என்னும் சொல் ஆதியில் மனிதர் வாழும் நிலத்தைக் குறிப்பதற்கு வழங்கப்பட்டது. அந்த முறையில் தமிழர் வாழ்ந்த நாடு தமிழ்நாடு என்று பெயர் பெற்றது. அந்நாடு மூன்று பாகமானபோது ஒவ்வொரு

பாகமும் தனித்தனியே நாடு என்னும் பெயருக்கு உரியதாயிற்று. சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என்னும் பெயர்கள் தமிழிலக்கியத்தில் மிகத் தொன்மை வாய்ந்தனவாகும். நாளடைவில் முந்நாடுகளின் உட்பிரிவுகளும் நாடு என்று அழைக்கப்பட்டன. கொங்குநாடு, தொண்டைநாடு முதலியன இதற்குச் சான்றாகும்[2] என நாடுபற்றிய விளக்கத்தினைக் குறிப்பிடுகிறார் பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை. சங்க இலக்கியங்களில் 289 இடங்களில் நாடு என்னும் சொல் பயின்று வருகிறது.

நாடு என்னும் சொல் மிகப்பெரிய நிலப்பகுதியைக் குறித்துப் பின் சிறு நிலப்பரப்புகளைக் குறிக்கும் சொல்லாகவும் அமைந்தது. ஊர்ப்பெயர்களைக் குறிக்கும்போதும் நாடு என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. ஒரு மன்னனின் ஆட்சிக்குட்பட்ட பகுதியினை நாடு என அழைத்தனர். சிற்றூர், ஊர், பேரூர், நகரம் என அழைக்கப்படும் ஊர்களையும் நகரங்களையும் உள்ளடக்கியதாக நாடுகள் விளங்கின. நாடுகள் பல சேர்ந்தது தேயம் என அழைக்கப்பட்டதை,

"நாடும் தேயமும் நனிபல இறந்த" (அகம். 383)

என்னும் பாடலடியானது காட்டுகிறது. சேந்தன் திவாகரம் நாட்டின் பெயர்களை,

"பைதிரம் மண்டிலம் பாண்டில் தேயம்
தண்ணடை சனபதம் அகலுள் சும்மை
தண்டம் ஏணி உலகு என்றிவை நாடே"

எனக் குறிப்பிடுகிறது. "நாடுகள் கூற்றம், கோட்டம் எனவும் பிரிக்கப்பட்டிருந்தன. இவை அரசாங்கத்தின் குறியீட்டுப் பெயர்களாகவும் விளங்கின"[3] என ஆர். ஆளவந்தார் குறிப்பிடுகிறார். சங்க இலக்கியங்களில் முத்தூறு மிழலைக்கூற்றங்களையும் பல்குன்றக் கோட்டத்தையும் காணமுடிகிறது. கூற்றத்தில் சிற்றூர், ஊர் இடம்பெற்றன என்றும் கோட்டத்தில் சிற்றூர், ஊர், மூதூர், பேரூர் இடம் பெற்றன என்றும் கூறுவர்.

**நாட்டின் பிரிவுகள்**

பண்டைய தமிழகம் தொல்காப்பியர் காலத்தில் பன்னிரு நாடுகளாகப் பிரிந்திருந்தது. இந்நாடுகளைத் தொல்காப்பியர்,

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்"

எனக் குறிப்பிடுகிறார். இந்நாடுகள் தென்பாண்டி நாடு, குட்ட நாடு, கற்காநாடு, வேணாடு, பூழிநாடு, பன்றிநாடு, அருவாநாடு,. அருவாவடதலைநாடு, சீதநாடு, மலாடு, புனல்நாடு முதலியவையாகும். இந்நாடுகளைச் சங்க இலக்கியங்களில் புலவர்கள் குறித்துள்ளனர். ஆனால் இறையனார் களவியலுரைகாரர் ஏழுவகை நாடுகளைக் குறிப்பிடுகின்றனர். அவை 1. ஏழ்தெங்கநாடு, 2. ஏழ்மதுரை நாடு 3. ஏழ்முன்பாலை நாடு 4. ஏழ்பின்பாலை நாடு, 5. ஏழ்குன்ற நாடு 6. ஏழ்குணகாரை நாடு 7. ஏழ்குறும்பனை நாடு என்பவையாகும். இந்நாடுகளில் ஒரு நாடு அல்லது நாட்டின் பெயரேனும் சங்க இலக்கியங்களில் காண முடியவில்லை. எனவே இவை உரையாசிரியர்கள் வாழ்ந்த காலகட்டத்தில் தோன்றிய பிரிவுகள் எனக் கருதலாம்.

**நாட்டை ஆளும் மன்னர்களும் வேந்தர்களும்**

பண்டைய தமிழகத்திலிருந்த நாடுகளை ஆட்சி புரிந்தோர் மன்னர், அரசர், காவலர், இறை, வேந்தர், கோன் எனப் பலவாறு அழைக்கப்பட்டதைக் காணமுடிகின்றது. இவற்றில் காவலன், இறை, கோன் ஆகிய சொற்கள் மிகக் குறைந்த அளவே பயன்படுத்தப்பட்டுள்ளன. அரசன் என்னும் சொல்லாட்சியானது ஓரளவு பயன்படுத்தப்படுகிறது. இச்சொற்களைவிட மன்னன், வேந்தன் என்னும் சொற்கள் அதிக அளவில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**மன்னன்**

மன் என்னும் சொல்லுக்கு நிலைபேறுடையவன் என்று பொருள். சமூக நலத்திற்கு அரசாட்சியை நிலையாக ஏற்படுத்துதல் இன்றியமையாதது என்பதைப் பழந்தமிழர்கள் உணர்ந்திருந்தனர். எனவே ஆட்சித் தலைவனை மன்னன் என அழைத்தனர். இச்சொல்லானது குறுநில மன்னர்களைக் குறிப்பதற்கே பெரும்பான்மையாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இதனை,

"சீறூர் மன்னன்"[4]

"ஓரெயில் மன்னன்"[5]

"தொல்குடி மன்னன்"[6]

"தண்ணடை மன்னர்"[7]

"குறுநில மன்னன்"[8]

என்னும் தொடர்களால் அறியலாம். மேலும் சீறூர்த் தலைவன், தொல்குடியைச் சேர்ந்த ஆட்சித் தலைவனையும் மன்னன் என்றே குறித்துள்ளதையும் காணமுடிகிறது.

**வேந்தன்**

"வேந்தன் என்னும் பெயர் வேய்ந்தோன் என்பதன் மரூஉ ஆகும். வேய்தலாவது முடியணிதல், முடியணியும் முத்தமிழரசரையும் முடியுடை மூவேந்தர் எனக் கூறுவது மரபு"[9] என்பர் தேவநேயப் பாவாணர். வேந்தன் என்னும் சொல் சேர, சோழ, பாண்டியராகிய முப்பேரரசர்களை மட்டுமே குறிக்கப் பயன்படுத்தப்பட்டிருப்பதைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகின்றது. முடியணியும் மரபுடைய வேந்தர்களையே வேந்தன், முடியை வேய்ந்தோன் என்னும் பொருளிலேயே பயன்படுத்தப்பட்டிருப்பதை,

"முடிகெழு வேந்தர்"[10]

"முடியுடை வேந்தர்"[11]

என்னும் தொடர்கள் உணர்த்துகின்றன. வேந்தன் என்றழைக்கும் மரபு புதிதாகத் தோன்றிய பேரரசர்களைக் குறித்தது என்பதும் மன்னன் என்னும் வழக்கு தொன்மை வாய்ந்தது என்பதும்

"வம்ப வேந்தர்"[12]

என்னும் புறநானூற்றுப் பாடல் தொடர்வழி அறியலாகிறது. வம்ப என்பதற்குப் புதியதாய் வந்த அல்லது புதியதாக உருவான என்னும் பொருளும் உண்டு. எனவே வேந்தர் மரபு சிற்றரசர்களாய் விளங்கிய குறுநில மன்னன் மரபிற்குப்பின் உருவானது என்பதை உணரமுடிகிறது. மருதநிலப் பகுதியை ஆட்சி செய்யதால் மருதநிலத் தலைவன் என்பதன் அடிப்படையிலும் தங்களை வேந்தன் எனக் குறிப்பிட்டுக் கொண்டதை,

"வேந்தன் மேய தீம்புனல் உலகம்" (தொல்.பொருள். அகத். 5)

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம்.

**நாட்டின் பாதுகாப்பு அரண்கள்**

ஒரு நாட்டிற்குள்ளே மற்ற பகைநாடுகள் அல்லது பகைநாட்டு வீரர்கள் எளிதில் நுழைய முடியாதவாறு பாதுகாப்பு அரண்களை அமைத்தனர் பழந்தமிழர். நாட்டின் பாதுகாப்பு அரண்களாகக் காவற்காடு, சிறிய அடர்ந்த

மலை, மதில், அகழி, படை ஆகியவை விளங்கின. இந்த அரண்களை நீரரண், நிலவரண், மதிலரண், காட்டரண், மலையரண் என வகைப்படுத்துவர்.[13] நீர் அரணாவது இயற்கையாக மதிற்புறத்தே அமைந்த ஆறு, கடல் போன்றவையும் அகழியும் ஆகும். இவை செயற்கையாகவும் அமைக்கப்படும். நாட்டிலுள்ள மேடுபள்ளமே நிலவரணாக விளங்கியது. உணவுப் பொருட்களைப் பயிர் செய்யும் வகையில் மதிலின் உட்புறமாக விடப்படும் தண்ணடை நிலமும் நிலஅரண் எனப்படும். அடர்ந்த காடுகள் பகைவர் உள்நுழையாதவாறும் பகைவர்க்குத் தென்படாது படை மறவர்கள் மறைந்து இருக்கக்கூடிய வகையிலும் அமைந்திருக்கும். இது காட்டரண் ஆகும். இதுபோல் மலைகளும் பகைவர்களை உள்நுழைய விடாது உயர்ந்ததாக அமைந்ததால் மலையரண் எனப்பட்டது.

**மதில்**

மதில், இஞ்சி, ஞாயில், எயில், அரண், புரிசை, சுற்று, வரைப்பு எனப் பலவாறு பெயர்பெறுகிறது. இவை ஒவ்வொன்றும் சிறுசிறு வேறுபாடுகளுடன் காணப்படும். மதிலில் பல வகையுண்டு. அகமதில், இடைமதில், புறமதில் என இருக்கும் இடத்தாலும் அரைமண்மதில், சுடுமண்மதில், கருங்கல் மதில் என அமைக்கப்பட்ட பொருளாலும் ஆறு வகைப்படும். மதிலின்மேல் பகைவர் முன்னேறி வராதவாறு தடுப்பதற்காகப் பயன்படுத்தும் பொறிகளை ஆங்காங்கு வைத்திருப்பர். யவனர்களும் மதில் காவல் புரிந்தமையைச் சிலம்பு கூறும். எனவே இம்மதில்கள் நாட்டின் அரணாக விளங்கின. மதிலின் பத்தொன்பது பெயரைத் தொகுத்துக் கூறும் சேந்தன் திவாகரம் (ப.118) நெடுமதில், நீள்மதில் எனும் தொடர்கள் மதில் உயரமாகவும் நீளமாகவும் அமைக்கப்பட்டதை உணர்த்துகின்றன. மேலும் காவல் மிகுந்திருந்ததனைக் கடிமதில் (அகம், 24, புறம் 31) எனும் தொடர் காட்டுகிறது. பரந்து அகன்ற உயர்ந்த கோபுர வாயில்களையும் நெடிய மதிலில் வேல், வில், அம்பு முதலிய ஆயுதங்களை உமிழுகின்ற உறுப்புகள் காணப்பட்டதையும்,

> "உயர்ந்தோங்கிய நிரைப் புதவின்
> நெடுமதில் நிரை ஞாயில்
> அம்பு உமிழ் அயில்"[14]

என்னும் மதுரைக்காஞ்சியின் பாடலடிகள் காட்டுகின்றன.

### அகழி

அகழிகள் மிக ஆழத்துடன் இருக்கும். தாவிக் குதிக்கும் குதிரைகளும் தாண்டுவதற்குத் தயங்கும் அகலமும் ஆழமும் கொண்டிருக்கும். இவ்வாழ்ந்த அகழிகளில் முதலைகள் நிறைந்திருக்கும். இங்கு வீழ்ந்தவர் யாராயினும் பிழைத்தல் அரிது. எனவே இது நாட்டிற்குச் சிறந்த அரணாக விளங்கியது. இயற்கையாக ஆறு போன்ற அரண் இல்லாவிடின் செயற்கையாகவும் நாட்டின் பாதுகாப்பு கருதி அமைப்பர். இதனை அகழி, கிடங்கு, ஓடை, பரிகை, அகழ், கேணி எனும் பெயர்களிலும் அழைப்பர்.

"நிலவரை இறந்த குண்டுகண் அகழி"[15]

"குண்டுகண் அகழி"[16]

எனும் பாடலடிகள் அகழிகளின் பரப்பையும் மிக்க ஆழத்தையும் குறிக்கின்றன.

### காவற்காடு

இது குறுங்காடு, குறுமிளை எனவும் அழைக்கப்பட்டது. நன்கு திரட்சியான மரங்கள் அடர்ந்தும் ஒளிபுகாத வண்ணமாகவும் உயர்ந்தும் காணப்படும். எனவே இதனைத் தாண்டிப் பகைவர் நுழைவது அரிதான செயலாகையால் காவற்காடு நாட்டிற்கான அரணாக விளங்கியது. இது அகழியைச் சூழ்ந்தும் காணப்படும் தன்மையது என்பர்.

"வில் ஈண்டுகுறும்பின் வல்லத்துப் புறமிளை"[17]

அகநானூற்றின் இப்பாடலடி காவற்காட்டின் தன்மையை உணர்த்தி நிற்கிறது.

### மலை

மலையானது மன்னர்களின் ஆட்சிப்பகுதியாக மட்டுமல்லாது சிறந்த அரணாகவும் விளங்கியது. மலையே அரணாகவும் மலைமீது அரணமைத்து மலைக்குப் பாதுகாப்பு செய்யப்பட்டதைப் புறப்பாடல்கள் கூறும். ஓங்கி உயர்ந்த மலைகள் நெடிய உச்சியினைக் கொண்டதாகவும் அருவி, காட்டாறு, அகில், பலா, ஆரம், சந்தனம் முதலிய பல வளங்களைக் கொண்டதாகவும் விளங்கியது. சிற்றரசர்களின் தலைசிறந்த அரணாக மலைகளே இருந்தன எனச் சங்கப் பாடல்கள் சான்று பகர்கின்றன.

### நாடுகளுக்கிடையே நடைபெற்ற போருக்கான காரணங்கள்

மனிதன் தன் ஆரம்ப காலத்திலிருந்தே போர்க்குணம் நிறைந்தவனாகவே வாழ்ந்துள்ளான். சங்க காலத்திலும் போர்கள் மலிந்து காணப்படுகின்றன. இப்போர்கள் சமுதாயத்தின் வளர்ச்சிக்கு ஏற்பவும் தலைமைகளின் தன்மைக்கு ஏற்ப மாறுபட்டதையும் காணமுடிகின்றது. உதாரணமாக நிரைகவர்தல், நிரைமீட்டல் போர்முறைகள் இனக்குழு சமுதாயத்திலும் நிலங்கவர்தல், மதிலழித்தல், விளைநிலங்களை அழித்தல் போன்ற போர்முறைகள் வேந்தர் சமுதாயம் அல்லது முடியாட்சி முறையிலும் காணப்படுகின்றன. சங்க காலத்தில் போரிட்டு வெல்வது என்பது சிறந்த மறமாகக் கருதப்பட்டது.

மா. இராசமாணிக்கனார், மாணிக்கவாசகம் பிள்ளை, சு. வித்தியானந்தம், தேவநேயப் பாவாணர், பொற்கோ போன்ற பல தமிழறிஞர்கள் போர்க்குரிய காரணங்களைப் பலவாறு தொகுத்துக் கூறுகின்றனர். பகை காரணமாகவும் நிரைகவர்தல், நிரை மீட்டல் காரணமாகவும் சிற்றரசர்களிடையே போர் நடைபெற்றுள்ளது. ஆனால் தன் நாட்டைப் பேரரசு நாடாக அமைக்கும் பேராசை, திறை பெறும் நாட்டம், மகள் மறுத்தல் நிலை போன்ற காரணங்களால் பேரரசர்களிடையே போர்கள் நடைபெற்றன என்பர். நிலங்கவர்வதே வேந்தர்களின் முக்கிய நோக்கமாக இருந்ததாகக் கூறுவர். போர் நடைபெற்ற இடங்கள் 'பறந்தலை' எனப் பெயர் பெறும்.

#### படை

அரசுகள் உருவான சங்ககாலச் சூழலில் படை என்பது அரசின் அடிப்படையான அங்கமாக அமைந்தது. இதுவே முதன்மையானதாகவும் தலைமையானதாகவும் விளங்கியது. இதன் காரணமாகவே தொல்காப்பியரும் அரசர்க்கு உரியவற்றைக் கூறுமிடத்தே படையை முதலில் வைத்துக் கூறியதை மரபியல் (72) நூற்பாவழி அறியலாம். அரசர்களுக்குரிய பீடுகெழு செல்வமாக விளங்குவது படை எனப் பதிற்றுப்பத்து (51) கூறும். திருவள்ளுவரும் இறைமாட்சியின் இன்றியமையாத கூறுகளைக் கூறுமிடத்தே படையை முன்னிலைப்படுத்துகிறார்.[18] ஒரு நாட்டின் பாதுகாப்பிற்குப்

படையின் பயன்பாடு மிக அவசியமான ஒன்று. இப்படை இருந்தால் நாடு இல்லாதவனும் நாட்டைக் கைப்பற்றலாம். படை இல்லாவிடில் நாட்டின் அரசனும் நாட்டை இழக்க நேரிடும். சங்கப் பாடல்களில் படை குறித்த செய்திகள் பரவலாய் இடம் பெற்றுள்ளன. படை என்னும் சொல் ஏறத்தாழ 119 இடங்களில் வந்துள்ளது.

படையினை நிலையான படை, நிலையற்ற படை என இருவகையாகப் பிரிக்கலாம். நிலையான படை என்பது எக்காலத்தும் பயிற்சி பெற்றுக்கொண்டு போரில் ஈடுபடும் தன்மையது. இதனைப் பேரரசர்களான வேந்தர் மரபில் காண முடிகிறது. மூவேந்தர்களையும் பாடும் புலவர்கள் பெரிய படைகளை உடையவன், சினம்மிகு தானையை உடையவன் எனப் பலவாறு பாராட்டிப் பாடியுள்ளதை,

> "முரசு முழங்கு தானை மூவர்"[19]
> "தெறலருந் தானைப் பொறையன்"[20]
> "சினம்மிகு தானை வானவன்"[21]

முதலான பாடலடிகள் காட்டுகின்றன. இப்படைகள் நிலைத்த படைகளாகத் திகழ்ந்தன. ஆனால் சிற்றரசர்களிடையே மிகப்பெரிய நிலைத்த படைகள் இருந்தமைக்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் மிகக் குறைவு. ஒருசில சிற்றரசர்கள், மன்னர்களிடம் மட்டுமே சிறிய படை இருந்தது. வேளாண்மை, ஆநிரை மேய்த்தல் போன்ற பிற தொழில்களில் ஈடுபட்ட மக்கள் போர்க்காலங்களில் தற்காலிகப் படைவீரர்களாகப் பணியாற்றினர். இவர்களுக்குப் பயிற்சி குறைவு. எனவே பேரரசர்களிடம் குறுநில மன்னர்கள் தோல்வியடைய இதுவும் காரணமாக அமைந்தது. இதுபோன்ற நிலையற்ற தற்காலிகப் படைகள் சிற்றரசர்களிடையே காணப்பட்டன.

சங்க காலத்தில் வேந்தர்களிடையே யானை, குதிரை, தேர், காலாள் ஆகிய நால்வகைப் படைகள் இருந்தன. தொல்காப்பியர் யானை, குதிரை, காலாள் என மூவகைப் படைகளையே குறிக்கிறார். குதிரையின்றித் தேர்ப்படை அமையாதாகையால் தேர்ப்படையைக் குறிக்கவில்லை என விளக்கம் கூறுவர் உரையாசிரியர்கள். இந்நான்கு படைகளும் வேந்தர்களிடம் மிகுதியாக இருந்தன. அதுபோல சிற்றரசர்களிடையே யானைப்படை

மிகுதியாகக் காணப்படுகின்றது. குதிரைப்படை இருந்ததற்கான சான்றுகள் குறைவு. காரி, ஓரி போன்றோர் குதிரைகளை அவர்கள் மட்டும் பயன்படுத்தினர். ஆனால் படை இல்லை. ஆய் அண்டிரனுடைய நவிரமலையில் யானைகள் மிகுதியாக இருந்தன. அவன் யானைப் படையை வைத்திருந்தான் என்பதனைப் புறப்பாடல்வழி அறிய முடிகிறது. இந்நால்வகைப் படை மட்டுமல்லாது 'கடற்படை' வேந்தர்களிடையே காணப்பட்டது. கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் கடற்போர் மேற்கொண்டு வென்றதைப் பரணர் பாடுகிறார்.[22] கரிகால் வளவனின் முன்னோர் கடலில் சென்று போர் புரிந்ததை,

"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி
வளிதொழில் ஆண்ட உரவோன் மருக"[23]

எனும் புறநானூற்றுப் பாடல் புகழ்கின்றது. இதன்மூலம் கடற்படை இருந்ததை அறிய முடிகிறது. சங்க இலக்கியங்களில் 'கிடுகுப்படை' என்றொரு படைவகை குறிப்பிடப்படுகிறது. இதனை ப∴றோற்றொழுதி, தோல்புடை எனவும் வழங்கினர். இப்படையினர் யானைப்படையினூடாக இடையில் செறிந்திருப்பர் என அரங்க. இராமலிங்கம் கூறுகிறார். சங்க காலத்தே யானை, குதிரை, தேர், காலாள் படைகள் மட்டுமல்லாது கடற்படை, கிடுகுப்படை போன்ற படைகளும் இருந்துள்ளமையை அறிய முடிகிறது.

**நாட்டின் வருவாய்**

நிதியின்றி நாட்டின் நிர்வாகத்தை நடத்துவது என்பது அரிதாகும். எனவே நாட்டிற்கான வருமானம் பல வழிகளில் திரட்டப்பட்டது. மன்னர்கள் தம் குடிகளிடமிருந்து நிலவரி, சுங்கவரி முதலான வரிகளைப் பெற்றதைச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. இவ்விரு வருவாய்களுடன் சிற்றரசர்கள் செலுத்திய திறையும் அரசாங்கத்தின் வருவாயில் முக்கிய இடம் வகித்தது. மன்னர்கள் போர்புரிந்து ஒரு நாட்டை வென்றால் பெரும்பாலும் அந்நாட்டிலுள்ள செல்வங்களைக் கைப்பற்றுவது வழக்கமாக இருந்தது. இவ்வாறு கைப்பற்றப்பட்ட செல்வங்கள் வெற்றி பெற்ற நாட்டின் வருவாயாக அமைந்தன. பொருட்களை ஓர் இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்துச் செல்லும்போதும் வரி வசூலிக்கப்பட்டது. இதுபோன்ற வரிகளை மக்கள் பொருட்களாகவோ பணமாகவோ செலுத்தினர். மன்னர்கள்

அதிகமாக வரி வாங்கும்போது புலவர்கள் மன்னரை நெறிப்படுத்தியதைப் புறம் (184) காட்டுகிறது. நாட்டின் வருவாயான வரியினைத் திருவள்ளுவர்,

“உறுபொருளும் உல்கு பொருளுந்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்”[24]

என்னும் குறளில் உறுபொருள், உல்குபொருள், தெறுபொருள் ஆகிய மூன்றும் வேந்தனுக்குரியவையாகக் குறிப்பிடுகிறார்.

## நிலவரி

சங்க காலத்தில் நிலத்திற்கு வாங்கப்பட்ட வரி ‘புரவுவரி’ என வழங்கப்பட்டது. புரவு எனும் சொல்லே வரி எனும் பொருளிலும் ஆளப்பட்டது. நிலவரியானது ஆறில் ஒரு பங்காக வசூலிக்கப்பட்டது என அறிஞர் கூறுவர். ஆனால் சங்க இலக்கியத்தில் இதற்கான சான்றில்லை. அக்கால மன்னர்கள் மிகுதியான வரி வசூலிப்பதைத் தவறாகக் கருதினர். முறைமைக்கு மேலான வரி பெறும் வேந்தனை வலிமையில்லாச் சிறியோன் எனவும் அவனுக்கு அரசுரிமை பாரமாகவே அமையும் எனவும் கூறுகிறது.

“குடிபுர விரக்குங் கூரி லாண்மை
சிறியோன் பெறினது சிறந்தன்று மன்”[25]

இப்புறப்பாட்டால் உணரலாம். எனினும் புரவு வரியானது மக்களுக்குச் செலுத்த முடியாத அளவு கடினமாகவும் இருந்ததைப் ‘புரவிற்கு ஆற்றாச் சீறூர்” (புறம். 330) எனும் பாடலடி காட்டுகிறது.

## சுங்கவரி

நாட்டிற்கு வருவாயாகச் சுங்க வரியும் அமைந்தது. இதனை ‘உல்கு’ எனவும் அழைத்தனர். இவ்வரி ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பொருள்களைக் கொண்டு செல்லும்போதும் வெளிநாட்டு, உள்நாட்டுப் பொருள்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்யும்போதும் விதிக்கப்பட்டது. மிளகு மூட்டைகளை ஏற்றிச்செல்ல உல்குவரி வசூலிக்கப்பட்டதை,

“கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்”[26]

என்னும் பெரும்பாணாற்றுப்படையின் இப்பாடலடிகள் கூறுகின்றன.

வெண்மையான பூங்கொத்துக்களையும் மடல்நிறைந்த தாழைகளையும் கொண்ட காவிரிப்பூம்பட்டினத்தின் கடற்கரையில் சுங்கம் பெற்றனர். சுங்கப்

பொருள்களைக் கவராத வண்ணம் காவலிருந்தனர். இச்சுங்கத்தை நாள்முழுக்கச் சோர்வின்றி வாங்கியோர் இரவில் கடைசி யாமத்தில் உறக்க மயக்கத்தால் சிறிது நேரம் கண் மூடுவர். இதனை

"வாலிணர் மடற்றாழை
வேலாழி வியன் தெருவின்
நல்லிறைவன் பொருள் காக்கும்
தொல்லிசைத் தொழில் மாக்கள்
காய்சினத்த கதிர்ச் செல்வன்
தேர்பூண்ட மாஅபோல
வைகல்தொறும் அசைவின்றி
உல்குசெய"[27]

என வரும் பட்டினப்பாலைப் பாடலடிகள் உணர்த்தும். இவ்வாறு வாங்கப்பட்ட நிலவரி, சுங்கவரி முதலானவை மிக அரிதாக வரிவிலக்கு செய்யப்பட்டன.

**நாவலந் தண்பொழில்**

பண்டைய காலத்தில் இந்தியா முழுமையும் நாவலந் தண்பொழில், நாவலந்தீவு, சம்புத்தீவு எனக் குறிக்கப்பட்டது. நவகண்டம் என்றும் வழங்கப்பட்டது. "ஆசியாவின் நடு மேட்டுநிலத்துக்குத் தெற்கிலுள்ள மாநில முழுவதும் முன்னாட்களில் சம்புத்தீவு அல்லது நாவலந்தீவு என்று அழைக்கப்பட்டது. நாவல் மரங்கள் மிகுதியாக இருந்தன என்பதன் காரணமாகவே இப்பெயர் ஏற்பட்டிருத்தல் கூடும்"[28] என வி. கனகசபை குறிப்பிடுகிறார். நாவலந்தீவு என்பது லெமூரியா எனப்படும் குமரிக்கண்டத்தையும் உள்ளடக்கியது என்ற புரிதலும் நிலவுகிறது. இது வடக்கே இமயமலை தெற்கே குமரிமுனை, கிழக்கு மேற்கில் இருபெருங் கடல் ஆகியவற்றை எல்லைகளாகக் கொண்டிருந்தது. இதனை,

"தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லை"[29]

என்னும் மதுரைக்காஞ்சியின் இப்பாடலடிகள் இதனைக் காட்டுகின்றன. மேலும் இது அகன்ற பல நாடுகளைக் கொண்டு விளங்கியது என்பதை "வியன்கண் முதுபொழில் மண்டில்" (மதுரைக். 90) என்னும் தொடர் உணர்த்தும். சங்க காலத்தில் ஆட்சி செய்த மன்னர்களும் வேந்தர்களும் இந்நாவலந்தீவு முழுவதும் ஆட்சி செய்ய வேண்டும் என்றும் தனது நாடு

நாவலந்தீவு உள்ளடக்கிய நிலப்பகுதியாக இருக்க வேண்டும் என்றும் ஆர்வம் கொண்டிருந்தனர். புலவர்களும் மன்னர்களை வாழ்த்தும்பொழுது நாவலம் பொழில் முழுவதும் புகழோடு ஆட்சி செய்வாயாக என வாழ்த்துவர். இதனைச் சங்கப்பாக்கள் பலவற்றில் காணமுடிகின்றது.

**தமிழகம்**

தமிழ்மொழி பேசும் மக்கள் வாழும் பகுதி தமிழகம். பண்டைய தமிழகத்தின் எல்லையைத் தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், வெளிநாட்டார் குறிப்புகள் போன்றவற்றின் மூலம் அறியமுடிகிறது. பழந்தமிழகமானது வடக்கே வேங்கட மலையினையும் தெற்கே குமரிமுனையையும் கிழக்கும் மேற்கும் பெருங்கடல்களையும் எல்லையாகக்கொண்டு விளங்கியதை,

> "வடவேங்கடந் தென்குமரி
> ஆயிடைத்
> தமிழ்கூறும் நல்லுலகத்து" (தொல். பாயிரம்)
>
> "குமரி வேங்கடங் குணகுட கடலா
> மண்டிணி மடங்கிற் தண்டமிழ் வரைப்பின்"
> (சிலம்பு.நூற்கட்டுரை)

எனத் தொல்காப்பியமும் சிலம்பும் குறிப்பிடுகின்றன. இது மட்டுமல்லாது காரிகிழார், குறுங்கோழியூர் கிழார் போன்ற புலவர்கள் வட எல்லையான நெடுவரை என்பதை இமயமாக வைத்துப் பாடியுள்ளதை,

> "தென்குமரி வடபெருங்கல்
> குணகுட கடலா வெல்லை"[30]

என்னும் புறநானூற்றுப் பாடல்வழி அறியலாம். ஆனால் வெளிநாட்டு அறிஞர்களான தாலமி, துளுநாட்டில் டமிரிகே தொடங்குவதாகக் கூறுவார். டமிரிகே என்பது திராவிடம் எனும் தமிழகமாகும். செங்கடற் பயண நூலாசிரியர் "விந்திய மலைக்குத் தெற்கிலுள்ள பகுதி தட்சிணாபதம் அல்லது தென்னாடு என்றும் அதன் தென்கோடியில் தமிழர் வாழும் இடம் தமிழகம் என அழைக்கப்பெற்றது"[31] எனவும் குறிப்பிடுகிறார். இக்குறிப்புகளை நோக்க தமிழகத்தின் வடஎல்லை வேங்கடமலையாகும். இம்மலையினை எல்லையாகக் கொண்டு இந்தியாவினைக் கிழக்குமேற்காக நேர்க்கோடு

வரைந்தால் அதன் தென்பகுதி முழுவதும் உள்ள தென்னிந்தியப் பகுதி பண்டைக் காலத்தில் தமிழகமாக விளங்கியதை உணர முடியும்.

சங்க காலத் தமிழகம் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு எனும் முப்பெரு நாடுகளையும் பறம்புநாடு, கொங்குநாடு, குடநாடு, குட்டநாடு, பூழிநாடு, கொண்கான்நாடு, எருமை நாடு, புன்னாடு, கட்டிநாடு, தொண்டைநாடு, ஆய்நாடு, மலாடு, தகடூர்நாடு, விச்சிநாடு, நாஞ்சில்நாடு, கண்டீரநாடு, பொதினிநாடு, மிளைநாடு, தோன்றிமலை முதலான சிறுநாடுகளையும் கொண்டதாகத் திகழ்ந்தது.

**பேரரசு நாடுகள்**

நீர்வளம் நிறைந்து விளங்குவது மருதநிலம். ஆற்றங்கரையோரங்களில் மருத நிலப்பகுதிகளைக் கொண்ட அரசுகள், நாடுகள் பேரரசு நாடுகளாக அமைந்தன. இவை நெய்தல் நிலத்தையும் இணைத்துக் கொண்டன. இந்நெய்தல் வாணிகத்திற்கு ஏற்றதாக அமைந்தது. இங்குத் துறைமுகங்கள் ஏற்படுத்தப்பட்டன. மருத நிலத்தில் உழவை மேற்கொண்டு உணவை உற்பத்தி செய்தனர் ஒரு பகுதியினர். இவர்கள் நாட்டுக்கு வேண்டிய உணவை விளைவித்ததால் பெரும்பான்மையோர் மற்ற வேலைகளில் ஈடுபட முடிந்தது. இதுவே நாட்டின் பெரும்பான்மை ஆண்மக்கள் போர்களில் ஈடுபட ஏதுவாக அமைந்தது. மருத நிலங்களில் அமைந்த அரசு போர்களில் ஈடுபட்டுத் தன் நாட்டின் எல்லையை விரிவுபடுத்தி நிலையானதாக அமைத்துக் கொண்டது.

இவை குறிஞ்சி, முல்லை நிலங்களில் அமைந்த அரசுகளைத் தன்கீழ்க் கொண்டு வந்தன. அங்கு ஆட்சி செய்த சிற்றரசுகளை அழித்தும், தன்னுடைய ஆட்சியைச் செலுத்தியும் வந்தன. இவ்வாறு அமைந்த தமிழகத்தின் நிலையான பேரரசு நாடுகளாகச் சேர, சோழ, பாண்டிய நாடுகள் திகழ்ந்தன. சங்ககாலத் தொடக்கத்தில் புதிதாக உருவாக்கம் பெற்ற பேரரசு நாடுகள் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே நிலைபெற்றுவிட்டதை,

"வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்" (தொல். பொருள். 79)

எனும் நூற்பா மூலம் குறிப்பிடுகிறார். இப்பேரரசுகள் தங்களை அடையாளப்படுத்தும் பொருட்டுத் தம் குடிக்கெனக் கொடி, குடை, பூ, காவல்மரம், முரசு, படை, முடி போன்றவற்றைக் கொண்டிருந்தனர். இதனை,

"படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடைநவில் புரவியுங் களிறுந் தேறும
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய" (தொல். மரபு. 72)

என்னும் தொல்காப்பிய நூற்பா உணர்த்துகின்றது. இந்நூற்பாவானது அரசர்க்குரிய என்று கூறுவது வேந்தர்களையே குறிக்கும். இத்தன்மைகளைக் கொண்டவர்களாகத் தமிழகத்தில் சேர, சோழ, பாண்டியர் திகழ்ந்தனர். இவர்களை மூவேந்தர் என இணைத்தே கூறுவர்.

## மூவேந்தர் மரபு

சங்க காலத்தில் தமிழ்நாட்டில் சேர, சோழ, பாண்டியர் ஆட்சி நிலவியது. இம்மூவேந்தர்களும் பல சிற்றரசர்களுடன் போராடி அவர்களைத் தன் ஆட்சிக்கு உட்படுத்தினர். இதற்காகவே அதிகநேரம் செலவிட்டனர். சேர, சோழ, பாண்டிய மன்னர்களை இணைத்து மூவேந்தர் என்றே அழைத்தனர். இம்மரபு மிகத் தொன்மையானதாகக் கருதப்படுகிறது. இவர்கள் பெயர் சுட்டப்படாமல் பொதுவாக இவர்தம் மாலையினை

"போந்தை வேம்பே ஆரென வரூஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும்"
(தொல்.பொருள்.63)

எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இவர்கள் மிக்க புகழுடன் விளங்கினர். இந்நாடுகளும் சிறந்து விளங்கின. திருவள்ளுவரின்,

"வழங்குவது உள்வீழ்ந்த கண்ணும் பழங்குடி
பண்பின் தலைப்பிரிதல் இன்று"[32]

என்னும் குறளுக்குப் பரிமேலழகர் உரை கூறுகையில் 'படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வரும் குடிகள் மூவேந்தரும்' எனக் கூறிச் செல்கிறார். சங்கப் பாடல்களும் சேர, சோழ, பாண்டியரை மூவர் எனக் குறிப்பிடுகின்றன.

"தமிழ்கெழு மூவர்" (அகம். 31)
"முடிகெழு வேந்தர் மூவர்" (சிலம்பு. 23)
"முரசு முழங்கு தானை மூவர்" (பெரும்பாண். 33)

என்னும் பாடல் வரிகளும் சான்று பகர்கின்றன. சேர, சோழ, பாண்டிய நாடுகளைப் புறநானூறு "பொதுமை சுட்டிய மூவருலகம்" எனக் குறிப்பிடுகிறது.

**சேரநாடு**

சங்க இலக்கியங்களில் சேரநாடு 'குடபுலம்' என்று வழங்கப்படுகிறது. இந்நாடு மலைகள் நிறைந்து விளங்கியதால் மலைநாடு எனவும் வழங்கப்பட்டது. "சேரல் என்றால் மலை அடுக்கு" என்று பொருள். சேர் - சேர்த்து, பிணை, அடுக்குகள், அடுத்தடுத்துப் பிணைந்து நெருங்கி இருப்பதற்குச் சேரல் என்று பெயர். மேற்குத் தொடர்ச்சி மலையானது பல அடுக்குகளைக் கொண்டது. அம்மலையை உட்கொண்டு மலைக்கும் கடலுக்கும் இடையில் உள்ள நாடு முழுவதும் சேரல்நாடு எனப்படும். அதனால் அந்த நாட்டு அரசர்களுக்குச் சேரலர் என்ற பெயர் அமைந்தது"[33] என்பர் அ. சிதம்பரனார். கடல் சேர்ந்த நிலம் சேர்ப்பு என்றும் அந்நிலத்திருந்த தலைவர்களைச் சேர்ப்பர் என்றும் கூறுவது வழக்கு. எனவே சேர்ப்பு நாடே பின்னர் சேரநாடு என வழங்கப்பட்டது என்றும் கூறுவர். இச்சேர்ப்பர் பின் சேரர், சேரலர் எனவாகிப் பிற்காலத்தே கேரளர் என அழைக்கப்பட்டனர். மலைகளும் கடலும் சூழ்ந்த காரணத்தால் 'குடபுலம்' சேரநாடு எனப் பெயர் பெற்றது.

**சேரநாட்டின் தொன்மை**

மூவேந்தர்களுள் சேரரே மிகத் தொன்மையானவர்களாகவும் சிறப்பு மிக்கவர்களாகவும் விளங்கினர். சேரரின் குடிப்பழமையைச் சுட்டுவதற்கு வில்லிபாரதம் "இவன் செந்தழலோன் மரபாகி யீரேழுலகும் புகழ்ச் சேரன்" எனக் குறிப்பிடுகிறது. சங்கப் பாடல்கள் வானவர் எனக் குறிப்பிடுவது சேரர்களைத் தெய்வத்தோடு தொடர்புபடுத்துவதாக அமைகிறது. அசோகர் கல்வெட்டுகளில் சேரர் 'கேரளபுத்திரர்' எனக் குறிப்பிடப்படுகின்றனர். இது 'சேரளபுத்திரர்' எனப் படிக்குமாறும் அமைந்திருப்பதாக ஔவை சு. துரைசாமிப்பிள்ளை[34] கூறுவார். செல்யூகஸ் நிகேடர் விடுத்த கிரேக்கத் தூதுவரான மெகஸ்தனிஸ் சேரர்களைச் 'சேர்மா' (Charmae) என்று குறித்துச் செல்கிறார். பிளினி என்பார் சேர வேந்தரைக் 'கேளோபோத்திராஸ்' எனக் குறிக்கிறார். மற்றொரு கிரேக்கப் பயணியான தாலமி எழுதியுள்ள குறிப்பில்

'கேரளபோத்திராஸ்' (Carelabothras) என எழுதியுள்ளார். மூவேந்தரையும் ஒருங்கே சுட்டும்போது சேரரே முன்னிலைப்படுத்தப்படுகின்றனர். மூவேந்தர்க்குரிய பூமாலை, நாடு ஆகியவற்றைச் சுட்டும்போதும் சேரநாடும் சேரருமே முதலில் குறிக்கப்படுகின்றனர். இம்மரபு சேரரின் தொன்மையையும் சிறப்பையும் காட்டுவதாக அமைகின்றன.

**எல்லைகள்**

சேரநாடு மேற்கே மேலைக் கடலையும் கிழக்கே மேற்குத் தொடர்ச்சி மலைகளையும் தெற்கே பொதிய மலையையும் வடக்கே தபதி ஆற்றங்கரையையும் எல்லைகளாகக் கொண்டு அமைந்த பேரரசு நாடாக விளங்கியது. வடக்கிலுள்ள வாணியாறும் தெற்கிலுள்ள பொன்வாணியாறும் சேரநாட்டின் வடக்கு தெற்கு எல்லைகளாகக் கூறுவர். சேரநாட்டின் எல்லைகளை,

> "வடக்குத் திசைபூமி வான்கீழ்தென் காசி
> குடக்குத் திசை கோழிக்கோடாம் - கடற்கரையின்
> ஓரமே தெற்காகும் உள்ளெண் பதின்காதம்
> சேரநாட் டெல்லையெனச் செப்பு"

என்னும் பாடல் கூறுகிறது. எண்பது காதப் பரப்பளவு கொண்டதாகச் சேரநாடு விளங்கியதைச் சி. பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். சங்க காலத்தின் தொடக்க காலகட்டங்களில் குட்ட நாடு, குடநாடு என இருபிரிவாக இருந்த சேரநாடு பின் பூழிநாடு, கொண்கான நாடு, புன்னாடு, கொங்கு நாட்டின் ஒருபகுதி ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டு விளங்கியதை அறியமுடிகிறது.

**மலைகளும் ஆறுகளும்**

சேரநாடு மேற்குத் தொடர்ச்சி மலைகளைக் கொண்டிருந்தது. இம்மலைத்தொடர் வடக்கு தெற்காக நீண்டு செல்லும் தன்மையது. அயிரை, கொல்லி, நன்றா, பாயல், நேரி போன்ற மலைகளைக் கொண்டதாக இந்நாடு விளங்கியது. இம்மலைகளில் உருவாகும் ஆறுகள் இந்நாட்டை வளமுடையதாகச் செய்தன. ஆன்பொருநை, காஞ்சியாறு, குடவனாறு, காரியாறு, பேரியாறு போன்ற ஆறுகள் வற்றாத நீர்வளம் பெற்றிருந்தன. இந்நாட்டில் இயற்கை வளம் செறிந்த உம்பற்காடு, வேழக்காடு எனும் காடுகளும் இருந்தன.

**நகரங்கள்**

சேரநாட்டின் தலைநகரமாக வஞ்சி எனப்படும் கருவூர் விளங்கியது. இதனை மேனாட்டார் 'கரவ்ரா' என அழைத்தனர். சிறந்த துறைமுகமாக முசிறி விளங்கியது. மேலைநாட்டார் இதனை 'முசிறிஸ்' என அழைத்தனர். தொண்டி, மாந்தை, நறவு ஆகிய நகரங்கள் கடற்கரைப் பட்டினங்களாகவும் துறைமுகங்களாகவும் விளங்கின. தொண்டி – திண்டிஸ் எனவும் நறவு – நவ்றா எனவும் மேலைநாட்டாரால் அறியப்பட்டன. கொடுமணம் உயர்ந்த ஆபரணங்களுக்கும் பந்தர் முத்துக்களுக்கும் பெயர் பெற்ற இடங்களாகத் திகழ்ந்தன.

**சேரநாட்டின் வளங்கள்**

மக்களின் வாழ்வு வளமாக அமைய ஏதுவாக சேரநாடானது பல வளங்களும் நிறைந்து விளங்கியது. சேரநாட்டில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு நிலப்பொருள்களும் விளைந்து மிகுந்த வளமுடன் திகழ்ந்ததை,

"கடலவும் கல்லவும் யாற்றவும் பிறவும்
வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு
விழவுஅறு பறியா முழவுமிழ் மூதூர்"[35]

என்று குமட்டூர் கண்ணனார் இப்பாடலில் குறிப்பிடுகிறார். நானிலப் பொருள்கள் மட்டுமல்லாது பிறநாட்டுப் பொருள்களும் சேரநாட்டு அங்காடிகளில் குவிந்து கிடந்ததைப் பிறவும் எனக் குறிக்கிறார். இந்நாட்டு மக்கள் இடையறாது விழாக்களைக் கொண்டாடிய வண்ணம் இருப்பர். இங்குள்ள மூதூர்களில் முழவின் இசை கேட்டவாறே இருக்கும். இந்நாட்டு மக்கள் துன்பமில்லா நிறைந்த நல்வாழ்க்கையினை உடையவர்களாக விளங்கினர். இவர்கள் உண்ணத் தகுந்ததை நிரம்ப உண்டதால் நாத்தடித்துக் குழறும் மழலை நாவினால் மெல்லிய சொற்களை வழங்கும் தன்மை கொண்ட யாழ் முதலான இசைக்கருவிகளை இனிதாக இயக்குபவர்கள். "இவ்வுலகத்தோர் பொருட்டு நீ வாழிய" எனச் சேரமன்னனை வாழ்த்துவர்.

"போர்வல் யானைச் சேர லாத
நீவா ழியரிவ் வுலகத் தோர்க்கென

உண்டுரை மாறிய மழலை நாவின்
மென்சொற் கலப்பையர் திருந்துதொடை வாழ்த்த"[36]

எனும் பாடலால் சேரரின் மக்களைக்காக்கும் பண்பும் மக்களின் வளமான வாழ்வும் அறியமுடிகிறது. சேரமன்னர்களால் காக்கப்படும் நாடு தேவைப்படும் காலங்களில் மழைபொழிந்து விளங்கும். மக்கள் பசியும் நோயும் நீங்கிப் பல வளங்களும் பெற்று வாழ்வர். அவ்வாறு மழை பெய்யாது பொய்த்துப் போகும் காலங்களில் மூங்கில்கள் வாடிக் குன்றுகளின் பசுமை நீங்கக் கதிரவனின் வெப்ப மிகுதியால் அருவிகளில் நீரின்றிக் காய்ந்து கிடக்கும் வறட்சியான காலங்களிலும் பேரியாற்றின் நீரானது கரையை உடைத்துக்கொண்டு பாயுமளவிற்கு நீர்வழியும் தன்மைத்தாக விளங்குவது சேரநாடு (பதிற். 43). இந்நாட்டு உழவர்கள் இப்பேரியாற்றின் கரையில் பொன் ஏர் பூட்டும் விழாக் கொண்டாடி மகிழ்வர். இச்சேரநாடானது என்றும் மாறாத விளைச்சலையுடைய வயல்களையும் நீங்காத புதுவருவாயையும் கொண்டிருந்ததை "மறாஅ விளையுள் அறாஅ யாணர்" (பதிற். 60) எனும் பாடலடி காட்டுகிறது.

மருத மரத்தின் அடி சாயும்படி வெள்ளம் கரைபுரண்டு ஓடும் மருத நிலங்களைக் கொண்டது சேரநாடு. இங்கு எல்லாக் காலங்களிலும் கரும்பு பயிரிட்டு அறுவடை செய்யப்படும். பழமையான பல ஊர்களைக் கொண்ட சேரநாட்டின் மருதப் பகுதியில் உள்ள ஆற்றுநீர் ஊரில் நடைபெறும் விழாவினைக் கண்டு திரும்பும் முகமாக வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிப் பாய்வதை,

"காலம் அன்றியும் கரும்புஅறுத்து ஒழியாது
அரிகால் அவித்துப் பலபூ விழவின்
தேம்பாய் மருதம் முதல்படக் கொன்று
வெண்தலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலின் புகன்ற ஆயம்
முழவுஇமிழ் மூதூர் விழவுக்கா ணூஉப் பெயரும்
செழும்பல் வைப்பின் பழனப் பாலும்"[37]

எனும் பதிற்றுப்பத்துப் பாடல்வழி அறியமுடிகிறது.

இம்மருத நிலங்களில் பெரிய வாயினைக் கொண்ட எருமை கெழுத்தி மீன்கள் துண்டுபடும்படி வயல்களில் நடந்து வளமான இதழ்களையுடைய செங்கழுநீர் மலர்களை மேய்ந்தது. பின்னர் அது பசிய மிளகுக் கொடிகள் படர்ந்த பலா மரத்தின் நிழலில் காட்டு மல்லிகையின் படுக்கையில் துயில் கொண்டது. அப்போது மஞ்சளானது தன் மெல்லிய இலையில் எருமையின் முதுகினைத் தடவித்தர வாயினின்றும் செங்கழுநீர் மலர்களிலிருந்து தேன் வெளிப்பட்டு மணக்கும்படி அசைபோடும் வளமுடையதாகச் சேரநாடு விளங்கியதை,

"கொழுமீன் குறைய ஒதுங்கி வள்ளிதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை
பைங்கறி நிவந்த பலவின் நீழல்
மஞ்சள் மெல்லிலை மயிர்ப்புந் தைவர
விளையா இளங்கள் நாறமெல்புகு பெயராக்
குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும்
குடபுலம்"[38]

என்னும் சிறுபாணாற்றுப்படையின் பாடலடிகள் உணர்த்துகின்றன. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆட்சி புரிந்த நாடு நெய்தல் வளம் செறிந்த நாடாக இருந்ததை,

"வண்பிணி யவிழ்ந்த கண்போல் நெய்தல்
நனையிறு நறவிநன் நாடுமன் கமழ"[39]

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. சேரநாடு தாழை மடல் விரித்து மணம் பரப்பும் கடல் துறையும் குளிர்ந்த கடல் பரப்பும் கொண்ட நல்ல நாடாகத் திகழ்ந்தது.

புன்செய் நிலமான முல்லைநிலப் பகுதிகளை உழுது பயிர் செய்யும் உழவர்கள் மணிகள் அசையும் காடுகளைக் கொண்டு ஏர்பூட்டி உழுது கலப்பையின் கொழுச் சென்ற படைச்சா்லின் பக்கத்தே அசைகின்ற ஒளிக்கதிர்களையுடைய அழகிய மணிகளைப் பொறுக்கி எடுப்பர். இவர்கள் தினைப்புனத்தை உழுது தினைப்பயிர் செய்வர். வரகின் தாளினைக் கொண்டு வேய்ந்த மணம் மிகுந்த காட்டு மல்லிகையின் கொடி படர்ந்த குடியிருப்புகளைக் கொண்டவர்கள். இவர்கள் விருந்தினர்க்கு மென்மையான தினை மாவினை அளித்து விருந்தோம்பும் பண்பினர் என்பதை,

"ஏணல் உழவர் வரகுமீது இட்ட
கான்மிகு குளவிய வன்புசேர் இருக்கை
மென்தினை நுவணை முறைமுறை பகுக்கும்
பின்புலம் தழீஇய புறவுஅணி வைப்பு"[40]

என்னும் அடிகள் காட்டுகின்றன. இதன்மூலம் சேரநாடு நானில வளங்களையும் கொண்டது என உணரமுடிகின்றது.

## சேரநாட்டை ஆண்ட வேந்தர்கள்

சேரநாட்டை ஆட்சி செய்த சேரவேந்தர் பல பெயர்களில் வழங்கப்படுகின்றனர். இவர்கள் சேரர், சேரலர், சேரமான் என்னும் பொதுப்பெயர்களிலும் வானவன், வானவரம்பன், குட்டுவன், குடக்கோ, பொறையன், இரும்பொறை, ஆதன், கடுங்கோ, கோதை என்ற சிறப்புப் பெயர்களிலும் அழைக்கப்பெற்றனர். இச்சேர வேந்தர் இரு கிளையினராகக் காணப்படுகின்றனர். ஒருவர் உதியன் சேரலாதன் மரபில் வந்தவர். மற்றொருவர் இரும்பொறை மரபில் வந்தவர். சங்க இலக்கியங்கள்மூலமாக முப்பது சேரர்களை அறியமுடிகிறது. மற்ற சோழ, பாண்டிய வேந்தர்களுக்கு மாறாகச் சேரர்கள் ஒற்றுமையாக இருந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் கொண்டு தெளியலாம். "சேர அரசர்களில் தாயாதி அரசர்கள்கூடச் சண்டையிட்டுக் கொள்ளவில்லை"[41] என்பார் மயிலை சீனி. வேங்கடசாமி.

## கோப்பெருஞ்சேரல் இரும்பொறை

சேரரின் தலைநகரமாகிய வஞ்சி நகரில் சேர அரசை முதலில் நிறுவியவன் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை. இதனாலேயே 'கருவூர் ஏறிய' என்னும் அடைமொழியைக் கொண்டு அழைக்கப்பட்டான். இச்சேரனுக்கு அந்துவஞ்சேரல் இரும்பொறை, உதியஞ் சேரலாதன் என்ற இரு புதல்வர்கள் இருந்தனர். "கோப்பெருஞ்சேரலுக்கு மூத்த மகனான அந்துவஞ் சேரல் வஞ்சி நகரிலிருந்து சேரநாட்டை நிர்வாகம் செய்துவர, இளைய மகனான உதியஞ்சேரல் குழுமூரில் இருந்து கொண்டு சேர நாட்டை விரிவுபடுத்தும் பணியில் ஈடுபட்டான்"[42] இவ்விருவரின் சந்ததியினரும் இம்முறையிலேயே ஒற்றுமையுடன் செயல்பட்டு சேரநாட்டை ஆட்சி புரிந்தனர்.

## உதியஞ்சேரல்வழி சேரர்கள்

### உதியஞ்சேரலாதன்

இச்சேரலாதன் பெருஞ்சோற்று உதியன் என அழைக்கப்படுகிறான். முன்னோர் நினைவாக உணவு வழங்கியதால் இவ்வாறு அழைக்கப்பெற்றான். பாரதப் போரில் இருபடைக்கும் உணவு வழங்கினான் (புறம். 2) என்பது மிகைப்படுத்திய கற்பனையாகவே தோன்றுகிறது. இவன் குழுமூரிலிருந்துகொண்டு சேரநாட்டை விரிவுபடுத்தினான். இவன் போர்கள் பலசெய்து சேரநாட்டின் எல்லையை விரிவுப்டுத்தியதை "நாடுகண் அகற்றிய உதியஞ் சேரல்"[43] என்ற அகநானூற்றுத் தொடர் குறிப்பிடுகிறது. கொண்கானத் தலைவன் நன்னன் உதியனை வென்று தன்கீழ் வாழச் செய்தான் (அகம் 258).

### இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

இமயமலை வரை சென்று வில் பொறித்ததால் இமயவரம்பன் எனும் பெயர் பெற்றான். இவன் மாந்தை நகரில் வசித்து வந்தான். சேரநாட்டுக்கு வருகின்ற வணிகக் கப்பல்களைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்த கடம்பரை முறியடித்தான். (பதிற், 11, 20, அகம் 127, 347). யவனர்களைச் சிறைபிடித்து அவர்களின் கைகளைப் பின்புறமாகக் கட்டி, தலையில் நெய் ஊற்றி அவமதித்தான். இச்சேரன் வேல்பல்தடக்கை பெருநற்கிள்ளியுடன் போர் செய்து "போஒர்' என்னுமிடத்தில் மடிந்தான்.

### பல்யானைச் செல்கெழுகுட்டுவன்

இச்சேரன் யானைக் கூட்டங்களை வைத்திருந்ததால் இவ்வாறு அழைக்கப்பட்டான். இவன் ஆனைமலையைச் சூழ்ந்த உம்பற்காட்டுப் பகுதியை ஆட்சி செய்தான். அகப்பாவை அழித்தான். கொங்கர் பகுதியைக் கைப்பற்றினான். அயிரை மலையையும் கைப்பற்றி, பூழி நாட்டை ஆட்சி செய்தான்.

### களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்

முடிசூடும் காலத்தில் உரிய கண்ணியும் முடியும் இல்லாமையால் களங்காயால் கண்ணியும் நாரால் முடியும் செய்து முடிசூடியதால் இப்பெயர் பெற்றான். இவன் நன்னனை வாகைப் பெருந்துறை என்னுமிடத்தில் வென்று

அவன் காவல் மரமான வாகை மரத்தை வெட்டி வீழ்த்தினான். பூழி நாட்டைத் தன் நாட்டோடு இணைத்தான்.

### கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்

செங்குட்டுவன் பெரும்படை கொண்டு கடல் கொள்ளையர்களை அழித்தான். (பதிற். 41, 46, அகம் 212). இவன் நண்பனான அறுகையைப் பழையன் மாறன் விரட்டியதால் பழையனைச் செங்குட்டுவன் அழித்தான். அவன் காவல் மரமான வேம்பினை வெட்டிப் போர்முரசு செய்து பழையனின் மகளிருடைய கூந்தலால் அம்முரசினை இழுத்துச் சென்றான். மேலும் ஆரியரைத் தாக்கி அழித்துப் பத்தினி தெய்வத்திற்குக் கல் எடுத்து வந்தான். இடும்பில், கொடுகூர், வியலூர்ப் பகுதிகளை வென்றான்.

### ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

இச்சேரன் போர்க்களத்தில் வாளை உயர்த்தி ஆடியதாலும் ஆடல் பாடல்களில் கவனம் செலுத்தியதாலும் இப்பெயர் பெற்றான். இச்சேரன் தண்டகாரணியம் எனுமிடத்தில் ஆடுகளைக் கைப்பற்றித் தொண்டியில் சேர்த்தான் என்பர்.

பதிற்றுப்பத்து மூலமாக மேலே குறிப்பிட்ட சேரர்கள் உதியன் சேரலாதன் வழிவந்தவர் என்பது உறுதியாகின்றது.

## இரும்பொறை வழிச் சேரர்கள்

### அந்துவஞ்சேரல் இரும்பொறை

கோப்பெருஞ்சேரல் இரும்பொறையின் மூத்த மகன் அந்துவஞ் சேரல். இம்மன்னன் வஞ்சி நகரத்திலிருந்து ஆட்சி புரிந்து வந்தான்.

### செல்வக் கடுங்கோ வாழியாதன்

இக்கடுங்கோ வாழியாதனும் வஞ்சியிலிருந்து சேரநாட்டை ஆட்சி செய்தான். இம்மன்னன்கீழ் அயிரை மலையும் நேரிமலையும் பூழிநாடும் கொண்டு வரப்பட்டன.

### பெருஞ்சேரல் இரும்பொறை

பெருஞ்சேரல் இரும்பொறை கழுவுளை அடக்கி காமூரை வென்றான். தகடூர் நாட்டையும் இந்நாட்டின் மலையான குதிரை மலையையும் வென்று அதியனைக் கொன்றான் (பதிற். 78, புறம் 230).

### இளஞ்சேரல் இரும்பொறை

இளஞ்சேரல், கோப்பெருஞ்சோழனை வென்றான். விச்சிக்கோனை வென்று ஐந்தெயில் எனும் மதிலை அழித்தான். மோகூர்த் தலைவனான பழையன் மாறனையும் வெற்றி கண்டான்.

### யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல்

இச்சேரன் உதியன் மரபினான கோக்கோதை மார்பனைத் தொண்டியிலிருந்து வஞ்சிக்கு வரவழைத்து நிர்வாகத்தைக் கொடுத்தான் (புறம். 48). பின் இம்மாந்தரஞ்சேரல் இரும்பொறை தொண்டியில் இருந்துகொண்டு போர்களில் ஈடுபட்டு நாட்டை விரிவாக்கினான். (புறம். 17, நற். 8)

மேலே குறிப்பிட்ட வேந்தர்கள் மட்டுமல்லாது சேரன் கோக்கோதை மார்பன், குட்டுவன்கோதை, கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை போன்ற உதியன் வழியினரும் பாலை பாடிய பெருங்கடுங்கோ, மருதம் பாடிய இளங்கடுங்கோ, மாரிவெண்கோ, கணைக்கால் இரும்பொறை, சேரமான் வஞ்சன் போன்ற இரும்பொறை வழியினரையும் சங்க இலக்கியங்கள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

### சேரநாடு பேரரசாக உருவான விதம்

சங்ககாலத் தொடக்கத்தில் சேரர்கள் குட்டநாட்டில் வசித்து வந்தனர். பின்னர் வடக்கு நோக்கிப் பரவி குடநாட்டிலும் ஆட்சி செய்தனர். சேர வேந்தர்களின் இரு மரபினரில் இரும்பொறை மரபினர் வஞ்சி நகரில் இருந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டனர். உதியன் மரபினர் தொண்டியிலும் மாந்தை, நறவு போன்ற பிற நகரங்களிலும் இருந்துகொண்டு போர்களில் ஈடுபட்டுத் தன் நாட்டின் எல்லையை விரிவுபடுத்தினர். பூழிநாட்டின்மீது படையெடுத்துத் தன் நாட்டோடு இணைத்துக்கொண்டதை, "பூழி நாட்டைப் படையெடுத்துத் தழீஇ"[44] என்னும் தொடர் காட்டுகிறது. மேலும் நேரிமலையையும் அயிரைமலையையும் இவர்களின்கீழ் கொண்டு வந்தனர். உம்பற்காட்டையும் அகப்பாவையும் வென்றதைப் பதிற்றுப்பத்தின் மூன்றாம் பதிகம் காட்டுகிறது. கொண்கானத் தலைவனான நன்னனை வென்று தன்கீழ் கொண்டுவந்ததால் நன்னன் உதியன் எனச் சேரரின் குடிப்பெயரை வைத்துக் கொண்டதன் (அகம். 258) மூலம் அறியமுடிகிறது. இடையர்களின்

தலைவனான கழுவுளை அடக்கிக் காமூரை வென்றதை, “ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்கப்”[45] என்னும் பாடலடி புலப்படுத்துகிறது. இது மட்டுமல்லாது இடும்பில், கொடுகூர், வியலூர் போன்ற ஊர்களையும் தன் நாட்டோடு சேர்த்தனர். மோகூரை வென்று பழையனின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்தி முரசமாகக் கொண்டதை,

“மோகூர் மன்னன் முரசங் கொண்டு”[46]

என்னும் அடி காட்டுகிறது. விச்சிமலை, நேரிவாயில் முதலான பகுதிகளிலும் சேரர் போரிட்டு வெற்றி பெற்றனர். தகடூர் நாட்டின்மீது போர்தொடுத்து அதியமானை அழித்ததை,

“பல்வேல் தானை அதிக மானோடு
இருபெரு வேந்தரையும் உடன்நிலை வென்று
முரசும் குடையும் கலனும் கொண்டு
உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டுத்
துகள்தீர் மகளிர் இரங்கத் துப்புஅறுத்துத்
தகடூர் எறிந்த நொச்சி தந்து எய்திய”[47]

என்னும் பதிற்றுப்பத்தின் பதிகம் உணர்த்துகின்றது. மேலும் தகடூர்ப் பகுதியாகிய குதிரை மலையையும் வென்றனர்.

கொல்லி மலையினை ஆண்ட வல்வில் ஓரியினைத் திருமுடிக்காரியால் கொல்வித்துச் சேரநாட்டோடு இணைத்துக் கொண்டதை,

“செவ்வேல்
முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க் கீத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி”[48]

என்னும் அகநானூற்றுப் பாடல் சான்று பகர்கின்றது. இதைப்போன்றே புன்னாட்டையும் தன்கீழ்க் கொண்டுவந்து சேரநாட்டின் எல்லையை விரிவுபடுத்தினார்.

குட்டநாட்டில் தொடங்கி குடநாட்டில் பரவிய சேரர், பூழிநாடு, கொண்கானநாடு ஆகியவற்றைத் தன்கீழ்க் கொண்டுவந்தனர். பின் அண்டைநாட்டுப் பகுதிகளான சில ஊர்களையும் அகப்பா, அயிரை,

கொல்லி, விச்சி, குதிரை போன்ற மலைகளையும் வென்று தன் நாட்டோடு இணைத்தனர். கொங்கு நாட்டின்மீது அடிக்கடி போர்தொடுத்து அதன் பகுதிகளை வென்றனர். இவ்வாறு சிறிது சிறிதாகத்தன் நாட்டின் எல்லையை விரிவுபடுத்திப் பேரரசு நாடாக நிலைக்கச் செய்தனர்.

### சோழநாடு

சங்க இலக்கியங்களில் சோழநாடு 'குணபுலம்' என்று வழங்கப்படுகிறது. காவிரி புரக்கும் நாடாதலால் புனல்நாடு என்றும் அழைக்கப்பட்டது. "ஆரியருக்குமுன் தென்னாட்டில் வாழ்ந்த கருப்பு மனிதர் என்னும் பொருளில் வழங்கும் கால அல்லது கோல என்ற வடமொழிச் சொல்லினின்றும் வந்தது என்பர் சிலர்.[49] சோளம் விளையும் நாடு சோளநாடு, அது சோழநாடு எனவாயிற்று என்பர் மற்றும் சிலர். திருடன் என்ற பொருளில் வழங்கும் சோரன் என்ற சொல்லிலிருந்து சோழன் என்ற சொல் வந்தது என்பர் சிலர் எனச் சோழரின் பெயரும் சோழநாட்டின் பெயரும் படும்பாட்டைக் குறிப்பார் கா. கோவிந்தன். சோழநாடு என்பது 'நீர்சூழ்நாடு' என்பது நாளடைவில் சூழநாடு – சோழ நாடு என மாறியிருக்கலாம் எனக் கருதுவார் மா. இராசமாணிக்கனார்.[50]

### சோழநாட்டின் தொன்மைச் சிறப்பு

சோழரைப் பற்றிய செய்தி அசோகரின் கல்வெட்டுகளில் காணக்கிடக்கிறது. பழந்தமிழ்ப் பாடல்கள் சோழரை சூரிய குலத்தவராகப் பாடுகின்றன. சங்க இலக்கியங்கள் மூலம் சோழரின் பல்வேறு சிறப்புகளையும் அறிய முடிகிறது. சோழநாடு நீதி வழங்குவதற்குப் பேர்போனதாக விளங்கியது. வெளிநாட்டுப் பயணியான தாலமி சோழர்களை 'சோரா' எனக் குறிப்பிடுகிறார். சோழ நாட்டில் நெய்யப்பட்டு ஏற்றுமதியாகும் ஒருவகைத் துணி அயல்நாடுகளில் விரும்பி அணியப்பட்டது என்றும் குறிக்கின்றனர் தாலமி, பிளைனி போன்றோர்.

### எல்லைகள்

கிழக்குப் பகுதியில் அமைந்த பேரரசு நாடாகச் சோழநாடு விளங்கியது. இது வடக்கே வேங்கடத்தின் முன்பகுதியினையும் தெற்கே வெள்ளாற்றினையும் கிழக்கே குணகடலையும் மேற்கே கொங்குநாடு, மேற்குத்

தொடர்ச்சி மலைகளையும் எல்லைகளாகக் கொண்டிருந்தது. இன்றைய சித்தூர், வடஆற்காடு, தஞ்சை, திருச்சி மாவட்டங்கள் சோழநாட்டில் அடங்கியன. சோழ நாட்டின் எல்லையினை,

"கடல் கிழக்குத் தெற்குக்கரை பெருவெள்ளாறு
குடதிசையிற் கோட்டைக்கரையாம் வட திசையில்
வேணாட்டுப் பண்ணை யிருபத்து நாற்காதஞ்
சோணாட்டுக்கு எல்லை யெனச் செப்பு"

எனச் சிறிது மாற்றிக் கூறுகிறது ஒரு பழந்தமிழ்ப் பாடல். இச்சோழ நாடானது இருபத்து நான்கு காதம் பரப்பளவு கொண்டு விளங்கியதாக சி. பாலசுப்பிரமணியன் குறிப்பிடுவார். இது சேரநாட்டோடு ஒப்பிடுகையில் மூன்றில் ஒரு பங்கைத் தன் ஆட்சிப் பரப்பாகக் கொண்டிருந்தது.

**நகரங்கள்**

சோழநாட்டின் தலைநகரமாக உறையூர் விளங்கியது. மேனாட்டார் இதனை 'ஒர்த்தொரா' எனக் குறித்தனர். காவிரிப்பூம்பட்டினம் சிறந்த துறைமுக நகரமாக விளங்கியது. பின்னர் தலைநரகமாகவும் மாற்றம் பெற்றது. இதனைக் 'கபேரிஸ் எம்பேரியான்', 'கபரிஸ்', 'சபரிஸ்' என மேனாட்டார் வழங்கினர். அழுந்தூர், ஆர்க்காடு, வல்லம், குடந்தை, பருவூர், போஒர் ஆகிய ஊர்களும் சோழநாட்டில் சிறந்து விளங்கி இருந்ததை அறியமுடிகிறது.

**ஆறு**

சோழநாட்டில் பாயும் காவிரி ஆற்றால் சோழநாடு சிறப்புப் பெற்றது எனில் மிகையாகாது. 'சோழநாடு சோறுடைத்து' எனும் பெருமைக்கும் காவிரியே காரணமாக அமைந்தது. "காவிரி புரக்கும் நல்நாட்டுப் பொருந"[51] எனக் காவிரியால் நாடும் மன்னனும் சிறப்பிக்கப்படுகின்றனர். சோழநாட்டில் அரிசில் எனும் ஆறும் பாய்ந்து செழுமையுறச் செய்தது.

**சோழநாட்டின் வளங்கள்**

குமரி ஆற்றுக்கும் வடதிசையிலுள்ள இமயமலைக்கும் இடையிலுள்ள நாடுகளில் மக்கள் வாழ்வதற்கேற்ற மிக நல்ல நாடாக சோழநாடு விளங்கியது. இதனைப் பாண்டிய நாட்டுப் புலவர் பிசிராந்தையார்,

"குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி

வடமலைப் பெயர்குவை யாயி னிடையறாது

சோழநன் னாட்டுப் படினே"[52]

எனக் குறிப்பிடுகிறார். மேலும் நாடுகளில் சிறந்தது எது என ஆராய்வோர் சோழ நாட்டையும் வேந்தர்களில் சிறந்தவரை ஆராய்வோர் சோழ வேந்தனான் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியையும் குறிப்பிடுவர் என்பதை,

"நாடென மொழிவோரவன் நாடென மொழிவோர்

வேந்தென மொழிவோரவன் வேந்தென மொழிவோர்"[53]

என்னும் புறநானூற்றின் இப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

சோழநாடு முழங்குகின்ற தன்மையையுடைய நீர்நிலம் சான்ற தோட்டங்களை உடையதாகவும் காவிரி பாயும் நாடாகவும் விளங்கியது. வெண்ணெல் விளையும் ஊர்களை மிகுதியாக உடைய நாடாகவும் விளங்கியது. இதனை,

"சோழர்

வெண்ணெல் வைப்பின் நல்நாடு"[54]

"முழங்குநீர்ப் படப்பைக்

காவிரி கிழவன் மாயா நல்லிசைக்

கிள்ளி வளவ னுள்ளி யவற்படர்தும்"[55]

முதலான சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. இந்நாடு எங்கும் பசுமை என்பதே இல்லாது ஒடுங்கும் கோடைக்காலம் வந்தபோதும் காவிரியாற்றின் நீர்வளத்தால் செழுமையுடன் விளங்கும். மேலும் இந்நாடு மருதநிலத்து வயல்களையும் முல்லைக் காடுகளான புறவையும் கடல்சார்ந்த நெய்தல் பகுதியையும் என நால்வகை நிலங்களையும் தன்னுள் கொண்டு விளங்கியது. சோழநாட்டு நெல் வயல்களில் நெல்லுக்கு வேலிபோல நெடிது வளர்ந்து நிற்கும் கரும்பு. இவ்வயல்களின் பாத்திகளுக்கிடையில் பலவகையான பூக்களும் நிறைந்திருக்கும். முல்லைக்காடு புல்மேயும் பலவாகிய ஆநிரைகளுடன் வில் வீரர்கள் காவலிருக்கும் மிகுந்த அரணுடையதாக இருக்கும். கடல் சார்ந்த நெய்தல் பகுதிகள் காற்றால் கொண்டுவரப்பட்ட மரக்கலங்களை எண்ணியபடி தங்கும் மகளிரையும் அக்கானற் சோலையிலுள்ள புன்னை மரங்களின் கிளைகளையும் கடல் அலைகள் அலைக்கழித்த வண்ணமிருக்கும். கழி சார்ந்த பகுதிகளில் சிறிய

வெண்மையான உப்பினை விற்கும் உமணர் சென்ற வண்ணம் இருப்பர். இதனை,

"வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் பூத்த தும்பின்று
புறவே, புல்லருந்து பல்லா யத்தான்
வல்லிருந்த வெங்குறும்பின்று
கடலே, காறந்த கலனென எண்ணுவோர்
கானற் புன்னைச் சினை யலைக்குந்து
கழியே, சிறுவெள் நெப்பின் கொள்ளை சாற்றி
பெருங்க னன்னாட் டுமணொலிக் குந்து
அன்ன நன்னாட்டு"[56]

என்னும் பாடல் புலப்படுத்துகிறது. இந்நாடு என்றும் நீங்காத விழாவையும் புதுவருவாயினையும் கொண்டிருந்ததை, "மடியா விழவின் யாணர் நன்னாட்டுள்ளும்" (புறம். 212) எனும் பாடலடி உணர்த்துகின்றது.

சோழநாட்டில் மயில் உதிர்த்த பீலியை வயலிடத்தே உள்ள உழவர்கள் நெற்கட்டுகளுடன் சேர்த்து மயில்பீலியையும் திரட்டுவர். கொழுத்த மீனையும் விளைந்த கள்ளையும் உடைய இந்நாடு மிக்க நீர்வளத்தைக் கொண்டிருந்ததை,

"பழன மஞ்ஞை யுகுத்த பீலி
கழனி யுழவர் சூட்டோடு தொகுக்கும்
கொழுமீன் விளைந்த கள்ளின்
விழுநீர் வேலிநாடு"[57]

என்னும் புறநானூற்றுப் பாடல் சுட்டுகிறது.

காவிரி பாயும் சோழநாட்டின் அகன்ற வயல்களில் நெல்லும் கரும்பும் எப்போதும் விளையும். இங்குக் கரும்பு காய்ச்சுவதால் ஆலைகளில் இடையறாது புகை வந்துகொண்டிருக்கும். இதனால் அருகிலுள்ள வயல்களில் உள்ள நெய்தல்பூ வாடிவிடும். மிகுதியான குலைகளையுடைய தென்னை மரங்களும் வாழை மரங்களும் பாக்கு மரங்களும் செழித்து வளரும் தன்மையதாக இந்நாடு விளங்கியது. இது மட்டுமல்லாது மஞ்சள்,

மாமரங்கள், பனை, இஞ்சி, சேப்பங்கிழங்குச் செடிகள் போன்றவையும் வளர்ந்திருந்ததை,

“விளைவுஅறா வியன்கழனி
கார்க் கரும்பின் கமழ்ஆலைத்
தீத்தெறுவின் கவின்வாடி
நீர்ச்செறுவின் நீள்நெய்தல்
பூச்சாம்பு புலத்து ஆங்கண்
காய்ச்செந்நெல் கதிர் அருந்து”[58]

என்னும் பட்டினப்பாலை அடிகள் உணர்த்தும்.

கிழக்குக் கடற்கரையை ஒட்டிய சோழ நாட்டு மருதநிலப் பகுதியில் ஒவ்வொரு ‘மா’ அளவு நிலத்திலும் திடர்தோறும் நெற்கூடுகள் பொருந்தி விளைச்சல் மிகுதியாக இருக்கும். இங்கு நெல் அறுப்பவர்களும் கரும்பு அறுக்கின்றவர்களும் செய்யும் ஆரவாரத்தைக் கேட்டு நாரைகள் அஞ்சி ஓடும். அரிந்த நெல்லை மலைபோலக் குவிப்பர். ஒருவேலி நிலம் ஆயிரம் கலம் நெல்லைத் தந்து சோழநாட்டை வளம் கொழிக்கச் செய்தது என

“சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளை யுட்டு ஆக”[59]

பொருநராற்றுப்படைப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

சோழநாட்டில் பொய்கை என்று கூறப்படும் நீர்நிலைகள் அதிகம். நல்ல மணமுடைய கடம்ப மரங்கள் பொய்கைக் க்ரையில் வளர்ந்திருக்கும். அவை மாலை மாலையாகப் பூக்கும் தன்மையுடையன. ஓவியத்தைப் போன்ற பொய்கைக் கரையில் இந்திரகோபம் போலக் கடம்ப மலரின் தாதுக்கள் உதிர்ந்திருக்கும். அங்கு மங்கையரின் முகம் போலத் தாமரை மலரும். இம்மலரின் உள்பாகத்தில் செம்பொன்னால் செய்ததுபோலச் சிவந்து காணப்படும். இதழில் வண்டுகள் தன் துணையுடன் பாடியவாறு மகிழ்ந்திருக்கும் எனச் சிறுபாணாற்றுப்படை (68 – 78) கூறுகிறது. சோழநாட்டின் இவ்வனைத்து வளங்களுக்கும் மூலகாரணமாகக் காவிரியாறு அமைந்தது. வெள்ளிமீன் திசைமாறினாலும் மழை பெய்யாது ஒழிந்தாலும் குடகு மலையில் தோன்றிப் பாயும் காவிரி காலந்தோறும் பாய்ந்து கொண்டிருக்கும்.

"வான் பொய்ப்பினும் தான் பொய்யா
மலைத்தலைய கடல் காவிரி
புனல் பரந்து பொன் கொழிக்கும்"[60]

இக்காவிரி கொணரும் பொன் வளத்தால் முற்றத்தில் காய வைத்திருக்கும் நெல்மணிகளை எடுக்கவரும் கோழிகளைத் தன் காதணிகளைக் கொண்டு விரட்டுவர் சோழநாட்டுப் பெண்கள். இப்பொற் காதணிகள் அவர்களின் புதல்வர் உருட்டும் வண்டிகளைத் தடுத்துக் கொண்டிருக்கும் வளமுடைய நாடாக சோழநாடு திகழ்ந்தது.

## சோழ வேந்தர்கள்

சோழநாட்டை ஆட்சி செய்த சோழ வேந்தர்கள் பல பெயர்களில் வழங்கப்படுகின்றனர். சோழர் பெருமான், சோழன் என்ற பொதுப்பெயரிலும் கிள்ளி, வளவன், சென்னி, செம்பியன், மாவளத்தான் என்ற சிறப்புப் பெயர்களாலும் அழைக்கப்பட்டனர். சங்க இலக்கியங்களில் 24 சோழ மன்னர்களைப் பற்றிய செய்திகள் பயின்று வருகின்றன. எனினும் இவ்வேந்தர்களை வரிசைப்படுத்தி அறிவது கடினமாக இருக்கிறது.

சோழர்களைப் பற்றிய சங்கப் பாக்களை ஆராயும்போது சோழர் என்று பன்மையில் விளிப்பதும் சோழர்கள் பரம்பரையில் ஒன்பது தாயாதிகள் இருந்தனர் என்பதும் தெரிய வருகின்றன. இச்சோழர்கள் அடிக்கடி தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டனர். உதாரணமாகத் தாயாதி அரசர்கள் ஒன்று சேர்ந்து கரிகாற்சோழனைக் கொல்லத் திட்டமிடும்போது தீயிலிருந்து தப்பியதால் கால் கரிந்துவிட்டது என்றும் இதன் காரணமாகக் கரிகாலன் எனப் பெயர்பெற்றான் என்றும் அறிகிறோம். கிள்ளி வளவன் அரியணை ஏறும்போது தாயாதிகள் கலகம் செய்ய, செங்குட்டுவன் அவர்களை அடக்கினான். இத்தாயாதிப் போர்கள் மட்டுமல்லாது சொந்த அண்ணன் தம்பிகளுக்குள் சண்டை ஏற்பட்டுப் போரிட்டுக் கொண்டதை நெடுங்கிள்ளி, நலங்கிள்ளி வரலாறுகள் காட்டும். தந்தையும் மகனும் தங்களுக்குள் போருக்கு எழுந்ததைக் கோப்பெருஞ்சோழன் வரலாறு காட்டுகிறது.

சேரரும் பாண்டியரும் முழு அதிகாரம் படைத்த வேந்தர்களாக இருந்தனர் என்றும் சோழர் கூட்டுக் குடும்பங்கள் பல சேர்ந்த குடியாட்சி

முறையைத் தொடக்கக் காலத்தில் கொண்டிருந்தனர் என்றும் கூறுவார் கே.என். சிவராசபிள்ளை.[61] சோழர் குடியினைச் சேர்ந்தோர் அழுந்தூர், ஆமூர், கழார், குடந்தை, பருவூர், பெருந்துறை, போஒர், வல்லம் முதலிய பகுதிகளில் தம் குடியாட்சியை அமைத்தனர். இவர்கள் ஒவ்வொரு கிளையினரும் தங்களுக்குள் ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். மண்ணாசை கொண்ட இவர்கள் ஒருவர் மற்றவரை வென்று அடக்கி ஆள முயன்றனர். இம்முயற்சியினால் கிள்ளி, சென்னி என்னும் இரு சோழ மரபினர் தம் படைபலத்தால் பிறரை வென்று சிறப்படைந்தனர். கிள்ளி வழியினர் உறையூரில் தன் ஆட்சியை நிறுவிப் பேரரசாக மாற்ற முயன்றனர். இவ்வழியினர் தன்னைப் பெருநற்கிள்ளி, பெருங்கோக்கிள்ளி எனக் கூறிக்கொண்டனர். சென்னி வழியினர் முதலில் சிறு நிலப்பரப்பை ஆட்சி செய்ததால் சிறுகோல் சென்னி என வழங்கப்பட்டனர். பின் அழுந்தூரிலிருந்து காவிரிப்பூம்பட்டினம் வரை தனது ஆட்சியை விரிவுபடுத்தினர்.

## கிள்ளிவழி சோழர்

### தித்தன்

தித்தன் உறையூரை ஆர்க்காட்டு அழிசி பெருங்கோழி நாய்கன் என்பவனிடமிருந்து கைப்பற்றினான். எனவே பிற்காலத்தில் ‘தித்தன் உறந்தை’ என்று அழைக்கப்பட்டது. இவன் உறையூரைச் சுற்றி பலத்த காவற்காட்டை அமைத்தான். தித்தனும் அவன் மகனும் வீரை வேண்மான் வெளியன் தித்தன் என அழைக்கப்படுவதால் இவன் சோழர் மருமகன் ஆகலாம். சோழர் மகளை மணந்து சோழர் குடியோடு இணைந்தான் எனக் கருத இடமேற்படுகிறது.

### போர்வைக் கோப்பெருநற்கிள்ளி

இச்சோழன் ‘போஒர்’ என்னும் பகுதியை வென்றதால் போர்வைக்கோ என அழைக்கப்பட்டான். தித்தன் வெளியன் என்றும் அழைக்கப்பட்டான். (அகம். 156, 226). இம்மன்னனும் படைத்தலைவர்களும் நன்னனுடன் போரிட்டு வென்றனர்.

### சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி

இவன் தித்தன் வெளியனின் மகன். இச்சோழனே முதலில் முடிசூடி சோழவேந்தனாக ஆட்சி செய்தான். இதனாலேயே முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி என அழைக்கப்பட்டான். இவ்வேந்தன் யானை மீதமர்ந்து சென்றபோது மதம்பிடித்து ஓடியது. பின் சேரன் காப்பாற்றினான். இந்நிகழ்ச்சி இருவேந்தரிடையே மணஉறவு ஏற்படக் காரணமாக இருந்ததை உணர முடிகிறது.[62]

### வேல்ப.்.றடக்கைப் பெருநற்கிள்ளி

இப்பெருநற்கிள்ளிக்கும் குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் போர் மூண்டது. இப்போரில் ஒருவரும் எஞ்சாது இறந்தனர். இதனைப் புறநானூற்றில் பரணர், கழாஅத்தலையார் போன்றோர் பாடியுள்ளனர். இப்போர் கிள்ளி வழியினருக்கு அழிவை ஏற்படுத்தியது.

### கோப்பெருஞ்சோழன்

கோப்பெருஞ்சோழன் போர்களில் ஈடுபடுவதைத் தவிர்த்துச் சான்றோர்களுடன் சூழ்ந்து அறநெறிகளில் கவனம் செலுத்தினான். இதனால் பகைவர் சோழநாட்டுப் பகுதிகளைக் கைப்பற்றினர். இச்சோழனின் மகன்கள் இவனுக்கு எதிராகக் கலகம் செய்த காரணத்தால் போருக்கெழுந்து, பின் வடக்கிருந்து உயிர்விட்டான். (புறம். 213). கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் நட்பு சான்றோர் போற்றும் வண்ணம் சிறப்புப் பெற்றிருந்தது.

### நெடுங்கிள்ளி

நெடுங்கிள்ளி நலங்கிள்ளியின் ஆவூர்க் கோட்டையையும் உறையூர்க் கோட்டையையும் கைப்பற்றினான். பின் நலங்கிள்ளி அவற்றை மீட்டுக் கொண்டான். இச்சோழன் காரியாறு என்னுமிடத்தில் இறந்தான். இதனால் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி என வழங்கப்பட்டான்.

## சென்னிவழிச் சோழர்

### பெரும்பூண் சென்னி

சோழரின் படைத்தலைவனான ஆஅய் எயினன் நன்னன் கூட்டணியோடு செய்த போரில் இறந்ததால் இச்சென்னி நன்னன்மேல் போர் தொடுத்தான். இப்போரில் நன்னனின் நண்பனான கணையனைச் சிறைபிடித்தான்.

இவனுடைய கழுமலத்தைக் கைப்பற்றினான். இவ்வெற்றியை அழுந்தூரில் கொண்டாடினான். (அகம். 44)

### கரிகால் வளவன்

சங்க இலக்கியங்களில் சோழநாட்டை ஆட்சி செய்த கரிகால்வளவன் இருவர் காணப்படுகின்றனர். அவர்கள் பாட்டனும் பேரனும் ஆவர். இதனைச் சோழர் வரலாற்றில் மா. இராசமாணிக்கனார் விரித்துக் கூறிச் செல்கிறார். இவர்களில் முதலாம் கரிகால் வளவன் வெண்ணிப் பறந்தலை என்னுமிடத்தில் போரிட்டு இருவேந்தர், பதினோரு வேளிர்களை வென்றான். இப்போரில் பெருஞ்சேரலாதன் புறப்புண் பட்டதால் அதற்கு நாணி வடக்கிருந்து உயிர்விட்டான் (அகம். 246, புறம், 65, 66). வாகைப் பறந்தலையில் ஒன்பது மன்னர்களை வென்றான் (அகம். 125) நாடோடிகளாகத் திரிந்த மக்களை ஓரிடத்திலே தங்க வைத்தான்.

இரண்டாம் கரிகால் வளவன் மீண்டும் வெண்ணிப் பறந்தலையில் சேர, பாண்டியரை வென்றான் (பொருநர். 130 – 138). இவன் ஒளியர், அருவாளர், வடவர், குடவர், தென்னவன், பொதுவர், இருங்கோவேள் ஆகியோரை அடக்கித் தன் கீழ்க்கொண்டுவந்து பேரரசை விரிவுபடுத்தினான்.

### உருவப் ப.்.றேர் இளஞ்சேட் சென்னி

இச்சோழன் முதலாம் கரிகாலனின் மகனும் இரண்டாம் கரிகாலனின் தந்தையுமாவான். இவன் நெய்தலங்கானலை வென்று இவனாட்சியின்கீழ்க் கொண்டுவந்தான். சேரரின் பாமுளுரை வென்றான் (புறம். 223). ஆரியருக்குத் துணையாக வந்த வடுகரை வென்றான் (அகம். 375, புறம். 378). நன்னனின் பாழி நகரை அழித்தான். இவ்வேந்தன் அழகிய பல தேர்களைக் கொண்டிருந்ததால் இப்பெயர் பெற்றிருந்தான் என்பதை அறியமுடிகிறது.

### சேட்சென்னி நலங்கிள்ளி

இச்சோழன் காலத்தில் உறையூரும் சென்னி வழியினருக்கும் வந்ததால் கிள்ளி, சென்னி என இருகுடிப் பெயரையும் சேர்த்து சேட்சென்னி நலங்கிள்ளி என அழைக்கப்பட்டான். இச்சோழன் தாயாதி அரசனான நெடுங்கிள்ளியை முற்றுகையிட்டு வென்றான். இம்முற்றுகை ஆவூர், உறையூர் ஆகிய இரு இடங்களிலும் நடைபெற்றன. இவ்வுட்பூசல் மறைந்த பிறகு சேர,

பாண்டியரை வெல்ல முற்பட்டான். இவ்வேந்தன் ஏழெயில் கதவம் எனும் பாண்டிய நாட்டைச் சேர்ந்த சிற்றரசுப் பகுதியைக் கைப்பற்றினான் (புறம். 33). இம்மதிலில் புலிச் சின்னத்தைப் பொறித்தான். தலையாலங்கானம் என்னுமிடத்தில் பாண்டியனை எதிர்த்தபோது இறந்தான்.

**கிள்ளிவளவன்**

இச்சோழன் முள்ளூர் மன்னனான தேர்வண் மலையனைப் படைத்தளபதியாகக் கொண்டவன். சேரநாட்டின்மீது படையெடுத்துச் சென்று கருவூரை முற்றுகையிட்டான். காவற்காடு, அகழி, மதில் போன்றவற்றை அழித்து, சேரனான கோக்கோதை மார்பனை வென்று அந்நாட்டுப் பொருட்களைக் கொள்ளையடித்தான் (புறம். 36, 37, 39, 373). மதுரைமீது படையெடுத்துச் சென்று பழையன் மாறனுடன் போரிட்டு இறந்தான்.

**இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி**

இச்சோழ வேந்தன் இராசசூய யாகம் செய்ததால் இப்பெயரைப் பெற்றான். இவன் அருவந்தைக்குச் சொந்தமான அம்பர் என்னும் ஊரைக் கைப்பற்றினான். இவன் வெண்ணியிலிருந்து ஆட்சி செய்தான் (நற். 390).

மேற்கூறிய சோழர்கள் மட்டுமல்லாது மாவளத்தான், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி, நல்லுருத்திரன், செங்கணான், தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் போன்றோர் சோழநாட்டை ஆட்சி செய்தான்.

**சோழநாடு பேரரசாக உருவான விதம்**

ஆரம்ப காலகட்டங்களில் சிறுசிறு குடியாட்சியைக் கொண்டிருந்த சோழர் பின் இரு கிளையினராகச் சோழநாட்டை ஆட்சி செய்தனர். இச்சோழர்களுக்கு முன் உறையூர், ஆர்க்காட்டை ஆட்சி செய்த அழிசியின் வசம் இருந்தது. அழிசியின் மகன் சேந்தனிடமிருந்து உறையூரைத் தித்தன் கைப்பற்றி அங்குச் சோழ அரசை நிறுவினான். எனவே "ஆர்க்காட்டு அரசின் அழிவில் சோழ அரசு தோற்றம் கொண்டது. கே. என். சிவராசபிள்ளையின் கூற்று"[63] இதனை மேலும் உறுதிப்படுத்துவதாக உள்ளது. இது மட்டுமல்லாது வெண்ணி, வாகை போன்ற இடங்களில் போரிட்டு வெற்றி பெற்றுத் தன் எல்லையை விரிவுபடுத்தினர். இமயமலையிலும் தன்

புலிக்கொடியை நாட்டினர் என்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் வாயிலாக அறிய முடிகிறது.

"சோழர்

வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை

ஆரியர் படையின் உடைக"[64]

என்னும் இப்பாடலால் ஆரியரைச் சோழர்கள் வெற்றிகொண்டனர் என அறிய முடிகிறது. சேரர்களின் பாமுளூர் சோழராட்சியின்கீழ் வந்ததைப் புறநானூறும் (223) காட்டும். கொண்கானத்து நன்னனின் பாழி நகரை வென்றான் இளஞ்சேட்சென்னி. கொங்கு நாட்டின்மீது படையெடுத்துச் சென்று அவர்களைப் புறமுதுகிட்டு ஓடச் செய்ததை 'கொங்குபுறம் பெற்ற கொற்ற வேந்தே"[65] என்ற புறநானூற்றுப் பாடலடி காட்டுகிறது. பெருநற்கிள்ளி அம்பர் நகரைக் கைப்பற்றிச் சோழ நாட்டோடு இணைத்தான்.

பிறநாட்டுப் பகுதிகளை வென்றதைவிட சோழர்கள் தங்களுக்குள்ளேயே போரிட்டுக் கொண்டதே அதிகம். தாயாதி அரசர்களான சோழர் ஒருவருக்கொருவர் போரிட்டுக் கொண்டதிலேயே காலம் சென்றதால் அவர்கள் மற்றநாட்டின்மேல் கவனம் செலுத்த இயலவில்லை. தன் உரிமையை நிலைநாட்டவே அவர்கள் அதிக காலம் செலவிட்டுள்ளனர். சேர நாட்டோடு ஒப்பிடுகையில் இதனைத் தெளிவுறக் காணமுடியும். சேரநாட்டின் பரப்பளவில் மூன்றில் ஒரு பாகத்தையே சோழநாடு கொண்டிருந்தது எனினும் பேரரசு நாடாகத் தன் நாட்டை நிலைபெறச் செய்தனர் சோழர்கள். சோழர்களிடையே நிலவிய ஒற்றுமையின்மை மிகப்பெரிய பலவீனமாக அமைந்து நாட்டின் எல்லையை விரிவுபடுத்த இயலாத நிலையை ஏற்படுத்தியது. சோழர்கள் மற்ற வேந்தர்களிடம் தோல்வியடையவும் இதுவே காரணமாயிற்று எனக் கூறினும் பிழையிராது.

**பாண்டிய நாடு**

பாண்டிய நாடு 'தென்புலம்' என்றும் பாண்டிய வேந்தர்கள் 'தென்புலக் காவலர் பெருமான்' என்றும் அழைக்கப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் காட்டும். இந்நாடு தென்பகுதியில் அமைந்ததால் தென்பாண்டி நாடு எனவும் அழைக்கப்பட்டது. பாண்டில் என்னும் சொல்லுக்கு வட்டம் எனப் பொருள் கூறுகிறது சேந்தன் திவாகரம். வட்டம் என்பது வளைந்த என்ற பொருளில் எடுத்தாளப்பட்டுள்ளது. ஆகவே பாண்டியநாடு என்பதும் வளைந்த நாடு

என்னும் பொருளில் வந்த காரணப் பெயராகவும் கருத இடமுண்டு. பாண்டிய நாட்டின் கன்னியாகுமரிப் பகுதி வளைந்து காணப்படுவது இக்கருத்துக்கு அரணாக உள்ளது. இவ்வளைந்த நாட்டிற்கு அரசன் பாண்டியன் என்றும் அழைக்கப்பட்டனர்.

**பாண்டிய நாட்டின் தொன்மை**

சேர மற்றும் சோழப் பேரரசு நாடுகளைவிடப் பாண்டிய நாடு தொன்மையானது எனப் பிற்கால இலக்கியங்கள், வரலாறு கூறும். பாண்டிய நாட்டில் முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்று சங்கங்கள் நடைபெற்றன என்றும் பின்னர் அவை கடற்கோளால் அழிந்துபட்டன என்றும் சுட்டுவது பாண்டிய நாட்டின் தொன்மையைச் சுட்டுவதாக அமைகிறது. கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் எனும் நூலில் முத்தின் வகைகளைக் குறிப்பிடும்போது பாண்டிய நாட்டின் முத்தினைப் 'பாண்டிய கவாடம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மகாபாரதத்தில் வரும் அர்ச்சுனன் பாண்டியன் மகளை மணந்தான் என வியாசர் குறிப்பிடுகிறார். அசோகர் கல்வெட்டுகளிலும் பாண்டியர் குறிப்பிடப்படுகின்றனர்.

பாண்டிய நாடு மேலை நாடுகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததை மேலைநாட்டு அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். ரோமானிய மன்னன் அகஸ்டஸ் என்பானிடம் பாண்டியன் அரசியல் தூது அனுப்பினான் என்று அந்நாட்டு வரலாறு கூறுகிறது. இதனை வெனிஸ் - அலெக்சாண்டிரியா உடன்படிக்கை ஆவணம் உறுதிப்படுத்துகிறது. யவனத் தூதுவரான மெகஸ்தனிஸ் பாண்டிய நாட்டைக் குறிப்பிடும்போது "இந்தியாவில் அரசாட்சி செய்து வந்த ஹிராக்கிளிஸ் என்பவருக்குப் பெண் மகவு ஒன்று பிறந்தது. அப்பெண்ணுக்குப் 'பாண்டியா' எனும் பெயரை வைத்தார். அவளுக்கு இந்தியாவின் தெற்குப் பகுதியைப் பகிர்ந்து கொடுத்தார். அப்பகுதி கடல் வரையில் பரந்துள்ளது. தம் மகள் அரசாண்ட நாட்டை 365 கிராமங்களாகப் பிரித்து ஒவ்வொரு கிராமமும் ஒவ்வொரு நாளைக்கும் அரசிக்குரிய அரசிறையைக் கொணர்ந்து கட்ட வேண்டும் என்று கட்டளை பிறப்பித்தார்"[66] எனக் கூறுவார். இக்கருத்தையே பின்னர் வந்த தாலமி, பெரிப்ளூஸ் நூலாசிரியர் போன்றோரும் கூறுகின்றனர். இது மட்டுமல்லாது பாண்டிய

நாட்டின் மதுரை, கொற்கை நகரங்களும் இவர்களால் சுட்டப்படுவது இந்நாட்டின் தொன்மையையும் சிறப்பையும் புலப்படுத்துகிறது.

**எல்லைகள்**

பாண்டிய நாடு தமிழகத்தின் தென்பகுதியில் அமைந்த பேரரசு நாடாக விளங்கியது. இந்நாடு தெற்கே குமரி முனையினையும் வடக்கே சோழநாட்டின் எல்லைப் பகுதியான வெள்ளாற்றையும் மேற்குப் பகுதியில் பொதிய மலையையும் சேரநாட்டின் கிழக்கு எல்லைப் பகுதியையும் கிழக்கே குணகடலையும் தன் எல்லைகளாகக்கொண்டு விரிந்த பரப்பளவுடன் திகழ்ந்தது. இதனை,

> "வெள்ளாற்று வடக்கு மேற்குப் பெருவெளியாம்
> தென்னா் புனற் கன்னி தெற்காம் உள்ளான
> ஆண்ட கடல் கிழக்கைம் பத்தாறு காதம்
> பாண்டி நாட்டெல்லைப் பதி"

என்னும் பழந்தமிழ்ப் பாடலும் காட்டுகிறது. பாண்டியப் பேரரசு ஐம்பத்தாறு காதம் பரப்பளவுடையதாக விளங்கியது.

**மலைகளும் ஆறுகளும்**

பாண்டிய நாட்டின் பொதியமலை சங்க இலக்கியங்களில் சிறப்பாகப் பேசப்படுகிறது. பொதியிலில் விளையும் சந்தனம் உலகப் புகழ் பெற்று விளங்கியது. இச்சந்தனம் மேலை நாடுகளுக்கு ஏற்றுமதியானது. முருகக் கடவுள் இருப்பிடமாகிய பரங்குன்று பாண்டிய நாட்டின்பாற்பட்டதாகும். பாண்டிய நாட்டில் வையை, பொருநை போன்ற ஆறுகள் பாய்ந்து நாட்டைச் செழுமையுறச் செய்தன.

**நகரங்கள்**

பாண்டிய நாட்டின் தலைநகரமாக மதுரை மாநகரம் விளங்கியது. கொற்கை மிகச் சிறந்த வணிகத் தலமாகவும் துறைமுகமாகவும் விளங்கியது. மேலும் தொண்டி, பிசி, மோகூா் போன்ற நகரங்களும் சிறப்புடன் விளங்கின. மதுரை – மதுரா, மோதுரா என்றும் கொற்கை – கொல்கிஸ், தொண்டி – திண்டிஸ் என்றும் மேலைநாட்டாா் குறித்தனா். தென்மதுரையும் கபாடபுரமும் பாண்டிய நாட்டின் தலைநகரங்களாக இருந்து பின் கடல்கோளால் அழிவுற்றன என்பா்.

**பாண்டிய நாட்டின் வளங்கள்**

பாண்டிய நாட்டில் நெல்லும் நீரும் மக்களுக்கு மிக எளிதாகவும் மிகுதியாகவும் கிடைத்த வண்ணம் இருக்கும். மேலும் பெறுதற்குரிய பொருள்களாகிய பொதியமலைச் சந்தனமும் தென்கடல் முத்தும் மிகுதியாகக் கொண்டிருந்தது. நெல், நீர், முத்து, சந்தனம் ஆகிய பொருள்களை மிகுதியாகவுடைய இந்நாட்டை வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி ஆட்சி செய்து வளமுறச் செய்தான்.

"நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளியஎன
வரைய சாந்தமும் திரைய முத்தமும்
இமிழ்குரல் முரசம் மூன்றுடன் ஆளும்
தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே"[67]

எனத் தமிழ் நிலைபெற்று விளங்கும் மதுரைக்குத் தலைவனான இப்பெருவழுதி பாராட்டப்படுகிறான்.

பாண்டிய நாடு தெய்வம் விரும்பியுறையும் பொதிய மலையினைக் கொண்டது. இவ்வுயர்ந்த மலை பக்க மலைகளைக் கொண்டதாகத் திகழ்ந்தது. இம்மலைகளில் நெடியதாய் வளரும் தன்மையுடைய அழகிய மூங்கில்களும் கிளைத்த ஒளி பொருந்திய காந்தள் மலர்களும் நிறைந்திருந்ததை,

"திண்தேர்ச் செழியன் பொருப்பின் கவாஅன்
நல்லெழில் நெடுவேய்"[68]

"அணங்குடை உயர்நிலைப் பொருப்பிற் கவாஅன்
சினைபொண் காந்தள் நாறும்"[69]

என்னும் பாடல்கள் புலப்படுத்துகின்றன. மேலும் சென்றடைவதற்கு அரிய உச்சியினைக் கொண்டு விளங்கும் பொதிய மலையின் உச்சியிலிருந்து அருவிகள் எக்காலத்திலும் ஆர்ப்பரித்தவாறு வீழ்ந்த வண்ணம் இருக்கும். இதனை,

"தென்னவன் பொதியில்
அருஞ்சிமை இழிதரும் ஆர்த்துவரல் அருவி"[70]

என்ற அகப்பாடல் வரிகள் சுட்டுகின்றன. தென்திசையில் அமைந்த பேராற்றல் மிக்க நாடாகப் பாண்டிய நாடு விளங்கியது. இங்கு மண்ணாலான

புற்றினையுடைய காட்டரண்கள் நெருங்கிய மரங்களையுடையதாய் இருக்கும். இங்குத் தோண்டப்படாமலேயே இயற்கையாய் அமைந்த பொய்கைகளில் அருவிநீா் விழுந்தவண்ணம் இருக்கும் என்பதை அகநானூறு (342) பாடல் மூலம் அறியமுடிகிறது.

மலைகள் காய்ந்து போகும்படி மிகுதியான வேனில் காலத்தில் வானம் மழைபொழிவதை மறந்தது. தினந்தோறும் வரும் விண்மீன்களும் திசை மாறின. எனினும் பாண்டிய நாட்டின் ஆறுகளில் வெள்ளம் பெருகி விளைச்சலும் அதிகமானது. நெற்பயிா்கள் வளா்ந்து உரசுவதால் ஏற்படும் ஓசை இனிமையுடையதாக இருக்கும். இங்கு கதிா் அறுப்பவா்களின் ஆரவாரம் மிகுதியாயிற்று. பறவைகளின் கத்துகின்ற ஓசை இசைபோல ஒலித்தது. அகன்ற கடலில் சுறாமீன்கள் தம்முள் மாறுபட்டு செருக்கத் திரியும். நிலவைப் போன்ற மணலையுடைய கடற்கரையில் குடமுழவு போலத் தென்னை காய்களைத் தரும்.

“கல்காயும் கடுவேனிலொடு
இருவானம் பெயல் ஒளிப்பினும்
வரும் வைகல் மீன்பிறழினும்
வெள்ளம் மாறாது விளையுள் பெருக
நெல்லின் ஓதை அரிநா் கம்பலை
புள் இமிழ்ந்து ஒலிக்கும் இசையே என்றும்
சலம்புகன்று சுறவுக்கலித்த
புலவுநீா் வியன்பௌவத்து
நிலவுக்கானல் முழவுத்தாழை”[71]

என்னும் இப்பாடலடிகள் பாண்டிய நாட்டின் வளங்களைக் கூறுகின்றன. மேலும் இந்நாடு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலங்களையும் உடையதாகத் திகழ்ந்தது.

பாண்டிய நாட்டின் மருதநிலப் பகுதிகளில் மழைநீரானது ஆறாகப் பெருக்கெடுத்துக்கொண்டு ஓடிப் பொய்கைகள், பள்ளங்கள் மற்றும் பிற நீா்நிலைகளையும் நிரப்பும். களிறுகளும் நடுங்கும் வண்ணம் மழை பொழியும். நீா்நிலைகளில் தாமரை, நெய்தல், நீலம், ஆம்பல் முதலிய மலா்கள் நிறைந்து காணப்படும். தாமரை இலைகளில் கம்புட்கோழி உறங்கும். இங்குப் பரதவா்கள் வள்ளைக் கொடிகளைத் தள்ளிவிட்டு வலைகளை வீசி

மீன்பிடிப்பர். அம்மீன்களை வெட்டுவதால் ஓசையெழும். ஆலைகளில் கரும்பு காய்ச்சும் ஓசை கேட்டவண்ணமிருக்கும். கழனிகளில் உழவர்கள் களைபறிப்பதால் ஓசை ஏற்படும். மூத்த வலியற்ற எருதுகள் சேற்றில் அகப்பட்டுக்கொள்ளும்போது அதனை அப்புறப்படுத்தும் முயற்சியில் ஈடுபடுவோர் பலவாறு ஓசை எழுப்புவர். மேலும் இங்கு நெல் அறுவடையின்போது தாள் அரியும் ஓசையுடன் வலிய கையினையுடையோர் முழக்கும் பறையின் முழக்கமும் சேர்ந்தொலிக்கும். இவ்விதமாகப் பலவித ஓசைகளும் சேர்ந்து ஆரவாரத்தோடு மருத நிலம் விளங்கியது.

காடு சார்ந்த பகுதியாகிய முல்லை நிலங்களில் தினை முற்றியதால் கதிர் அறுத்த வண்ணமிருப்பர். இத்தினை மட்டுமல்லாது எள், வரகு போன்றவையும் மிகுதியாகப் பயிராகும் தன்மையதாய் இந்நிலம் விளங்கியது. இதனை,

“சிறுதினை கொய்ய கவ்வை கறுப்பக்
கருங்கால் வரகின் இங்குரல் புலர
ஆழ்ந்த குழும்பில் திருமணி கிளர”[72]

என்னும் இப்பாடலடிகள் உணர்த்தும். மேலும் இங்கு நௌவி எனும் மான் தன் பிணையோடு துள்ளி விளையாடும். பசுமையான பயிர்களின்மேல் முல்லையும் முசுண்டையும் பரந்து காணப்படும்.

பாண்டிய நாட்டின் குறிஞ்சிநில மக்கள் மலையகத்தே உள்ள அகில், சந்தனம் ஆகிய மரங்களை வெட்டிய மேட்டு நிலங்களில் தோரை எனும் நெல்லையும் வெண்சிறு கடுகையும் விளைவித்து அறுவடை செய்வர். ஐவன நெல் எனும் வெண்ணெல்லை விதைத்து அதனிடையே இஞ்சி, மஞ்சள், மிளகு போன்றவற்றை ஊடுபயிராக விதைப்பர். விளைந்த இப்பண்டங்களைக் கல் தரையில் குவித்து வைப்பர்.

“நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய
குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி
ஐவன வெண்ணெல்லோடு அரில்கொள்பு நீடி
இஞ்சி மஞ்சள் பைங்கறி பிறவும்”[73]

என்னும் பாடல் வரிகள் குறிஞ்சி நிலத்தில் விளையும் பயிர்களைப் பட்டியலிடுகின்றன. இம்மலைகளில் விளையும் தினையினைக் கொத்தவரும்

கிளிகளை விரட்டும் ஓசை ஒருபக்கமும் அவரையைத் தின்னும் காட்டுப்பசுவினை விரட்டும் ஆரவாரம் ஒருபக்கமும் கேட்கும். இங்கு மூடிய வாயையுடைய பொய்க்குழிகளில் விழுந்த ஆண்பன்றியைக் கொன்றதாலும் வேங்கை மலர்களைப் பறிக்கும் பெண்கள் 'புலி – புலி' எனக் கத்துவதாலும் ஆரவாரம் எழும். இவற்றோடு சேர்ந்து அருவிகளின் ஓசை பக்க மலைகளிலும் எதிரொலித்த வண்ணமாக விளங்கியது பாண்டிய நாடு என்று மதுரைக்காஞ்சி (291 – 301) விவரிக்கின்றது.

வளமற்றுக் காய்ந்து வறண்ட தன்மையுடன் பாலை நிலம் விளங்கியது. யானைகளும் வேறிடம் தேடிச் செல்லும் நிலையெய்தியது. ஊகம்புல் வைக்கோல் போலக் காட்சியளித்தது. இங்கு வழிப்பறி அதிகம் நடக்கும் என்பதால் காவலர்கள் வில்லேந்திய வண்ணம் நாற்சந்திகளில் காவல் புரிந்து அவ்வழியே செல்லும் மக்களுக்குப் பாதுகாப்பளித்தனர்[74] என்பதை மதுரைக்காஞ்சி வாயிலாக அறியமுடிகிறது.

பாண்டிய நாட்டு நெய்தல் நிலமாகிய கடலில் ஒளிபொருந்திய முத்துக்கள் பெறப்பட்டன. இவை உலகப் புகழ்பெற்று விளங்கின. அம்முத்துக்களை ரோமானியப் பெண்மணிகள் அதிக அளவில் உபயோகப்படுத்தினர். இம்முத்துக்கள் இங்கு வாங்கப்பட்ட விலையைப்போல நூறுமடங்கு அதிக விலைக்கு விற்கப்பட்டதை வெளிநாட்டு அறிஞர்களின் நூல்கள் வாயிலாக அறிய முடிகிறது. இங்கு அரத்தால் அறுக்கப்பெறும் சங்கு வளையல்களும் மிகுதியாகக் கிடைத்தன. வெண்மையான உப்பு, கரும்பு வெல்லம் கூட்டிப் பொறித்த புளி, மீன் உணக்கல் மற்றும் பல்வேறு பண்டங்களும் ஏற்றுமதியாயின. இப்பொருட்களை ஏற்றிச்செல்கின்ற கப்பல்கள் குதிரைகளை இறக்குமதி செய்தன. எனவே நெய்தல் நிலத்தில் வாணிகம் வெகுசிறப்புடன் நடைபெற்றது. இதனை,

"விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கலன் உய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவியொடு அனைத்து
வைகல்தோறும் வழிவழிச் சிறப்ப
நெய்தல் சான்ற வளம்பல பயின்றாங்கு"[75]

என்னும் மதுரைக்காஞ்சியின் அடிகள் காட்டுகின்றன. இவ்வாறு பல்வேறு வளங்களையும் கொண்டதாகப் பாண்டிய நாடு திகழ்ந்திருந்ததை அறியமுடிகிறது.

### பாண்டிய நாட்டை ஆட்சி செய்த வேந்தர்கள்

பாண்டிய நாட்டை ஆட்சி செய்யும் வேந்தர்கள் பாண்டியர், கவுரியர், தென்னவன் என்னும் பொதுப்பெயர்களிலும் செழியன், வழுதி, நம்பி, மாறன், பூழியன், பஞ்சவன் என்னும் சிறப்புப் பெயர்களிலும் அழைக்கப்பட்டனர். சங்க இலக்கியங்களில் 24 பாண்டியர்களைப் பற்றி அறியமுடிகிறது. இவர்கள் மீன் கொடியையும் வேம்பின் தாரையும் குடிச்சின்னமாகக் கொண்டவர்கள். பாண்டிய வேந்தர்கள் சந்திர குலத்தைச் சேர்ந்தோர் எனப் பழந்தமிழ் நூல்கள்[76] கூறும்.

### ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்

ஒல்லையூர் நாட்டைக் கைப்பற்றியதால் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என அழைக்கப்பெற்றான். இவன் காலத்தில் கூடலை அகுதை ஆட்சி செய்தான். பூதப் பாண்டியன் கொற்கையில் ஆட்சி செய்தான். இவன் ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டைச் சுற்றிப் பல நாடுகள் இருந்தன. பூதப்பாண்டியனை அகுதை கொன்றான்.

### நெடியோன்

இவ்வேந்தன் நெடியோன் என்றும் நெடுந்தேர்ச் செழியன் என்றும் அழைக்கப்பட்டான். இவன் பூதப்பாண்டியனின் மகனாவான். தன் தந்தையைக் கொன்ற அகுதையைக் கொன்று கூடலில் தன் ஆட்சியை நிலைநாட்டினான். இவன் போர்களை மேற்கொண்டு நாடுகளைக் கைப்பற்றிப் பாண்டிய நாட்டின் எல்லையை விரிவுபடுத்தியதால் 'நிலந்தரு திருவின் நெடியோன்' எனப் பெயர் பெற்றான். சாலியூர் எனும் துறைமுகத்தைக் கைப்பற்றினான்.

### பசும்பூண் பாண்டியன்

பசும்பூண் பாண்டியன் காலத்தில் பாண்டிய நாட்டின் எல்லைகள் விரிவாக்கப்பட்டன. இவ்வேந்தன் பொதிய மலைமீது படையெடுத்துச் சென்று அதிகனைச் சரணடையச் செய்தான். (அகம். 162). நீடூரை ஆட்சி செய்த எவ்வியைத் தன்கீழ்க் கொண்டு வந்தான். கொங்கரை விரட்டிக் கொங்கு

நாட்டுப் பகுதிகளைக் கைப்பற்றினான். எனவே இவன் நாடுபலதந்த பசும்பூண் பாண்டியன் என அழைக்கப்பட்டான்.

### பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி

இவ்வேந்தன் வடநாட்டு ஆரியப் பார்ப்பணியக் கருத்துக்களைத் தன் நெறியாகக் கொண்டவன். யாகங்கள் பல செய்து பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி எனப் பெயர் பெற்றான். போர்மேற் செல்லும்முன் பசு, பார்ப்பார், பெண்கள், நோயுற்றோரைப் பாதுகாப்பான இடத்திற்குச் செல்லும்படி எச்சரித்துவிட்டுப் பின் போரைத் தொடங்குவான் எனப் புறநானூற்றின் ஒன்பதாம் பாடல் கூறுகிறது.

### ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

தமிழகத்தின்மீது படையெடுத்து வந்த ஆரியப்படைகளை வெற்றி கண்டான். மூவேந்தருள் இவனே சிறப்பான வெற்றி பெற்றதால் ஆரியப்படை கடந்த எனும் அடைமொழியோடு அழைக்கப்பட்டான். இவ்வேந்தன் கல்வியின் சிறப்பை உணர்ந்து பாடியுள்ளதைப் புறப்பாடல்கள் வாயிலாக அறியமுடிகிறது.

### தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்

சங்ககாலப் பாண்டியர்களில் தலைசிறந்தவனாக இந்நெடுஞ்செழியனே விளங்குகின்றான். இவன்மேல் படையெடுத்து வந்த இருபெரு வேந்தரையும் வேளிர் ஐவரையும் விரட்டிச் சென்று சோழநாட்டுத் தலையாலங்கானத்தை வென்றான். இவ்வெற்றியைச் சங்கப்பாடல்கள் சிறப்பித்துக் கூறுகின்றன. இவன் பொதிய மலையைத் தன்வசமாக்கிக் கொண்டான். எவ்வியின் மிழலைக் கூற்றத்தையும் வேளிரின் முத்தூற்றுக் கூற்றத்தையும் கைப்பற்றினான். சேரநாட்டு முசிறியை முற்றுகையிட்டு அங்கிருந்த முருகப் பெருமான் தெய்வச் சிலையைப் பரங்குன்றில் நிலைநிறுத்தினான். நாடெங்கும் நீர்நிலைகளைத் தோற்றுவித்துப் பாண்டிய நாட்டை வளம்பெறச் செய்ததைப் (புறம். 18, நற். 340) பாடல்கள் வாயிலாக உணரமுடிகிறது.

### பாண்டியன் மாறன் வழுதி

இப்பாண்டியன் தமிழகம் மூவர்க்கும் பொது என்ற சொல்லைப் பொறுக்க மாட்டாது படையெடுத்துத் தன்கீழ்க் கொண்டுவந்தான் எனப் புறம்

51 கூறும். இவன் வடபுலத்தில் உள்ள மன்னர்கள் வாடும்படிப் போர் செய்தான் (புறம். 52). இவன் கூடகாரம் எனுமிடத்தில் இறந்ததால் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி எனப் பெயர் பெற்றான்.

**இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்**

இவ்வேந்தன் சோழநாட்டின்மீது படையெடுத்துச் சென்று சோழ மன்னனைச் சோழ நாட்டினின்றும் விரட்டி ஓடச் செய்தான் (புறம். 57). இம்மன்னன் மிகுந்த படைபலத்துடனும் செல்வ மிகுதியுடனும் இருந்தாலும் புலவர்க்கு ஈயாத கஞ்சனாக விளங்கியதைப் புறம் 196, 198 பாடல்கள் கூறுகின்றன.

**கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி**

இப்பாண்டிய வேந்தன் நெருங்குதற்கு அரிய கானப்பேரெயில் எனும் கோட்டையைக் கைப்பற்றினான். அகநானூற்றைத் தொகுப்பித்தான். பெருநற்கிள்ளியின் இராசசூய வேள்வியில் கலந்து கொண்டான்.

மேற்கூறிய இவ்வேந்தர்கள் மட்டுமல்லாது கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி, கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, அறிவுடை நம்பி, வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன் போன்றவர்களும் பாண்டிய நாட்டினைச் சிறப்பாக ஆட்சி செய்துள்ளனர்.

**பாண்டிய நாடு பேரரசாக உருவான விதம்**

சங்ககாலத் தொடக்கத்தில் பாண்டியர் கொற்கையைத் தலைமையாகக் கொண்டு பாண்டிய நாட்டை ஆட்சி செய்தனர். அந்தச் சமயத்தில் மதுரை கூடல் என்னும் பெயரில் அகுதையின் ஆட்சியின்கீழ் இருந்தது. அதுபோல பொதியிலை அதிகன் என்பவன் ஆட்சி செய்தான் எனப் பூதப்பாண்டியனே (அகம். 25) கூறுகிறான். மெகஸ்தனிஸ் பாண்டிய நாட்டைக் கூறுமிடத்து 365 ஊர்களைக் கொண்டதாக விளங்கிற்று என்பார். பூதப்பாண்டியன் ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டைச் சுற்றிப் பல சிறுநாடுகள் இருந்தன எனப் புறம் 971) கூறும். இவன் ஒல்லையூர் நாட்டைக் கைப்பற்றிப் பாண்டிய நாட்டோடு இணைத்தான். எனவே பூதப்பாண்டியனுடன் பாண்டியப் பேரரசு தொடங்கியது எனக் கருதலாம்.

கூடலை ஆட்சி புரிந்த அகுதைமீது படையெடுத்துச் சென்று அவனை வென்றான் நெடியோன். இவன் பாண்டிய நாட்டைக் கொற்கை முதல் மதுரை வரை விரிவுபடுத்தினான். இதனைப்

"பேரிசைக் கொற்கைப் பொருநன் வென்வேற்
கடும்பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன்
மலிபுரை நெடுநகர்க் கூடல் நீடிய
மலிதரு கம்பலை"[77]

எனப் பேராலவாயர் என்னும் புலவர் அகநானூற்றில் பாடுகிறார். இப்பாடலால் பாண்டியரின் ஆட்சி மதுரையில் அமைக்கப்பட்டதை ஊகிக்க முடிகிறது.

பொதியமலைத் தலைவனான அதிகனை வென்று பாண்டிய நாட்டோடு இணைத்தான் பசும்பூண் பாண்டியன். இவன் நீடூரை ஆட்சி செய்த எவ்வியைத் தன்கீழ்க் கொண்டு வந்ததை,

"யாழ்இசை மறுகின் நீடூர்க் கிழவோன்
வாய்வாள் எவ்வி ஏவல்மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருந்தல்"[78]

எனும் பாடல் சான்று கூறும். இவ்வேந்தன் பாண்டிய நாட்டின் வடபகுதியில் அமைந்த கொங்குநாட்டின்மேல் படையெடுத்துச் சென்று கொங்கர்களை விரட்டியடித்து அங்குப் பாண்டியரைக் குடியமர்த்தினான்.

"வாடாப் பூவின் கொங்கர் ஓட்டி
நாடுபல தந்த பசும்பூண் பாண்டியன்"[79]

பல நாடுகளை வென்றதால் பலநாடுகளையும் தந்தவன் எனப் பெயர்பெற்றான் பசும்பூண் பாண்டியன். அதுபோலத் தன்மேல் படையெடுத்து வந்த இருபெரும் வேந்தர், வேளிர்களை முறியடித்தது மட்டுமல்லாது தலையாலங்கானத்தையும் வென்று பாண்டிய நாட்டோடு சேர்த்தான் பாண்டியன் நெடுஞ்செழியன். மேலும் மிழலை, முத்தூறு, சாலியூர் போன்ற பகுதிகளும் பாண்டியப் பேரரசோடு இணைக்கப்பட்டன.

சோழநாட்டின்மீது படையெடுத்துச் சென்று சோழனை விரட்டினான் பாண்டியன் நன்மாறன். பின்னர் சோழன் மீட்டுக் கொண்டான். சேரர்களின் குட்டநாட்டுப் பகுதிகளை வென்றதால் "பல்குட்டுவர் வெல்கோவே" (மதுரைக். 105) எனப் பாராட்டப்பட்டான். சேரரின் முசிறியை முற்றுகையிட்டான்.

வேங்கை மார்பனின் கானப்பேரெயிலையும் வென்று தன் நாட்டோடு இணைத்தான் உக்கிரப் பெருவழுதி. இவ்வாறு பல பகுதிகளையும் வென்று பாண்டிய நாட்டோடு இணைக்கப்பட்டு பேரரசு நாடாக நிலைபெறச் செய்தனர் பாண்டிய வேந்தர்.

**சிற்றரசு நாடுகள்**

குறிஞ்சி மற்றும் முலல்ல நிலப்பகுதிகளில் அமைந்த நாடுகள், அரசுகள் சிற்றரசு நாடுகளாக அமைந்தன. இங்கு மழையை நம்பிப் புன்புலங்களில் வேளாண்மை நடைபெற்றது எனினும் மலைகள் வளம் சார்ந்த பகுதிகளாகவும் ஒருசில இடங்களில் காணமுடிகின்றது. ஆனால் இச்சிற்றரசு நாடுகள் பேரரசுகளைப் போலப் பொருளாதாரத்தில் மேம்பட இயலவில்லை. "இனக்குழு சமுதாயத்தினுடைய எச்சங்களைச் சிற்றரசு நாடுகளில் பார்க்கமுடியும்"[80] என்பார் பெ. மாதையன். சிற்றரசு நாடுகள் சிறுநாடுகள், குறுநாடுகள், அகநாடுகள் என்னும் பெயர்களிலும் வழங்கப்பட்டன. இவை இயற்கை வளம் மிகுந்த மலைகளைக் கொண்டிருந்ததால் மருத நிலங்களில் அமைந்த பேரரசர்களால் கவரப்பட்டுள்ளன. இம்மலைகள் பொருளாதாரப் பெருக்கத்திற்கு உதவும் என்ற நோக்கிலும் தன் நாட்டின் எல்லைகளை விரிவுபடுத்தும் முயற்சியிலும் ஈடுபட்ட பேரரசுகள் சிற்றரசு நாடுகளைத் தன் ஆளுகைக்குக் கீழ்க் கொண்டுவர முயற்சித்தனர். இதன் விளைவாகச் சிற்றரசு நாடுகள் பலவும் பேரரசுகளின்கீழ்ச் சென்றன. சிற்றரசுகள் மலையும் மலையைச் சார்ந்த சிறுபகுதிகளை மட்டும் உள்ளடக்கிய சிறிய நிலப்பரப்பைக் கொண்டதாலும் பேரரசுகளைப் போலப் படைபலங்கள் இல்லாத காரணத்தாலும் தோல்வியைத் தழுவிட நேரிட்டது. ஒருசில சிற்றரசர்கள் மூவேந்தர்களுக்கும் அடங்காது சுதந்திரமாகவும் ஆட்சி செய்துள்ளனர். சங்க காலத்தில் கொங்குநாடு, பூழிநாடு, துளுநாடு, பறம்புநாடு, தொண்டைநாடு, மலாடு, பொதியில்நாடு, பொதினிநாடு, கொல்லிநாடு, தகடூர்நாடு, கண்டீரநாடு, விச்சிநாடு, எருமைநாடு, வேங்கடநாடு, ஒய்மாநாடு முதலான பல சிற்றரசு நாடுகள் இருந்தன.

**சிற்றரசர் மரபு**

சங்க காலத்தில் சிற்றரசர்கள் பெரும்பாலும் மலையும் மலை சார்ந்த நிலப்பகுதியையும் ஆட்சி செய்துள்ளனர். புறநானூற்றின் பல பாடல்கள் இவர்களை மலைக்குத் தலைவர்களாகவே காட்டியுள்ளன. இவர்கள்

நிலைத்த தன்மையுள்ள மன்னன் என்றே அழைக்கப்படுகின்றனர். இவர்கள் வேளிர், மழவர், திரையர், ஆவியர், அதியர், ஓவியர் போன்ற பல குடிவழி வந்தவர்களாகக் காணப்படுகின்றனர். தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் ஆட்சி செய்துள்ளனர். குறிஞ்சி, முல்லை நிலப்பகுதிகளை ஆட்சி செய்யும் இவர்கள் கொடைப்பண்பு மிக்கவர்களாகவும் மக்களோடு கலந்த எளிமையான வாழ்க்கையை மேற்கொண்டவர்களாகவும் திகழ்ந்தனர். தன் கொடைத்தன்மையால் வறுமை எய்தியபோதும் மீண்டும் வருவோர்க்குக் கொடையளிக்கப் பொருள் இல்லாத காரணத்தால் படைக்கலம் செய்வோனிடம் வாள் வேண்டி நிற்பதைப் புறநானூறு புகலும். பாரி, ஓரி, காரி, அதியன், பேகன், ஆய், நள்ளி ஆகியோர் கொடைச் சிறப்பால் கடையெழு வள்ளல் எனப் போற்றப்பட்டனர். இவர்கள் மட்டுமல்லாது குமணன், நல்லியக்கோடன், இளந்திரையன், பாணன் போன்றோரும் வள்ளல்களாகப் போற்றப்படுகின்றனர். தொல்காப்பியர் சிற்றரசர்களுக்கு உரியவற்றைக் கூறுமிடத்து,

> "வில்லும் வேலும் கழலும் கண்ணியும்
> தாரும் மாலையும் தேரும் வாளும்
> மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய"[81]

எனக் குறிப்பிடுகிறார். சிற்றரசர்கள் பேரரசர்களைப் போன்று கொடி, குடை, முடி, படை ஆகியவற்றை வைத்திருக்க உரிமையில்லாதவர்களாகச் சுட்டப்படுகின்றனர். படை வைத்திருப்பினும் சிறுபடையே வைத்திருந்தனர். இதனைப் புறநானூற்றுப் பாடல்கள் காட்டுகின்றன.

### கொங்குநாடு

கொங்கு என்னும் சொல்லுக்குப் பூந்தாது, மணம், தேன் போன்ற பல பொருள்கள் உண்டு. "கொங்கு நாடு முழுவதும் பெருமலைத் தொடர்களும் சிறு மலைகளும் குன்றுகளும் மிகுந்துள்ளன. அம்மலைகள் இன்று மலங்காடுகள் என்றே வழங்குகின்றன. பண்டு கொங்கு நாடெங்கும் மரஞ்செடி கொடிகள் மிகுந்து தழைத்துப் பூத்து மணங்கமழ்ந்ததாலும் தேன் மிகுதியாக இருந்ததாலும் இப்பெயரிட்டு அழைத்தனர்"[82] என்பார் புலவர் குழந்தை. கொங்குநாடு தமிழகத்தின் இடைநடுவே கடற்கரை இல்லாத உள்நாடாக அமைந்திருந்தது. இந்நாடு தெற்கே பாண்டிய நாடும் மேற்கே மேற்குத் தொடர்ச்சி மலைகளும் வடக்கே எருமைநாட்டின் மைசூர்ப் பகுதியும் கிழக்கே

சோழநாடு, தொண்டை நாட்டையும் தன் எல்லையாகக் கொண்டு விளங்கியது. கொங்கு நாட்டின் எல்லையை,

"வடக்குத் தலைமலையாம் வைகாவூா் தெற்கு
குடக்கு வெள்ளிப் பொருப்புகுன்று – கிழக்கு
கழித்தண்டலை சூழும் காவிரிசூழ் நாடா
குழித்ததண் டலையளவே கொங்கு"

எனக் கூறுகின்றது பழந்தமிழ்ப் பாடல்.

கொங்குநாடு குறிஞ்சி நிலமான மலைகளையும் முல்லை நிலமான காடுகளையும் மிகுதியாகக் கொண்டிருந்தது. நெற்பயிராகும் மருத நிலம் அரிதாகக் காணப்படும். பரந்த நிலப்பரப்பைக் கொண்ட கொங்குநாடு முழுமையும் ஒரே அரசரால் ஆளப்படவில்லை. வேளிர்கள் பலர் ஆங்காங்கு ஆட்சி செய்தனர். ஒவ்வொரு மலையையும் ஒரு தனி மன்னன் ஆட்சி செய்தான். எனவே கொங்குநாடு பல சிற்றரசர்களையும் உள்நாடுகளையும் கொண்டதாகத் திகழ்ந்தது. "கொங்குநாட்டிலிருந்த ஊர்கள், மலைகள், ஆறுகள் முதலியவற்றின் முழு விவரங்கள் சங்க நூல்களில் கிடைக்கவில்லை. சில பெயர்களே தெரியவருகின்றன"[83] எனக் கூறுவார் மயிலை சீனி வேங்கடசாமி.

**கொங்குநாட்டு மக்கள்**

குவியற் கண்ணியினைச் சூடும் கொங்குநாட்டு மக்கள் ஆடுமாடுகளாகிய கால்நடைகளைச் செல்வங்களாகக் கொண்டவர்கள். இவர்கள் மிகுந்து பரவிய பசுக்கூட்டங்களைக் கொண்டிருந்தனர். இதனை,

"ஆகெழு கொங்கர் நாடு"[84]
"கொங்கர் ஆபரந் தன்ன"[85]

என்னும் பதிற்றுப்பத்தின் பாடலடிகள் காட்டும். காடுகளிலும் மலைகளிலும் ஆநிரைகளை மேய்க்கும் இவர்கள் வலிமையான கையினை உடையவர்கள். வறண்ட காலங்களில் பசுக்களுக்கு நீரருந்தச் செய்யும் பொருட்டு கிணறு தோண்டுவர். தீப்பொறி உண்டாகும்படிப் பாறைகளை வெட்டி மிக்க உவர்ப்புடைய கிணறுகளை உண்டாக்குவர். இக்கிணற்றில் ஊறும் நீரை உண்ணவேண்டி பசுக்கள் விரைந்து செல்லும். அப்பொழுது எழுகின்ற புழுதி வானை மறைத்து நிற்கும்.

"தோட்பதன் அமைந்த கருங்கை ஆடவர்
கணைபொறி பிறப்ப நூறி வினைப்படர்ந்து
கல்லுறுத் தியற்றிய வல்லுவர்ப் படுவில்
பாருடை மருங்கின் ஊறல் மண்டிய
வன்புலம் துமியப் போகிக் கொங்கர்
படுமணி யாயம் நீர்க்குநிமிர்ந்து செல்லும்
சேதா எடுத்த செந்நிலக் குரூஉத்துகள்"[86]

என்னும் அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது. இவ்வாறு கிணறு வெட்டும்போது குந்தாலியைக் கொண்டு வெட்டினர். இக்குந்தாலியை எந்நேரமும் தன்னுடனே வைத்திருந்ததை,

"பொன்செல் கணிச்சித் திண்பிணி உடைத்துச்
சிரறுசில ஊறிய நீர்வாய்ப் பத்தல்
கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்"[87]

என்னும் பதிற்றுப்பத்தின் இப்பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இம்மக்கள் கவண் கற்களால் எறிந்து பகைவரின் அரண்களை அழித்து வெற்றி பெறுவர். நாரால் அரிக்கப்பெற்ற கள்ளினைக் கொண்டவர்களாகத் திகழ்ந்ததை "ஆர்எயில் அலைத்த கல்கால் கவணை நார்அரி நறவின் கொங்கர்" (பதிற். 88) என்னும் அடிகளால் உணரலாம். இந்நாட்டு மக்கள் கரும்புக் கட்டியோடு கூட்டிச் செய்யப்பட்ட அவரை விதையினை உணவாகக் கொள்வர். மேலும் உள்ளி விழாவின்போது இடையில் மணியினைக் கட்டிக்கொண்டு தெருவில் ஆடும்போது மிகுந்த ஆரவாரம் ஏற்படும். இதனை,

"கொங்கர்
மணியரை யாத்து மறுகின் ஆடும்
உள்ளி விழவின்"[88]

என்னும் அகநானூற்றுப் பாடலடிகள் விளக்குகின்றன.

**கொங்கு நாட்டைக் கைப்பற்றிய அரசர்கள்**

முப்பேரரசு நாடுகளையும் தன் எல்லைகளாகக் கொண்ட கொங்குநாடு தனியொரு பேரரசன் ஆட்சி செய்யாது வேளிர் பலரால் ஆளப்பட்டது. வேளிர்களான சிற்றரசர்களை வென்று அப்பகுதிகளைத் தங்கள் நாட்டோடு இணைத்துத் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவரக் கருதினர் பேரரசர்கள். எனவே மூவேந்தரும் அவரவர் நாடுகளின் எல்லைப் பகுதிகளில்

தனித்தனியாகப் படையெடுத்து வந்து கொங்கு நாட்டைத் தாக்கினர். இயற்கையாகவே வலிமையானவர்களாகத் திகழ்ந்த கொங்கர் தங்கள் நாட்டை எளிதில் விடாது கடுமையாக எதிர்த்துப் போரிட்டனர். எனினும் தொடர்ந்து எதிர்க்க முடியாது சில நேரங்களில் தோல்வியைத் தழுவ நேரிட்டனர்.

சேரவேந்தர்கள் கொங்குநாட்டைக் கைப்பற்றித் தங்கள் ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்ததால் 'கொங்கர்கோ' என அழைக்கப்பட்டனர். இதனைப் பதிற்றுப்பத்தின் பல இடங்களில் காணமுடியும். பல்யானைச் செல்கெழுகுட்டுவன் கொங்குநாட்டின் உம்பற்காட்டைக் கைப்பற்றியதை மூன்றாம் பத்து காட்டுகிறது. பெருஞ்சேரல் இரும்பொறை கொங்குநாட்டுப் பகுதிகளான காமூர், கொல்லிமலை, தகடூர் ஆகியவற்றை வென்றான். கொல்லிமலையினைத் திருமுடிக்காரி வெற்றி பெற்று சேரரிடம் ஒப்படைத்தான். பின் இப்பெருஞ்சேரல் இரும்பொறை தகடூர் நாட்டின்மீது போர்தொடுத்துச் சென்று கைப்பற்றினான். இரும்பொறை, விச்சிமலைப் பகுதியை இளஞ்சேரல் கைப்பற்றினான். எனவே சேரர்கள் பொதுவாக 'கொங்கர்கோ' என அழைக்கப்பட்டனர்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் கொங்கர்களைப் புறந்தோடச் செய்ததைக் 'கொங்கு புறம் பெற்ற கொற்ற வெற்தே' (புறம். 373) என்னும் இப்புறப்பாடலடி புலப்படுத்தும். பசும்பூண் பாண்டியன் பொன்னால் செய்த பூக்களை அணியும் கொங்கரை விரட்டியடித்து அவர்தம் நாடுகள் பலவற்றைக் கைப்பற்றியதை,

"வாடாப் பூவிற் கொங்கர் ஓட்டி
நாடுபல தந்த பசும்பூண் பாண்டியன்"[89]

எனும் அகநானூற்றுப் பாடல் காட்டுகின்றது.

### கொங்குநாட்டின் உள்நாடுகள்

கொங்குநாடு கொல்லிமலைநாடு, குதிரைமலை, தகடூர்நாடு, பொதினிநாடு, கட்டிநாடு முதலான உள்நாடுகளைப் பெற்றிருந்தது. இதனைப் பல வேளிர்கள் ஆட்சி செய்தனர் என்பதை அறியமுடிகிறது.

**கொல்லிமலை**

கொங்குநாட்டில் மிகவும் புகழ்வாய்ந்த மலையாகக் கொல்லிமலை விளங்கியது. சங்கப் பாடல்கள் கொல்லிமலையை நீண்ட நெடிய மலையெனக் கூறுகின்றன. இம்மலை இன்றும் இப்பெயருடனே அழைக்கப்பட்டு சிறப்பானதொரு இடமாக விளங்குகிறது. இங்குக் காந்தள் மிகுதியாக மலரும். இப்பூங்கொத்துகளில் தேனை நுகர்ந்த வண்டுகள் தேன்கூடு கட்டும். இங்குக் குதிரைகளில் செல்வதால் கற்பாறைகளிலும் சிறிய பாதை உண்டாகியிருக்கும்.[90] இம்மலையில் தெய்வத்தால் செய்ததைப் போன்றதொரு சிலையழகு மிக்கதும் கொல்லும் தன்மையுடையதுமான கொல்லிப்பாவை இருக்கும். இக்கொல்லிப்பாவை பலராலும் புகழப்படுகிறது.

"தேன்உடை நெடுவரைத் தெய்வம் எழுதிய
வினைமாண் பாவை"[91]

"பேஎமுதிர் கொல்லிக் கருங்கண் தெய்வம்"[92]

"வல்லவன் தைஇய பாவைகொல்"[93]

என்பன போன்ற பல பாடல்களும் கொல்லிப்பாவை அழகு மிக்கது என வருணிக்கின்றன.

கொல்லிமலை எக்காலத்தும் முழுமதிநாள் போன்று ஒளிவீசி விளங்கும். இங்கு மயில்கள் செருக்குடன் திரியும். உயர்ந்த உச்சியினைக் கொண்ட மூங்கில் வளரும் தன்மையுடையதாய் இம்மலை விளங்கியது. இம்மலையிலிருந்து வீழுகின்ற அருவி சாரல்போல நாற்திசைகளிலும் சிதறி விழும். கார்காலத்தில் பலவித மலர்களும் நிறைந்து மணம் வீசியபடி இருக்கும். இம்மலையில் விளையும் வேர்ப்பலா மிக்க பயனுடையதாய்ச் சுவையுடன் இருக்கும். சுரபுன்னை மரங்களையும் குறும் மலைகளையும் கொண்டு விளங்கியது.

கொல்லிமலைக்குத் தலைவனாக வல்வில் ஓரி விளங்கினான். இவன் இயற்பெயர் ஆதன் ஓரி. இவன் 'மாவள் ஓரி', 'மாரி வண்மகிழ் ஓரி', 'வல்வில் ஓரி' என்றும் அழைக்கப்பட்டான். ஓரியினுடைய கொல்லிமலை என்றே வழங்கப்பட்டதை,

"ஓரி
பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி"[94]

"வல்வில் ஓரி கொல்லிக் குடவரை"[95]

"கொல்லி யாண்ட வல்வி லோரியும்"[96]

என்னும் சங்கப் பாடல்கள் உணர்த்தும். ஓரி வேட்டையாடுவதில் வல்லவன். வலிய வில்லாளன். இவன் எய்த அம்பு ஒரு யானையை வீழ்த்தி, யானைமேல் பாய இருந்த புலியின் வாயில் ஊடுருவிக் கொன்று, அவ்வழியே நின்ற கலைமானை மாய்த்து, அதற்கு அண்மையிலிருந்த காட்டுப்பன்றியினுடைய உயிரைக் குடித்து, அங்கு ஒரு புற்றின்கண் இருந்த உடும்பினையும் கொல்லும் திறம் வாய்ந்தது என வன்பரணர் புறநானூற்றில் பாடியுள்ளார்.

மலையமான் திருமுடிக்காரி எனும் மன்னன் ஓரியின் பகைவனாவான். சேரரின் படைத்தலைவனான இவன் ஓரியைக் கொன்று, கொல்லிமலையினைச் சேரர் வசம் ஒப்படைத்தான். இதனை,

"செவ்வேல்
முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி
செல்லா நல்லிசை சேரலர்க் கீத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி"[97]

எனும் அகப்பாடல் தெரிவிக்கின்றது. அதுமுதல் கொல்லிமலை சேரர்க்குரியதாக மாறியது. திருமுடிக்காரி ஓரியைக் கொன்று கொல்லிமலையினுள் நுழையும்போது ஓரியின் உறவினர் பேரிரைச்சலிட்டதை,

"பழவிறல்
ஓரிக் கொன்ற ஒருபெருந் தெருவில்
காரி புக்க நேரார் புலம்போல்
கல்லென் றன்றால் ஊரே"[98]

என்னும் பாடல் உணர்த்துகின்றது. பின்னர் கொல்லிமலையினை இரும்பொறைவழிச் சேரர்கள் ஆட்சி செய்தனர். பொறையன் கொல்லி என வழங்குவது மரபாயிற்று. இதனை,

“வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை”[99]

“கொல்லிப் பொருந! கொடித்தேர்ப் பொறைய”[100]

முதலான பாடல்கள் புலப்படுத்துகின்றன. இவ்வாறு ஓரியின் கொல்லிமலை பொறையரின் கொல்லியாயிற்று.

**தகடூர் நாடு**

கொங்குநாட்டின் ஒரு பகுதியாகத் தகடூர் நாடு விளங்கியது. தகடூரைத் தலைநகராகவும் அதனைச் சுற்றிய பகுதிகளைக் கொண்டதாகவும் இந்நாடு விளங்கியது. இன்றைய தருமபுரி, கிருஷ்ணகிரி, அரூர், ஒசூர் பகுதிகளைக் கொண்டிருந்தது. “ஒருகாலத்தே வடக்கில் மைசூர் வரையிலும் தெற்கே நாமக்கல் வரையிலும் பரவியிருந்தது”[101] என்பர். ஆனால் அதற்குச் சான்றுகள் இல்லை. இன்றைய தருமபுரியே அன்றைய தகடூராக இருந்தது. தருமபுரிக்குத் தெற்கே அமைந்துள்ள அதமன்கோட்டை சங்ககால அதியமான் கோட்டையாகும்.

தகடூர் நாடு மலர்ந்து விளங்கும் செருந்தி, பலா முதலிய மரங்கள் செறிந்த காட்டினை உடையது. இங்கு ஆயர்களும் சிறுகுடி மறவர்களும் நிறைவாக வாழ்ந்து வந்தனர். இவர்கள் அனைவரும் ஒன்றுகூடி விழா எடுப்பர். இவ்வாறு விழா பொழியும் முற்றத்தையுடைய நாட்டில் அதியனின் அன்பர்கள் தவிர பகைவர்கள் கனவிலும் சேரஇயலாத அரிய காவலுடையதாக விளங்கியதை,

“விழவணி வியன்களம் அன்ன முற்றத்து
ஆர்வலர் குறுகின் அல்லது காவலர்
கனவினும் குறுகாக் கடியுடை வியனகர்”[102]

என்னும் இப்புறப்பாடல் உணர்த்துகிறது.

தகடூர் நாட்டை அதியர் குலத்தவர் ஆட்சி செய்தனர். இக்குலத்தவரில் மூவரை அறியமுடிகின்றது. அதியமான் நெடுமிடல் அஞ்சி, நெடுமான் அஞ்சி, பொகுட்டெழினி ஆகியோராவர். இவர்களின் முன்னோர் அயலகத்திலிருந்த கரும்பைக் கொண்டுவந்து பயிராக்கினர் எனப் பாராட்டப்படுகின்றனர் (புறம். 99, 372). அதியமான் அரசர்களில் முதலாவதாக அறியப்படுபவன் நெடுமிடல் அஞ்சி. இவன் பசும்பூண் பாண்டியனின் படைத்தலைவன். இவனைக் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் வென்றான் (பதிற். 32). நெடுமிடல்

அஞ்சிக்குப் பிறகு நெடுமான் அஞ்சி தகடூர் நாட்டின் மன்னனானான். இவன் சிறந்த வள்ளலாக விளங்கினான். அரிய நெல்லிக்கனியை ஔவைக்குக் கொடுத்துப் புகழ் பெற்றான். கடையெழு வள்ளல்களில் ஒருவனாக வைத்துப் போற்றப்படுகிறான். நெடுமான் அஞ்சி மிகச்சிறந்த வீரன் என்றும் வள்ளல் என்றும் புறநானூற்றுப் பாடல்கள் (87 – 95, 97 – 101, 103, 104, 158, 206, 208, 231, 232, 235, 310, 315, 390, 392) தெரிவிக்கின்றன. இம்மன்னன் ஏழு அரசர்களோடு போரிட்டு வென்றான். காரியின் தலைநகரமான கோவலூரை வென்றான். இதனைப் பரணரும் புகழ்ந்து பாடியுள்ளார்.

"செருவேட்டு ..
இமிழ்குரல் முரசின் எழுவரோடு முரணிச்
சென்று அமர் கடந்துநின் ஆற்றல் தோற்றிய
அன்றும் பாடுநர்க்கு அரியை இன்றும்
பரணன் பாடினான் மற்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறி நின்
அரண்அடு திகிரி ஏந்திய தோளே"[103]

என்று ஔவையார் புகழ்ந்து பாடுகிறார். இவர் அதியமான் பொருட்டு தொண்டைமானிடம் தூது சென்றதையும் புறநானூற்றுப் பாடல்வழி அறியமுடிகிறது.

அதியமான் நெடுமானஞ்சி கோவலூரைக் கைப்பற்றியதால் கோவலூர்த் தலைவன் திருமுடிக்காரி சேரரைத் தூண்டிவிட்டுத் தகடூர்மேல் படையெடுக்கச் செய்தான். காரி கொல்லிமலையை வென்று சேரரிடம் ஒப்படைத்ததால் தகடூர்மேல் படையெடுப்பது சேரர் கடமையாயிற்று. எனவே தகடூர்மேல் படைகொண்டு வந்தனர். அதியனுக்குத் துணையாகப் பாண்டியர், சோழர் வந்தனர். இப்போர் கொல்லிக் கூற்றத்தின் நீர்கூர் என்னுமிடத்தில் நடைபெற்றது. சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை அதியமானை வெட்டி வீழ்த்தியும் இருபெரு வேந்தரின் முடி, குடை, முரசத்தை அழித்தும் வெற்றி பெற்றான். இதனை,

"கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்
பல்வேல் தானை அதிக மானோடு

இருபெரு வேந்தரையும் உடன்நிலை வென்று
முரசும் குடையும் கலனும் கொண்டு
உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டுத்
துகள்தீர் மகளிர் இரங்கத் துப்புஅறுத்துத்
தகடூர் எறிந்து நொச்சிதந்து எய்திய
அரும்திறல் ஒள்இசைப் பெருஞ்சேரல் இரும்பொறை"[104]

எனப் பதிற்றுப்பத்தின் இப்பதிகம் கூறுகிறது. தகடூர் யாத்திரை எனும் மறைந்துபோன தமிழ்நூலானது இப்போரை மையப்படுத்திப் பாடப்பட்டதாகும். இப்போரில் அதியமான் இறக்கவே அவன் மகன் பொகுட்டெழினி கலந்து கொண்டான். இப்போருக்குப்பின் சேரர்க்குக் கீழடங்கிப் பொகுட்டெழினி தகடூரை ஆட்சி செய்தான். இவ்வாறு தகடூர் நாடு சேரரின்கீழ் வந்ததை அறியமுடிகிறது.

**குதிரைமலை**

குதிரைமலை தகடூர் நாட்டைச் சேர்ந்ததாகும். இதனை அதியமான் மரபினர் ஆட்சி செய்துள்ளனர். குதிரைமலை இன்று குதிரைமூக்கு எனும் பெயரில் அழைக்கப்பட்டு வருகிறது. இது கர்நாடக மாநிலத்தில் அமைந்துள்ளது. இம்மலை 'ஊராக்குதிரை' எனச் சங்க இலக்கியங்களில் சிறப்பிக்கப்பட்டுள்ளது. நெடிய வழியினை உடையதாக விளங்கிய குதிரைமலைத் தலைவன் நெடுமான் அஞ்சியாவான். இவனும் இவன் வீரர்களும் பகைவரின் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வருவர் என அகம் (372) கூறும். மேகம் தவழும் உயர்ந்த உச்சியையுடையது இம்மலை. இதன் பக்கமலைச் சாரல்களில் உள்ள சுனையில் குளிர்ந்த மணம் நிறைந்த நீலமலர்கள் மழையினால் நீர் சொட்டியபடி இருக்கும். இதனை,

"மைதவழ் உயர்சிமைக் குதிரைக் கவாஅன்
அகல்அறை நெடுஞ்சுனை துவலையின் மலர்ந்து
தண்கமழ் நீலம்"[105]

எனும் பாடலால் அறிய முடிகின்றது. இம்மலையில் வாழும் குறவர்கள் மலைச்சாரலில் தினையரிசியைப் பயிர்செய்து அந்த அரிசியைக் காட்டுப்பசுவின் பாலில் கலந்து சமைத்து உண்பார்கள் (புறம். 168).

"நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி"[106]

"ஊராது ஏந்திய குதிரைக் கூர்வேல்

கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்"[107]

எனும் பாடல்கள் குதிரைமலை அதியமானுக்குரியதாகப் பாடுகின்றன. பெருஞ்சேரலிரும்பொறை தகடூர் நாட்டைக் கைப்பற்றிய பிறகு சேரர் படைத்தலைவன் பிட்டங்கொற்றன் இம்மலையை ஆட்சிபுரிந்து வந்தான். இதனை,

"ஊராக் குதிரைக் கிழவ

------ ------ ------------ ----------

கைவள் ஈகைக் கடுமான் கொற்ற"[108]

"வசையில் வெம்போர் வானவன் மறவன்

நசையில் வாழ்நர்க்கு நன்கலம் சுரக்கும்

பொய்ய வாய்வாள் புனைகழல் பிட்டன்

மைதவழ் உயர்சிமைக் குதிரைக் கவாஅன்"[109]

முதலான பாடல்கள் புலப்படுத்துகின்றன.

**விச்சிநாடு**

விச்சிமலை மற்றும் அதனைச் சார்ந்த பகுதியையும் கொண்டது விச்சி நாடாகும். இது திருச்சி, சேலம் மாவட்டப் பகுதிகளில் உள்ள பச்சை மலை எனத் தற்போது வழங்கப்படுகிறது. இதனை ஆட்சி செய்தவர் 'விச்சியர் பெருமகன்', 'விச்சிக்கோ' என அழைக்கப்பட்டனர். விச்சிமலை மேகம் அறிய இயலாத உச்சியை உடையது. இங்கு வேங்கை, கருங்காலி, சந்தனம், தேக்கு, பலா முதலிய மரங்கள் காணப்படும். இங்கு விளையும் பலாப்பழங்களைக் காவலர் அறியாது குரங்குகள் கவர்ந்து சென்று தன் துணையுடன் உண்டு, உயர்ந்த மூங்கில் மரங்களின்மேல் அமர்ந்திருக்கும் என்பதைப் புறப்பாடல்கள் வாயிலாக அறியமுடிகிறது.

இம்மலையை விச்சிக்கோவும் இவன் இளவலான இளவிச்சிக்கோவும் ஆட்சி செய்தனர். இவர்களைக் 'கல்லக வெற்பன், விளங்குமணிக் கொடும்பூண் விச்சிக்கோ' எனப் பாராட்டுவார் கபிலர். விச்சியர்கள் பெண்கொலை புரிந்த நன்னன் மரபினர்"[110] எனக் கூறுவார் பெருந்தலைச்சாத்தனார். விச்சியர் நன்னன் மருகன் என்பதாலும் கபிலர் பாரி மகளிரை மணக்கும்படி வேண்டியபோது மறுத்த காரணத்தாலும் விச்சிமலை

பாடுநர்க்கு அடைத்த கதவுடையதாக விளங்கியது என்பர். விச்சி மலைமேல் ஐந்தெயில் எனும் கோட்டை கட்டி வாழ்ந்தனர் இம்மன்னர்கள். இது சிறந்த காட்டரண் கொண்டதாகத் திகழ்ந்தது. விச்சி நாட்டின்மீது இளஞ்சேரல் இரும்பொறை படையெடுத்து வந்தான். இப்போர் விச்சி நாட்டிலுள்ள குறும்பூர் என்னுமிடத்தே நடந்ததை,

"வில்கெழு தானை விச்சியர் பெருமகன்
வேந்தரொடு பொருத ஞான்றைப்
------- -------- ----------- ----------------
குறும்பூர் ஆர்ப்பு"[111]

எனும் குறுந்தொகைப் பாடல் கூறும். இப்போரில் இரு பகையரசரும் விடாது ஆவேசத்துடன் போரிட்டதால் ஆரவாரம் எழுந்தது. ஆனால் இறுதியாக இளஞ்சேரல் விச்சியரை வென்று அவர்களின் ஐந்தெயிலையும் கைக்கொண்டான். இதனை,

"வெருவரு தானையொடு வெய்துறச் செய்துசென்று
இருபெரு வேந்தரும் விச்சியும் வீழ
வருமிளைக் கல்லகத் தைந்தெயில் எறிந்து"[112]

எனப் பதிற்றுப்பத்தின் பதிகம் கூறுகிறது. இப்போரில் விச்சிக்கோவுக்குச் சோழரும் பாண்டியரும் உதவி புரிந்தனர் எனவும் இப்பதிகம் கூறுகிறது. எனினும் இம்மலை மற்றும் ஐந்தெயிலைச் சேரர் கைப்பற்றினர்.

**பொதினி மலைநாடு**

கொங்குநாட்டின் தென்கோடியில் அமைந்தது பொதினி நாடு. இந்நாடு வையாவி நாடு என்றும் ஆவிநாடு என்றும் பெயர் பெற்றிருந்தது. பொதினி என்பது பழநி என மருவி வழங்கப்பட்டு வருகிறது. பொதினி மலை மற்றும் அதனைச் சூழ்ந்த பகுதியே பொதினிநாடாக விளங்கியது. இந்நாட்டை வேள் ஆவி மரபினர் ஆட்சி செய்ததால் 'வேள் ஆவிக் கோமான்', 'ஆவியர் பெருமகன்' என அழைக்கப்பட்டனர். இந்நாடு வலிய நிலமுடைய மலைநாடாக விளங்கியதை "அடுபோர் பேக, நின் வன்புல நன்னாடு" (புறம். 146) என அரிசில்கிழார் பாடுகிறார். இம்மலை மிகவும் குளிர்ச்சியான இருள் மிகுந்த குகைகளை உடையது. பகைவர் கைப்பற்ற முடியாத வலிமையையும் தெய்வம் உறைகின்ற உச்சியையும் உயர்ந்த சிகரங்களையும் கொண்டிருந்தது. இதனை,

"ஈர்ந்தண் சிலம்பின் இருள்தூங்கு நளிமுளை
அருந்திறல் கடவுள் காக்கும் உயர்சிமைப்
பெருங்கல் நாடன் பேகன்"[113]

என்று பெருஞ்சித்திரனார் பேகனின் மலையைப் பாடுகிறார்.

பொதினி மலையில் உள்ள பக்க மலைகளில் சுனைகளில் விழுகின்ற அருவிகள் பூக்களைக் கொண்டு ஆரவாரத்தோடு விழும் தன்மையது. அவ்வாறு விழும்போது அங்குள்ள புதல்களை எல்லாம் நனைக்கும் பொதினி நகரம் பொன்மலிந்து காணப்பட்டதை, "பொன்னுடை நெடுநகர்ப் பொதினி" (அகம். 61) எனும் பாடலடி காட்டுகிறது. இப்பொதினி பின்னர் திருமுருகாற்றுப்படையில் 'ஆவிநன்குடி' எனவும் வழங்கப்படுகிறது. இதனை வேளிரான ஆவியர் குடியைச் சேர்ந்த வேள் ஆவி ஆட்சி செய்தான். பின் பேகன் ஆட்சி செய்தான். இவன் 'வையாவிக் கோப்பெரும் பேகன்', 'பெருங்கல் நாடன் பேகன்' என்றழைக்கப்பட்டான். இவன் கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகப் போற்றப்பட்டான். இவனது கொடைச்செயலை,

"வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்
கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன்"[114]

மழைபொழிந்த ஒரு நாளில் மலைவளம் காணச்சென்றபோது மயில் அகவியதைக் கேட்டு, குளிரால் நடுக்குற்று அகவியதெனக் கருதி அதன்மீது போர்வையைப் போர்த்தினான் எனச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.

**கட்டிநாடு**

கட்டிநாடு கொங்குநாட்டின் வடபகுதியில் இருந்தது. கட்டிநாட்டின் வடஎல்லை வடுகநாட்டின் தென்னெல்லைப் பகுதியாகும்.

"குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும்"[115]

எனும் இப்பாடல் கட்டியின் நாட்டைத் தாண்டி வடுகர் (தெலுங்கர்) தேசமும், அதற்கப்பால் மொழி வேறுபட்ட தேசங்கள் பலவும் இருந்தன என்று தெரிவிக்கின்றன. இந்நாட்டைக் கட்டியரசர் ஆட்சி செய்தனர்.

சோழர் படைத்தலைவனான பழையனோடு நன்னன் போர் செய்தபோது நன்னனின் கூட்டணியில் கட்டியும் இருந்தான் (அகம். 44). இவன் உறையூர் மல்லனான பாணனிடம் மற்போர் செய்ய வந்தான். பாணனோடு மற்போர் புரிந்த ஆரியப் பொருநனின் கைகள் நசுங்கியதைப் பார்த்த கட்டி மற்போரில் கலந்து கொள்ளாமலே ஓடிவிட்டான். மற்றொருமுறை கட்டி உறையூர்மேல் படையெடுத்து வந்தான். உறையூரை நெருங்கும் சமயத்தில் தித்தனின் பிறந்த நாள் விழாக் கொண்டாட்டத்தின்போது கிணைப்பறை கொட்டப்பட்டது. அம்முரசின் முழக்கத்தைக் கேட்டு அஞ்சிப் போரைத் தொடங்காது திரும்பிச் சென்றான். இச்செயல் உறையூர் அரசவையில் ஆரவாரத்தை எழுப்பியது.

> "வலிமிகு முன்பின் பாணனொடு மலிதார்த்
> தித்தன் வெளியன் உறந்தை நாளவைப்
> பாடுஇன் தெண்கிணை பாடுகேட்டு அஞ்சிப்
> பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே"[116]

பரணரின் இப்பாடல் கட்டியின் கோழைத்தனம் உறையூர் நாளவையில் சிரிப்பை ஏற்படுத்தியது எனத் தெரிவிக்கின்றது.

**கொண்கான நாடு (துளுநாடு)**

கொண்கான நாடு துளுநாடு, கொண்கான நாடு எனவும் அழைக்கப்பட்டது. "துளு என்றால் எதிர்த்தல், போரிடுதல் எனப் பொருள்படும். எனவே துளுநாடு என்பது வீரர்கள் உள்ள நாடு என்றும் பொருள் கொள்ளலாம்"[117] என்பார் மயிலை சீனி வேங்கடசாமி. சங்க காலத்தில் துளுநாடு சேரநாட்டைத் தென்னெல்லையாகவும் மேற்கே மேலைக்கடலையும் வடக்கே வாணியாறும் மொழிபெயர் தேயங்களையும் கொண்டிருந்தது. இது இன்றைய தென்கன்னட மாவட்டத்தை உள்ளடக்கியதாகத் திகழ்ந்திருந்தது. பாழி, ஏழில், கொண்கானம் போன்ற மலைகள் இந்நாட்டகத்தே அமைந்திருந்தது.

**நாட்டின் வளங்கள்**

கொண்கான நாடு குறிஞ்சி, முல்லை நில வளங்களைக் கொண்ட நாடாகத் திகழ்ந்தது. இந்நாட்டில் உள்ள ஏழில்மலை பொலிவுடன் விளங்கியது. இங்குப் புலியின் புள்ளிபோல நிழல்களுக்கிடையே வெயில் எட்டிப் பார்க்கும் தன்மையதாக மரங்கள் அடர்ந்து செறிவுடன் விளங்கும்.

இங்குள்ள எருமை மேய்ந்து பாதியாகிவிட்ட இலைகளைப் பெண்கள் அணிந்து கொள்வர். இம்மலைகளின் உச்சியிலிருந்து பல குளிர்ந்த அருவிகள் வீழ்ந்த வண்ணமிருக்கும். இவ்வருவிகள் தூய வெண்ணிற ஆடையை உலர்த்துவது போலிருக்கும். இதனை,

"அறுவைத் தூவிரி கடுப்பத் துவன்றி மீசைத்
தண்பல விழிதரு மருவிநின்
கொண்பெருங் கானம்"[118]

மோசிகீரனாரின் இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன. மேலும் இப்புலவர் கொண்கான மலை இரண்டு பயன்களை உடையதாக உள்ளது எனப் பாடுகிறார். இம்மலை தன்பால் இரப்போர் வந்து தங்கும் கூட்டத்தாரும் இங்கு வந்து இம்மன்னனுக்குத் திறை செலுத்தும் கூட்டத்தாரும் சூழ்ந்து காணப்படும் தன்மையதாய் விளங்கியது.

இந்நாட்டிலுள்ள மலைகள் வானளாவிய நீண்ட மூங்கில்கள் கொண்ட பக்க மலைகளை உடையதாய் இருக்கும். இம்மலையில் உள்ள வழிகளில் உப்பு வணிகர்கள் வணிகம் செய்யும் பொருட்டுச் சென்ற வண்ணம் இருப்பர். அவ்வாறு செல்லும்போது அவர்களின் ஓசையைக் கேட்டு மானினங்கள் மிரண்டு ஓடும். கோடை காலங்களில் வெப்ப மிகுதியால் மூங்கில் மரங்களின் கணுக்கள் வெடித்துக் கழங்கினைப் போன்ற முத்துக்கள் தெறித்து விழும். இதனை,

"பலபுரி
வார்கயிற் றொழுகை நோன்சுவல் கொளிஇப்
பகடு துறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ
உழைமான் அம்பினை இன்னிரிந் தோடக்
காடுகவின் அழிய உரைஇக் கோடை
நின்றுதின் விளிந்த அம்பணை நெடுவேய்க்
கண்விடத் தெறிக்கும்"[119]

என்னும் அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது.

மூங்கில் நிறைந்த பாழி மலையில் பழமையான வேளிர்கள் பொன்னைப் புதைத்து வைத்தனர் என்பதை,

"நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொல்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்"[120]

என்னும் பாடலால் அறியலாம். கொண்கான நாட்டையும் தலைவனையும் பாடும்போது 'பொன்படு கொண்கானம்' என வர்ணிப்பதை (நற். 391, அகம். 173) சங்க இலக்கியங்களில் காணலாம்.

துளுநாட்டின் காடுகளில் மயில்கள் நிறைந்து காணப்படும். எனவே இக்காடுகளில் மயில்தோகை ஆங்காங்கே சிதறிக் காணப்படும். இங்கு மயில்கள் பாகற்காயைத் தின்னும் இயல்புடையனவாய் இருந்ததை,

"கொம்மைஅம் பசுங்காய்க் குடுமி விளைந்த
பாகல் ஆர்கைப் பறைக்கண் பீலித்
தோகைக் காவின் துளுநாடு"[121]

எனும் இப்பாடல் புலப்படுத்துகிறது.

**துளுநாட்டு மன்னர்கள்**

துளுநாட்டை நன்னன் மரபினர் ஆட்சி செய்தனர். இவர்கள் நன்னன், நன்னன் உதியன் எனும் பெயர்கள் மூலமே அறியப்படுகின்றனர். இவர்களில் முதலாம் நன்னன் எனக் கருதப்படுகிறவன் சிறந்த வீரனாகவும் வள்ளலாகவும் விளங்கினான். இவன் பிண்டன் என்பவனை வென்றான். மேலும் இவன் தான்வென்ற அரசர்களின் மனைவியருடைய கூந்தலைக் கயிறு திரித்தான்[122] எனக் கூறுவர். இம்மன்னனுக்குச் சொந்தமான மாமரம் ஒன்றிலிருந்து கனியொன்று பக்கத்தே இருந்த ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டது. இதனை ஆற்றில் நீராடிக் கொண்டிருந்த பெண் எடுத்து உண்டாள். எனவே அப்பெண்ணுக்கு மரண தண்டனை விதித்தான் நன்னன். அப்பெண் தெரியாமல் செய்த குற்றத்திற்காக அவளது தந்தை 99 யானைகளையும் அப்பெண்ணின் எடையளவு பொன்னையும் கொடுப்பதாக வேண்டினான். நன்னன் அவ்வேண்டுகோளுக்கு உடன்படாது அப்பெண்ணைக் கொன்றான். இச்செயல் பலரும் வெறுக்கத்தக்கதாக இருந்தது. இம்மன்னனைப் 'பெண்கொலை புரிந்த நன்னன்' எனப் பழி தூற்றினர். இச்செய்தியை,

"மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு

ஒன்பதிற் றொன்பது களிற்றொடு அவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன்"[123]

என்னும் குறுந்தொகைப் பாடலில் பரணர் தெரிவிக்கிறார். நன்னனின் இச்செயலால் வெறுப்படைந்த கோசர் சூழ்ச்சி செய்து அம்மாமரத்தை வெட்டிவிட்டனர் எனவும் குறுந்தொகை (73) கூறுகிறது.

இந்நன்னனுக்குப் பிறகு ஆட்சி செய்தவன் இரண்டாம் நன்னன் எனக் கருதப்படுகிறான். இவன் தன் நாட்டு எல்லையை விரிவுபடுத்த முயன்றான். எனவே தன் நாட்டுக்கருகில் இருந்த புன்னாட்டின்மீது படையெடுத்துச் சென்று வென்றான். (அகம். 396). பின் வாகைப் பெருந்துறை எனுமிடத்தில் சேரர்க்கும் இந்நன்னனுக்கும் நடைபெற்ற போரில் நன்னனும் அவன் படைத்தளபதியான மிஞிலியும் கொல்லப்பட்டு துளுநாடு சேரர்கீழ் சென்றது. துளு நாட்டுக்குக் கீழிருந்த புன்னாடும் சேரர் ஆட்சியின்கீழ் வந்தது. சேரர் வசம் சென்ற துளுநாட்டைச் சேரவேந்தர்க்குக் கீழடங்கி மூன்றாம் நன்னன் ஆட்சி செய்தான். எனவே இவன் நன்னன் உதியன் என அழைக்கப்பட்டான்.

"நன்னன் உதியன் அருங்கடிப் பாழி"[124]

இவ்வாறு நன்னன் மரபினர் ஆட்சி செய்த கொண்கான நாடு சேரர் கைப்பற்றி ஆளும் நிலையை எய்தியது.

**பூழிநாடு**

பூழிநாடு சேரநாட்டுக்கும் துளுநாட்டுக்கும் இடையில் அமைந்திருந்தது. "பூழி என்றால் புழுதிமண் என்பது பொருள். பெரும்பாலும் பழுதி மண்ணாக இருந்தபடியால் இந்த நாட்டிற்குப் பூழி நாடு என்று பெயர் கூறப்பட்டது[125] என்பர் மயிலை சீனி. வேங்கடசாமி. பூழிநாடு செருப்பு மலையைத் தன்னகத்தே கொண்டது. இம்மலை 'மிதியல் செருப்பு' எனச் சிறப்பிக்கப்படுகிறது. இம்மலையைச் சார்ந்த காடுகளில் முல்லை நிலங்களும் புல் வயல்களும் மிகுதியாக இருந்தன. இம்மலைக் காடுகளில் விலையுயர்ந்த மணிக்கற்கள் இருந்தன. இம்மலைகளில் உள்ள குளத்தில் களிறும் பிடியும் முகமலர்ச்சியோடு விளையாடிக் கொண்டிருக்கும்.

இந்நாட்டில் வாழ்ந்த மக்கள் இடையர் குலத்தவர் ஆவர். இவர்களது குடிப்பூ முல்லை மலராகும். இம்மக்கள் ஆநிரைகளை மிகுதியாக வைத்திருந்தனர் என,

"பூழியர்

சிறுதலை வெள்ளைத் தோடு பரந்தன்ன"[126]

என்னும் குறுந்தொகைப் பாடிலடி காட்டுகிறது. இந்த ஆடுகளை செருப்பு மலையில் மேயவிட்டு அங்குக் கிடைக்கும் மணிக்கற்களைப் பொறுக்கி எடுத்து வந்து வணிகம் செய்வர். இதனை,

"முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்

புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பிக்

கல்லுயர் கடத்திடைக் கதிர்மணி பெறூஉம்

மிதியல் செருப்பின் பூழியர்"[127]

என்னும் பதிற்றுப்பத்துப் பாடலடிகள் காட்டுகின்றன.

பூழிநாடு சங்ககாலத் தொடக்கத்திலிருந்தே சேரர்களின்கீழ் இயங்கிக் கொண்டிருந்தது. எனவே சேரர்களும் பூழியர் தலைவ, பூழியர் பெருமகன் என அழைக்கப்படுவதை, "பூழியர்க் கோ" (பதிற். 21, 84), "பூழியர் மெய்ம்மறை" (பதிற். 73, 90), "பூழியர் பெருமகன்" (புறம். 387) எனும் தொடர்கள் காட்டுகின்றன. சேரர் ஆட்சி செய்த இப்பூழிநாட்டைத் துளுநாட்டு நன்னன் கைப்பற்றிக் கொண்டான். எனவே சேரர் தாங்கள் இழந்த நாட்டை மீட்டுக்கொள்ள வேண்டியதாயிற்று. களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் நன்னனொடு போரிட்டுப் பூழிநாட்டை மீட்டுக்கொண்டதை,

"பூழிநாட்டை படையெடுத்துத் தழீஇ

உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை

நிலைச் செருவின் ஆற்றலை யறுத்து"[128]

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இதன்மூலம் பூழிநாடு மீண்டும் சேரர் வசமானதை அறியமுடிகிறது.

**புன்னாடு**

புன்னாடு கொங்குநாட்டின் வடக்கெல்லைப் பகுதியிலும் துளுநாட்டின் எல்லையிலும் அமைந்திருந்தது. எனவே துளுநாட்டு நன்னன் புன்னாட்டின்மேல் படையெடுத்துச் சென்றான். அந்நாட்டு மக்கள் அச்சம்

கொண்ட அத்தருணத்தில் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலின் படைத்தளபதி ஆஅய் எயினன் என்பவன் உதவி செய்வதாக உறுதியளித்து நன்னனை எதிர்த்துப் போரிட்டான். இப்போர் பாழிப்பறந்தலை என்னுமிடத்தில் நடைபெற்றது. இப்போரில் நன்னனின் படைத்தலைவன் மிஞிலி ஆய் எயினனைக் கொன்றான். இதனை,

"கொடித்தேர்ப்
பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென
யாழ்இசை மறுகின் பாழி ஆங்கண்
அஞ்சல் என்ற ஆஅய் எயினன்
இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கி
தன்னுயிர் கொடுத்தனன்"[129]

என்னும் அகப்பாடல் காட்டுகிறது. இறந்துபட்ட ஆஅய் எயினன் பறவைகளின் பாதுகாவலன். இறந்த எயினன் உடலில் வெயில் படாதவாறு பறவைகள் நிழல் செய்தன. இச்செய்தியை அகம் 152, 181, 208 ஆகிய பாடல்கள் தெரிவிக்கின்றன. இப்போர் மூலம் புன்னாடு நன்னன்கீழ் வந்தது. பின்னர் துளுநாடு சேரர் வசம் வந்தபோது புன்னாடும் சேரர்கீழ் வந்தது என்பதை அகப்பாடல்வழி அறியமுடிகிறது.

கட்டூர் புன்னாட்டின் தலைநகரமாக விளங்கியதாக மயிலை சீனி, வேங்கடசாமி கூறுவார். ஆனால் சங்க இலக்கியங்களில் இதற்கான சான்றுகள் இல்லை. புன்னாட்டை யவன ஆசிரியரான தாலமி 'பொவுன்னட' எனக் குறிப்பிடுகிறார். அவர் "இந்நாட்டில் நீலக்கல் கிடைக்கிறது என்றும் இந்தக் கற்கள் ரோமபுரி மக்களால் அதிகம் விரும்பப்பட்டன"[130] எனவும் குறிப்பிடுகிறார். இந்நீலக்கற்களின் வணிகத்தின் பொருட்டுத் துளுநாட்டு நன்னன் மற்றும் சேரர் புன்னாட்டைக் கைப்பற்ற முனைந்தனர் எனக் கருத முடிகிறது.

**எருமைநாடு**

எருமைநாடு கொங்குநாட்டின் வட எல்லைக்கப்பால் அமைந்திருந்தது. இந்நாடு இன்றைய மைசூர்ப் பகுதியாகும். எருமை நாட்டில் அயிரி என்னும் ஆறு பாய்ந்து வளப்படுத்தியது. இந்நாட்டினை எருமை என்பவன் ஆட்சி செய்தான். இவன் வடுகர் பெருமகன் எனவும் அழைக்கப்படுகிறான்.

"கன்றுடைப் பெருநிரை மன்றுநிறை தரூஉம்

நேரா வன்தோள் வடுகர் பெருமகன்
பேர்இசை எருமை நல்நாட்டு உள்ளதை
அயிரியாறு"[131]

என்னும் அகப்பாடல் எருமை நன்னாட்டில் அயிரியாறு பாய்கிறது எனச் சுட்டுகிறது. இங்குள்ள மக்கள் அருகிலுள்ள ஊர்களுக்குச் சென்று அங்குள்ள ஆநிரைகளைக் கொண்டு வருவர் என்பதும் இப்பாடல் மூலம் அறிய முடிகிறது. எருமை நாட்டின் தலைவனான எருமையூரன் குடநாட்டை அரசாண்டான் என்பதும் "நுண்பூண் எருமை குடநாடு" (அகம். 115) என்னும் இவ்வடியால் புலப்படுகிறது. மேலும் பாண்டியன் நெடுஞ்செழியனைத் தலையாலங்கானப் போரில் எதிர்த்தோருள் இந்த எருமையூரனும் ஒருவன். இதனை,

"கொடித்தேர்ச் செழியன்
ஆலங்கானத்து அகன்தலை சிவப்ப
------- -------- ---------- ---------
நாரரி நறவின் எருமை யூரன்"[132]

என்னும் பாடலால் அறியலாம்.

எருமைநாடு என்பது பிற்காலத்தே சமஸ்கிருதச் செல்வாக்கால் மகிஷபுரி, மகிஷஊர் என மாறியது. அதன்பிறகு ஆங்கில மொழி ஆதிக்கத்தால் மைசூர் எனப் பெயர் பெற்று இன்றளவும் இப்பெயரிலேயே அழைக்கப்படுகிறது. எருமையூர் - மகிஷஊர், மைசூர்.

**பறம்புநாடு**

பறம்புநாடு பாண்டிய நாட்டை ஒட்டியமைந்த சிற்றரசு நாடாகும். இது பறம்பு மலையையும் மலையைச் சுற்றியுள்ள ஊர்களையும் கொண்டதாக விளங்கியது. இன்றைய புதுக்கோட்டைப் பகுதியில் உள்ள பிரான்மலையே பறம்புமலையாகும். இம்மலைநாட்டை வேளிர் குலத்தலைவன் பாரி ஆட்சி செய்தான். வள்ளலாகிய பாரியும் பறம்பு நாடும் சங்க காலத்தே மிகவும் புகழ் பெற்றிருந்ததைப் புறநானூறு மூலம் அறியமுடிகிறது. "முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு" (புறம். 110) என்னும் கபிலர் வாக்கால் பறம்பு நாடு முந்நூறு ஊர்களைக் கொண்டிருந்தது என்று அறியமுடிகிறது.

இந்நாடு சனிமீன் புகையினும் தென்திசையில் வெள்ளி ஓடினும் பறம்பு நாட்டு வயல்களில் விளைச்சல் குறையாது விளங்கும். பசுக்கள் மேயும்படிப் புல்லும் மலரும் வளரும். பாரியின் செங்கோலானது நாட்டு வளத்தை மிகுவிக்கும்படி ஆட்சி நடத்தும். இதனை,

"மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்
வயலகம் நிறையப் புதற்பூ மலர
மனத்தலை மகவை ஈன்ற அமர்க்கண்
ஆமா நெடுநிரை நன்புல் ஆரக்
கோஒல் செம்மையில் சான்றோர் பல்கிப்"[133]

என்னும் பாடல் தெரிவிக்கின்றது. பறம்பு நாட்டின் மேட்டு நிலங்களில் மழைக்காலத்தே நன்கு உழுது விதை விதைத்துக் கொள்வர். வரகு, தினை, எள், அவரை முதலியவற்றை மக்கள் விளைவித்துக் கொள்வர் (புறம். 120). இந்நாட்டிலுள்ள குளங்களை எட்டாம் நாள் பிறைபோல அமைத்து நீரைப் பாதுகாத்தனர்.

பறம்பு மலையில் மழை பெய்தாலும் பெய்யாது ஒழிந்தாலும் அருவிகள் பாய்ந்தோடிக் கொண்டிருப்பதை,

"பெய்யினும் பெய்யா தாயினு மருவி
கொள்ளும் வியன்புலத் துழைகா லாக
மால்புடை நெடுவரைக் கோடுதோ றிழிதரும்
நீரினும்"[134]

என்னும் பாடல் புலப்படுத்துகிறது. இவ்வருவி மலையின் ஒருபக்கத்தே ஆர்ப்பரித்தபடி வீழ்ந்து கொண்டிருக்கும். இம்மலையில் உள்ள சுனைநீர் தெளிந்த தன்மையதாய் இருக்கும். எனவே இது 'பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்' எனப் புலவர்களால் பாராட்டப்பட்டது. இம்மலையில் உள்ள குறத்தியர் அடுப்பெரிக்கச் சந்தனக் கட்டையைப் பயன்படுத்துவர் என்பதைப் புறப்பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

பறம்பு மலையானது உழவர் உழாமலே நான்கு வகையான விளைபொருட்களைக் கொண்டிருக்கும். ஒன்று மூங்கில் நெல் விளையும். இரண்டாவது பலாப்பழங்களை மிகுதியாகக் காய்க்கும். மூன்றாவதாக வள்ளிக் கிழங்குகள் மிகுதியாகத் தாழ்ந்திருக்கும். நான்காவது கனத்த தேன்

கூடுகளைக் கொண்டதாகத் திகழும். இந்நான்கு வளங்களையுடைய பறம்பு மலை வானளாவிய உயரத்துடன் திகழ்ந்தது. இந்நாட்டின் மன்னனான வேள்பாரி சென்றபோது ஒரு முல்லைக்கொடி படர இடமில்லாது வாட, அம்முல்லைக் கொடி படருமாறு தேரினைக் கொடுத்தான். இச்செயல் புலவர்களால் கொடைமடம் எனப் புகழ்ந்துரைக்கப்பட்டது.

"நறுவீ உறைக்கு நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்குவெள் அருவி வீழுஞ் சாரல்
பறம்பிற் கோமான் பாரியும்"[135]

என்னும் சிறுபாணாற்றுப்படை வரிகள் பாரியின் கொடைச் சிறப்பைக் கூறும். இந்நாட்டிலுள்ள 300 ஊர்களையும் பரிசிலர்க்கே வழங்கினான் எனப் புறம் (110) கூறும். இம்மன்னன் எளியவரின் வறுமையைப் போக்கும் மருந்தாக விளங்கினான். பாரியின் கொடைத் திறனை மழையோடு ஒப்பிட்டுப் போற்றுவர் புலவர்.

முடியுடை வேந்தரும் பாரியின் பறம்புமலையை முற்றுகையிட்டனர். அப்போது கபிலர் பறம்புமலை முற்றுகைக்குத் தளராது. எனவே மூவேந்தரும் இரவலரைப் போல விறலியருடன் வந்து இரந்து நிற்பின் இம்மலையையும் கொடையாக நல்குவான் பாரி என மூவேந்தர்களிடம் கூறினார் (புறம் 109, 110). இந்த முற்றுகை நெடுங்காலம் நீடித்ததால் நாட்டிலுள்ள மக்கள் உணவு இல்லாமல் வாடும் நிலை ஏற்படாதிருக்கும் பொருட்டுக் கிளிகளைப் பழக்கி நெடுந்தொலைவிலுள்ள வயல்வெளிகளில் விளைந்த வளம் பொருந்திய நெற்கதிர்களைக் கொண்டுவரச் செய்தார் கபிலர். இந்நெல்லை ஆம்பல் மலரின் அவியலோடு உண்டு பசி நீங்கினர் மக்கள்.

"உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று
செழுஞ்செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி
யாண்டுபல கழிய வேண்டுவயிற் பிழையா
தாளிடூஉக் கடந்து வாளமர் உழக்கி
ஏந்துகோட் டியானை வேந்தர் ஓட்டிய
கடும்பரிப் புரவிக் கைவண் பாரி"[136]

இச்செயலை அகநானூற்றின் பாடல் (203) தெரிவிக்கிறது. இவ்வாறு பல ஆண்டுகள் கழிந்தபின் பாரி மூவேந்தரை ஓடச் செய்தான். எனினும் மூவேந்தரும் சேர்ந்து சூழ்ச்சியால் பறம்பினை வென்று பாரியைக் கொன்றனர். இதனை,

"அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்
எந்தையும் உடையேம்; எம்குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெம்
குன்றும் கொண்டார்! யாம்எந்தையும் இலமே"[137]

எனப் பாரிமகளிர் பாடிய புறநானூற்றுப் பாடலால் வேந்தர்கள் சூழ்ச்சியால் பாரியைக் கொன்றதாக ஊகிக்க முடிகிறது. ஆனால் மூவேந்தரின் பெயரையோ அச்சூழ்ச்சி எது என்பதும் அறிய இயலாததாக உள்ளன. பல்வேறு வளங்களையும் உடைய பறம்பு மலையை மூவேந்தரும் கைப்பற்றிக் கொண்டனர்.

**மலையமானாடு**

மலையமானாடு மலாடு என்றும் மலைநாடு என்றும் அழைக்கப்பட்டது. இந்நாடு திருக்கோவிலூரையும் மேற்கே பெண்ணையாற்றின் தென்கரைப் பகுதியையும் தென் பகுதியையும் உள்ளடக்கியதாக விளங்கியது. இந்நாடு திருக்கோவிலூரைத் தலைநகரமாகக் கொண்டது. இது முள்ளூர் மலையையும் அதனைத் தொடர்ந்த அடர்ந்த காட்டையும் உள்ளடக்கியதாகத் திகழ்ந்தது. இதனை மலையமான் திருமுடிக்காரி ஆட்சி செய்தான். "இந்நாடு மலைகளும் குன்றுகளும் பாறைகளும் நிறைந்தது. எனவே இது சங்க காலத்தில் மலைநாடு எனப் பெயர் பெற்றது"[138] எனக் கூறுவார் மா. இராசமாணிக்கனார். இந்நாடு கடலால் கொள்வதற்கு அரிய உள்நாடாக அமைந்திருந்தது. அதுபோலப் பகைவரும் கைக்கொளள் நினைக்கவும் முடியாததாக விளங்கியது.

"கடம்புகொள் படாத துடலுந ருக்கார்
கழல் புனை திருந்தடிக் காரிநின் னாடே"[139]

என்னும் இப்பாடல் காரியின் வலிமையால் வளமுடன் விளங்கும் நாடாக மலையமாநாடு திகழ்ந்ததை உணர்த்துகிறது.

ஒழுங்குபட அமைந்த ஓசைநிறைந்து ஒலிக்கும் அருவியையுடைய பெருமை பொருந்திய முள்ளூர் மலைய்யை உடையதாக இந்நாடு விளங்கியதை,

"நெறிகொளப்

பாடான்று இரங்கும் அருவிப்

பீடுகெழு மலை"[140]

எனும் இப்பாடல் காட்டுகிறது. இம்முள்ளூர் மலையானது மழை வளத்தால் சிறப்பு பெற்றதாகத் திகழ்ந்ததைப் புறப்பாடலும் (123) சுட்டுகிறது.

இம்மலைநாட்டை மலையமான் திருமுடிக்காரியும் அவன் மரபினரும் ஆட்சி செய்தனர். திருமுடிக்காரி மிகச்சிறந்த வள்ளலாகத் திகழ்ந்தான். இம்மன்னன் வருவோர்க்குத் தேரைக் கொடையாக வழங்கும் வள்ளல் தன்மையுடையவன். நல்லநாள் தவறிச் சென்றாலும் புள் நிமித்தம் தடுத்த நாளில் சென்றாலும் இரவலர் பரிசு பெற்றே திரும்புவர் எனப் புறநானூறு (124) பகர்கிறது. இவன் அச்சந்தோன்றும் வேலையும் தொடியையும் அணிந்தவன். ஆனால் அருள்மொழியைப் பேசும் இயல்பினன். வருவோர் வியக்கும்படிப் பொருளைக் கொடுப்பான் எனச் சிறுபாணாற்றுப்படைப் (91 – 95) பாடலடிகள் சுட்டுகின்றன.

திருமுடிக்காரி தகடூர்மேல் படையெடுத்தான். அதியமான் காரியைத் தோல்வியடையச் செய்து கோவலூரை அழித்தான். இதற்கு ஓரி உதவினான். இச்சமயத்தில் சேரர் தூண்டவே ஓரியினைக் கொன்று கொல்லிமலையைச் சேரரிடம் ஒப்படைத்தான். இவ்வாறு மலையமான் சேரருக்கு உதவி செய்துகொண்டு அவர்களது படைத்தளபதியாக விளங்கினான். ஆனால் சில காலத்திற்குப்பி பின்பு சேரன் மாந்தரஞ் சேரலுக்கும் சோழன் இராசசூய யாகம் வேட்ட பெருநற்கிள்ளிக்கும் ஏற்பட்ட போரில் சோழனுக்கு உதவி செய்து சோழனை வெற்றி பெறச் செய்தான். இப்போருக்கு மலையமான் கலந்து கொள்ளவில்லையெனில் வெற்றி பெற்றிருப்பேன் எனச் சேரனும் பாராட்டும் தன்மையதாய்ச் சேரனை எதிர்த்தான் மலையமான் (புறம். 125). மலையனின் வழித்தோன்றலான சோழிய ஏனாதி திருக்கண்ணன் முள்ளூர் மலையில் ஒளிந்து கொண்ட சோழனை மீண்டும் அரியணை ஏற்றினான். இதனை,

"அரசுஇழந் திருந்த அல்லல் காலை
முரசு எழுந்து இரங்கு முற்றமோடு கரைபொருது
இரங்குபுனல் நெரிதரு மிகுபெருங் காவிரி
மல்லல் நல்நாட்டு அல்லல் தீரப்
---------------- ----------- ----------- ---------
எள்ளரு சிறப்பின் முள்ளூர் மீமிசை
அருவழி இருந்த பெருவிறல் வளவன்
மதிமருள் வெண்குடை காட்டி அக்குடை
புதுமையின் நிறுத்த புகழ்மேம் படுந"[141]

என்னும் பாடல் தெரிவிக்கின்றது.

இப்பாடல்கள் மூலமாக மலையமானாட்டின் தலைவனாக விளங்கிய திருமுடிக்காரி சேரர்க்குப் படைத்தலைவனாக விளங்கினும் பிற்காலத்தே சோழருக்குப் படைத்தளபதியாகப் பணியாற்றியதை ஊகிக்க முடிகின்றது. காரியின் மகன் கண்ணன் 'சோழிய ஏனாதி' என அழைக்கப்படுவது சோழர் படைத்தளபதி என்பதை உறுதிப்படுத்துகின்றது. எனவே மலையமான்நாட்டை முதலில் சேரர் கீழும், பின்னர் சோழர் கீழும் ஆட்சி புரிந்தனர் காரி மரபினர்.

### பொதியில் நாடு

தென்பாண்டி நாட்டில் அமைந்துள்ள பொதிய மலையையும் அதன் பகுதிகளையும் உள்ளடக்கிய சிற்றரசு நாடாகப் பொதியில் விளங்கியது. இம்மலையின் அடிவாரப் பகுதியிலுள்ள ஆய்குடி இதன் தலைநகரமாக விளங்கியது எனப் புறநானூற்றின் உரை (கழக வெளியீடு) கூறும். இம்மலை மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியாக விளங்கியது. இதனைத் திதியன், ஆஅய் அண்டிரன் போன்றோர் ஆட்சி செய்தனர். ஆஅய் அண்டிரன் கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகப் போற்றப்படுகிறான். இவன் சுரபுன்னை மலரைத் தன் குடிப்பூவாகக் சூடியவன்.

இம்மலைநாடு இயற்கை வளம் மிக்கது. மலைசார்ந்த தோட்டங்களைக் கொண்டதாகத் திகழ்ந்தது. இங்கு யானைகள் அதிகமாகக் காணப்படும். பலா மரங்களை மிகுதியாக உடையது. இம்மரக்கிளைகளில் மத்தளங்களைக் கட்டித் தொங்கவிட்டிருப்பர். மந்திகள் இதனைப் பலாப்பழம்

என நினைத்துத் தட்டும். இதனால் எழும் ஓசையைக் கேட்டு அம்மரங்களில் வாழும் அன்னச் சேவல்கள் இதற்கு மாறாக ஆர்ப்பரிக்கும். இதனை,

"மன்றப் பலவின் மாச்சினை மந்தி
இரவலர் நாற்றிய விசிகூடு முழவின்
பாடின் தெண்கின் கனிசெத்து அடிப்பின்
அன்னச்சேவல் மாறெழுந்து ஆலும்
கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்"[142]

எனும் பாடலால் அறியமுடிகிறது. இம்மலையில் யானைகள் மிகுதியாக உள்ளன. ஒரு யானை பத்து கன்றுகளை ஈனுமோ என்னும்படி அதிக அளவில் காணப்படும். இங்கு வேங்கை மலர்களும் காந்தள் மலர்களும் மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருக்கும். இம்மலையானது தேன்கூடுகள் தொங்கும் நீங்காது புது வருவாயினையுடைய தோட்டங்களையுடைய நல்ல நாடாகத் திகழ்ந்ததை,

"பிரசம் தூங்கும் அறாஅ யாணர்
வரையணி படப்பை நல்நாட்டு"[143]

என்னும் பாடல் வரிகளில் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் காட்டுகிறார்.

இந்நாட்டு மக்கள் குட்டையான கூரையைக் கொண்ட குடிசைகளில் வாழ்வர். இவர்கள் மதுவை மூங்கில் குழாயில் வைத்துப் புளிக்கச் செய்வர். புளித்த இம்மதுவைப் பருகி வீட்டின் முற்றத்திலுள்ள வேங்கை மர நிழலில் குரவைக் கூத்தாடுவர் (புறம். 129). மேலும் இம்மக்கள் வேட்டையாடி வீழ்த்திய முள்ளம்பன்றியின் ஊனையும் மான் தசையையும் மலையிலுள்ள சந்தனக் கட்டைகளையும் யானைத் தந்தம் ஆகியவற்றையும் புலியின் தோலில் குவித்து வைத்து விருந்தினர்களுக்கும் இரவலர்களுக்கும் கொடுப்பர் எனப் புறப்பாடல் (374) உணர்த்தும்.

இப்பொதிய மலை கவிரம் என்னும் பக்கமலையைக் கொண்டது. இங்கு மலர்கள் நிறைந்த சுனையில் தெய்வம் உறையும். இந்நீண்ட மலையினை ஆட்சி செய்தவர் ஆஅய், திதியன் ஆகியோர். ஆஅய் அண்டிரன் நாகம் தனக்கு வழங்கிய உயர்ந்த ஆடையை ஆலமரத்தடியில் குடிகொண்ட சிவபெருமானுக்குப் போர்த்தினான். இதனால் இவன் கடையெழு

வள்ளல்களுள் ஒருவனாகப் போற்றப்பட்டான். திதியன், ஆஅய் மன்னனுடைய பொதியில் என்பதை,

"கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்"[144]

"சுடர்மணிப் பெரும்பூண் ஆஅய் கானத்து"[145]

"பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதியன்"[146]

"ஒளிறுவேற் றானை கடுந்தேர்த் திதியன்
புகலரும் பொதியில்"[147]

எனும் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. இப்பாடல்கள் ஒன்றில் பொதியமலைத் தலைவன் திதியன் எனப் பூதப்பாண்டியனே பாடுகிறான். எனவே முதலில் ஆஅய் அண்டிரனும் திதியனும் பொதிய மலையை ஆட்சி புரிந்தனர். பின்னர் எல்லை விரிவாக்கத்தில் ஈடுபட்ட பாண்டியர் பொதிய மலையைத் தனதாக்கிக் கொண்டனர். இவ்வாறு பொதிய மலையைத் தன்கீழ்க் கொண்டுவந்தவன் பசும்பூண் பாண்டியன் என அகம் (162) பாடும். பின் பொதியமலை பாண்டியருடைய பொதியில் என்றே வழங்கப்பட்டது. இதனை,

"திருந்திலை நெடுவேல் தென்னவன் பொதியில்"[148]

"திண்தேர்ச் செழியன் பொருப்பின்"[149]

"தென்னம் பொருப்ப னன்னாடு"[150]

என்னும் பாடல்கள் காட்டுகின்றன. இதன்மூலம் பொதியில் பாண்டியப் பேரரசோடு இணைக்கப்பட்டது தெளிவாகிறது.

**நாஞ்சில் நாடு**

பொதியில் மலைத்தொடர்களில் ஒன்று நாஞ்சில் மலை. இம்மலைப்பகுதியைச் சார்ந்த நாட்டை நாஞ்சில் வள்ளுவன் ஆட்சி செய்தான். நன்செய் நாடு என்ற பெயரே நாஞ்சில் நாடு என மாறியது எனவும் நாஞ்சில் என்பதற்குக் கலப்பை என்றும் கொழு என்றும் பொருள் தருவதால் ஏரினாலாய உழவுத்தொழில் சிறந்த நாடு எனும் பொருளிலும் வழங்கப்பட்டது என்பர். இந்நாடு சிற்றரசு நாடாக விளங்கியது. தற்போதைய நாகர்கோயில் குமரிக்கிடையில் உடுமலைப்பேட்டைக்குத் தெற்கே அமைந்த மலைப்பகுதியாகலாம் என்பர். இம்மலை நாஞ்சிலா மலை என வழங்கப்பட்டு

தற்போது மருத்து மலை என அழைக்கப்படுவதாகப் புறநானூற்றின் உரையாசிரியர் சுட்டுகிறார்.

இந்நாடு செவ்விய மலைப்பக்கத்தையும் சிறிய வெள்ளிய அருவியையும் கொண்ட மலைநாடாகத் திகழ்ந்தது. இங்குக் குவளை, வேங்கை மலர்கள் நிறைந்து காணப்படும். இந்நாட்டில் மழையில்லாத காலத்திலும் விதைத்த வித்தானது வாடுதல் என்பதே இல்லாது கரும்புபோல் வளரும் தன்மையுடையதாய் இருக்கும். இதனை,

"கயத்திட்ட வித்து. வறத்திற் சாவாது
கழைக்கரும்பி னொலிக்குந்து
கொண்டல் கொண்டநீர் கோடை காயினும்
கண்ணன்ன மலர்பூக்குந்து
--------- -------- --------- ---------
செவ்வறைப் படப்பை நாஞ்சிற் பொருந
சிறுவெள் ளருவிப் பெருங்க நாடன்"[151]

இவ்வாறு நாஞ்சில் வள்ளுவனையும் அவனது மலைநாட்டையும் ஒருசிறைப் பெரியனார் புறநானூற்றில் பாடியுள்ளார். இம்மலைமீது இனிய சுளைகளையுடைய பலா மரங்கள் நிறைந்து காணப்படும். இங்குப் பெய்த மழைநீர் பெருக்கெடுத்தோடிக் கடலில் சேரும் தன்மையதாய் விளங்கியது.

நாஞ்சில் நாட்டின் தலைவனான நாஞ்சில் வள்ளுவன் வள்ளலாகவும் திகழ்ந்தான். ஒருமுறை ஔவையார் சிறிது அரிசி வேண்ட, மலைபோன்ற யானையையும் நெற்திரளையும் கொடுத்தான். இம்மன்னன் சேர, பாண்டிய வேந்தர்களுக்குப் படைத்தளபதியாக விளங்கினான். இதனை,

"ஓடாப் பூட்கை யுரவோர் மருக
உயர்சிமைய வுழாஅ நாஞ்சிற் பொருந
--------- --------- --------- ---------
ஈதலான் வேந்தே, வேந்தர்க்குச்
சாத லஞ்சாய் நீயே"[152]

இப்பாடல் மூலம் சேரனின் படைத்தளபதியாக விளங்கிய நாஞ்சில் வள்ளுவன் சேரனுக்காகத் தன் உயிரைக் கொடுக்கவும் அஞ்சாதவனாகக் காட்டப்பட்டுள்ளான். அதுபோலவே,

"விறல் வென்றித்

தென்னவர் வயமறவன்"[153]

என்னும் பாடலால் பாண்டியனின் படைத்தளபதியாகவும் திகழ்ந்தான் எனவும் தெரியவருகிறது. எனவே நாஞ்சில் நாடு, சேர, பாண்டியப் பேரரசுகளின்கீழ் இயங்கியது என்பதை உணர முடிகிறது.

**முதிர மலை**

பழனிமலைத் தொடரின் வடக்குப் பகுதியில் முதிரமலை அமைந்திருந்தது. இந்நாடு தற்போதைய உடுமலைப்பேட்டையின் தென்பகுதியை உள்ளடக்கியதாக இருந்தது. இதனைக் குமணன் என்னும் வேளிர்த் தலைவன் ஆட்சி செய்தான். இந்நாடு என்றும் தளராத புதுவருவாயுடன் வளம்நிறைந்து விளங்கியது. அடர்ந்த மூங்கில் நெருங்கி வளரும் தன்மையுடன் இருந்தது. இங்குச் சுரபுன்னையோடு பலாவும் ஆசினிப் பலாவும் நிறைந்திருக்கும். இங்குள்ள ஆண்குரங்குகள் பலாப்பழங்களை எடுத்துத் தன் துணையான பெண்குரங்கைக் கையால் அழைக்கும் தன்மையை,

"கழைவளர் சிலம்பின் வாழையொடு நீடி
ஆசினிக் கவினிய பலவி னார்வுற்று
முட்புற முதுகனி பெற்ற கடுவன்
துய்த்தலை மந்தியைக் கையிஉடுப் பயிரும்
அதிரா யாணர் முதிரத்துக் கிழவ
இவண் விளங்கு சிறப்பி னியறேர்க் குமண"[154]

எனும் இப்பாடல் உணர்த்துகிறது. இந்நாட்டின் தெருக்களில் மது நிறைந்திருக்கும். இந்நாட்டின் மன்னனான குமணன் சிறந்த வள்ளலாகவும் விளங்கினான். இவன் கடையெழு வள்ளல்களினின்றும் காலத்தால் பிற்பட்டவனாகக் கருதுவர். குமணன் முதிரமலையை ஆட்சி செய்த காலத்தில் பெருஞ்சித்திரனார் எனும் புலவர் குமணனைப் பாடிப் பரிசில் பெற்றுச் சென்றுள்ளார்.

குமணனின் தம்பியான இளங்குமணன் தமையனைக் காட்டுக்கு விரட்டியடித்து நாட்டைக் கைப்பற்றி அரசாண்டான். குமணன் காட்டில் வசித்து வந்தான். அந்தச் சமயத்தில் பெருந்தலைச் சாத்தனார் என்ற புலவர்

குமணனைக் கண்டு தன் வறுமை நிலையைப் பாடினார். குமணன் சிறிதும் அஞ்சாது தன் வாளினைப் புலவர் கையில் கொடுத்துத் தன் தலையை வெட்டிக் கொண்டுபோய்த் தம்பியான இளங்குமணனிடம் கொடுத்தால் பரிசில் நல்குவான் எனக் கூறினான். தன் உயிரையும் பரிசிலாகக் கொடுக்கக்கூடிய வள்ளலாகத் திகழ்ந்ததைப் புறப் (160 – 163) பாடல்கள் காட்டுகின்றன.

**கண்டீர நாடு**

கண்டீர நாடு தோட்டி என்னும் மலையையும் அதனைச் சார்ந்த மலைக்காடுகளையும் உள்ளடக்கிய பகுதியாக விளங்கியது. கண்டீரம் என்ற சொல் சதுரக்கள்ளி என்னும் பொருளுடையது. இது மலைப்பகுதிகளில் காணப்படும் தாவர வகை. இச்சதுரக்கள்ளி நிறைந்த பகுதி என்னும் பொருளில் கண்டீரம் என அழைக்கப்பட்டது என்றும் பனிக்கட்டிகள் கண்டு கண்டாக இம்மலைமீது விழுந்ததால் கண்டீரம் எனப் பெயர் பெற்றதாகவும் இருவேறு விளக்கம் கொடுப்பர். இது இன்றைய மதுரைக்குத் தெற்கிலுள்ள மலைநாட்டுப் பகுதியாகும். இங்கு இன்றும் நள்ளி என்னும் ஊர் உண்டு. சங்க காலத்தே பாண்டிய நாட்டை ஒட்டியமைந்த சிற்றரசு நாடாக இக்கண்டீர நாடு விளங்கியிருக்கக் கூடும். இந்நாட்டினை நள்ளி என்னும் வள்ளல் ஆட்சி செய்தான். இம்மன்னன் 'கண்டீரக்கோ' எனவும் 'கண்டீரக்கோ பெருநள்ளி' எனவும் 'நளிமலை நாடன் நள்ளி' எனவும் அழைக்கப்பட்டான்.

தோட்டி மலையானது இரும்பு புனைந்து செய்யப்பட்டதைப் போன்ற தோற்றத்துடன் திகழும். இங்கு அழகிய பக்க மலை உண்டு. இம்மலைகளின் உச்சியிலிருந்து ஆரவாரத்தோடு அருவிகள் விழுந்து கொண்டிருக்கும். இந்நீரானது பளிங்கு போன்று வெண்மை நிறமாகவும் இனிமையாகவும் இருப்பதை,

"இரும்பு புனைந் தியற்றாப் பெரும்பெயர்த் தோட்டி
அம்மலை காக்கு மணிநெடுங் குன்றிற்
பளிங்குவகுத் தன்ன தீநீர்
நளிமலை நாட னள்ளி"[155]

என்னும் புறப்பாடல் காட்டுகின்றது. இம்மலை மழை வளம் மிக்க நெடிய கொடுமுடியினைக் கொண்டிருந்தது.

இந்நாட்டின் மலைச் சரிவுகளில் சோலைகள் இருந்தன. இச்சோலைகளில் காந்தள் மலர்களும் பிற மலர்களும் மலர்ந்து மணம் வீசியதை,

“நள்ளி
சோலை அடுக்கத்துச் சுரும்பு உண விரிந்த
கடவுள் காந்த ளுள்ளும் பலவுடன்
இறும்பூது கஞலிய ஆய்மலர் நாறி”[156]

எனவரும் அகநானூற்றுப் பாடலில் பரணர் குறிப்பிடுகிறார். இதனைக் கபிலரும் (அகம் 238) குறித்துச் செல்கிறார். மேலும் இந்நாட்டிலுள்ள காட்டுப் பகுதிகளில் இடையர் பசுக்களை வளர்த்தனர். அம்முல்லை நிலத்து ஊர் பசுவின் நெய்க்குப் புகழ் பெற்றதாக விளங்கியது. இதனை,

“திண்தேர் நள்ளி கானத்து அண்டர்
பல்ஆ பயந்த நெய்யின்”[157]

எனும் பாடல் உணர்த்துகிறது.

இம்மலை நாட்டை ஆட்சி செய்த நள்ளி பெரும் வள்ளலாகத் திகழ்ந்தான். இவன் பாணர்கள் இல்லறம் நடத்த, வேண்டும் பொருள்களை இனிது கொடுப்பவன் எனச் சிறுபாணாற்றுப்படை (103 – 107) கூறுகிறது. இவனிடம் வரும் பரிசிலர்க்குத் தேர்களையும் யானைகளையும் கொடுப்பான் எனக் கபிலர் பாராட்டுகிறார். (அகம். 238). நள்ளி ஊரில் இல்லாதபோது இரவலர் வந்தால் அவனுடைய பெண்டிர் யானைக் கன்றுகளைப் பரிசாகக் கொடுப்பர் எனப் புறம். 151 பாடுகிறது. பரிசில் வாங்கிய பாணர் காலையில் செவ்வழிப்பண்ணும் மாலையில் மருதப் பண்ணும் என மாற்றி முறையிறந்து இசைப்பர்.

வன்பரணர் என்னும் புலவர் தன் சுற்றத்தோடு தோட்டிமலைக் காடுகள் வழியே நடந்து செல்லும்போது களைப்பால் ஒரு பலா மரத்தடியே உட்கார்ந்தார். அச்சமயம் அங்கு வேட்டையாட வந்த நள்ளி மான் தசையைச் சுட்டுத் தந்தான். தான் அணிந்திருந்த கழலையும் கழுத்தணியையும் புலவர்க்குப் பரிசளித்தான். புலவர் நள்ளியிடம் யாரென வினவ, யாம் காட்டு நாட்டிடத்தோம் எனக்கூறிச் சென்றான். தன் பெயரையும் சொல்லாது பரிசளித்த சிறப்பைப் புலவர் பாராட்டியதைப் புறநானூற்றில்

காணமுடியும். நள்ளியின் காலத்திற்குப்பிறகு கண்டீரநாட்டின் நிலை பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை.

**கோடைமலை**

கோடைமலை பாண்டிய நாட்டுக்கு அருகே இருந்த சிற்றரசு நாடாகும். இன்றைய கொடைக்கானல் மலையே சங்க காலத்துக் கோடைமலையாகும். இம்மலை வெள்ளிய பூக்களையுடைய முல்லை வேலியால் சூழ்ந்திருந்தது. இதன் தலைவன் நெடுவேட்டுவன். இவன் கோடைமலையின் அடிவாரத்தே கடியம் எனும் ஊரிலிருந்து ஆட்சி செய்தான். எனவே கடியநெடுவேட்டுவன் என அழைக்கப்பட்டான். படையையுடைய இவன் சினம் மிக்க நாயையும் வலிமையான வில்லையும் கொண்டவனாகத் திகழ்ந்ததை,

"வான்மிகு தானை
வெள்வீ வேலிக் கோடைப் பொருந
--------- கடுவிசைக் கதநாய்
நோன்சிலை வேட்டுவ"[158]

எனக் குறிக்கப்பட்டுள்ளான்.

இக்கோடைமலைத் தலைவனாகப் பண்ணி என்பவன் விளங்கினான் என அகம் கூறுகிறது. இவன் களவேள்வி செய்தவனாகத் திகழ்ந்தான். யானைகளைப் பழக்கும் மொழியில் தேர்ந்தவனாக விளங்கினான்.

"தென்னவன் மறவன்
குழியிற் கொண்ட மராஅ யானை
மொழியின் உணர்த்துஞ் சிறுவரை யல்லது
உரைநிலை யின்றி இரவலர்க் கீயும்
வள்வாய் அம்பிற் கோடைப் பொருநன்
பண்ணி"[159]

என்னும் இப்பாடலில் இரவலர்க்கு இல்லை என எண்ணாது ஈயும் வள்ளலாகப் பண்ணி திகழ்ந்தான் எனப் பாராட்டப்படுகிறான். இவன் பாண்டியனின் படைத்தளபதியாகத் திகழ்ந்தான்.

இவ்விரு பாடல்களையும் இணைத்து நோக்குகையில் இனக்குழுச் சமூகத்திலிருந்து நாடு, அரசு உருவான நிலையில் கடிய நெடுவேட்டவன் தலைவனாக இருந்திருக்கிறான். இதனை வேட்டைநாய் மற்றும் வில்

ஆகியவற்றை உடையவன் எனக் குறிப்பிடுவதன் மூலம் உணரலாம். இவன் ஆட்சி செய்து கொண்டிருந்த நிலையில் பாண்டியன் தலைமையில் பண்ணி கோடைமலைமீது போர் தொடுத்து நெடுவேட்டுவனை வென்று களவேள்வி செய்து கோடைமலைத் தலைவன் ஆனான். பின் பாண்டியனின் தலைமையின்கீழ் இயங்கும் தளபதியாக அவன்கீழ் பண்ணி கோடைமலையை ஆட்சி செய்தான்.

**ஒல்லையூர் நாடு**

ஒல்லையூர் நாடு சோழநாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் எல்லையாக ஓடும் வெள்ளாற்றின் தென்கரைப் பகுதியில் அமைந்த சிற்றரசு நாடாக விளங்கியது. இன்றைய புதுக்கோட்டைக்கு அருகிலுள்ள ஒலியமங்கலம் சங்ககால ஒல்லையூர் நாடாகும். இந்நாட்டில் முல்லை மலர்கள் மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருக்கும்.

"முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே"[160]

எனக் குடவாயிற் கீரத்தனார் பாடிச் செல்கிறார்.

முல்லைக் கொடிகள் நிறைந்த இவ்வொல்லையூர் நாட்டை ஒல்லையூர் கிழானும் அவன் மகன் பெருஞ்சாத்தனும் ஆட்சி செய்தனர். இச்சாத்தன் பெரும் வீரனாகத் திகழ்ந்தான். இதனைப் பூதப்பாண்டியன் கைப்பற்றினான். எனவே ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என அழைக்கப்பட்டான். "இப்பூதப்பாண்டியன் இறந்த பிறகு ஒல்லையூர்கிழான் தன் நாட்டை மீட்டு ஆட்சி செய்தான். பின் சாத்தன் ஆட்சிபுரிந்து வந்தான். அப்போது பூதப்பாண்டியனின் பேரன் பசும்பூண் பாண்டியன் ஒல்லையூர்மேல் படையெடுத்துச் சென்று வென்றான். இப்போரில் சாத்தன் இறந்தான். இப்பெருஞ்சாத்தன் வள்ளலாகத் திகழ்ந்ததால் இவனது இறப்பு கலைஞர்களைப் பெரிதும் பாதித்தது"[161]. இவ்வாறு சிற்றரசு நாடாக விளங்கிய ஒல்லையூர் நாடு பாண்டியப் பேரரசோடு இணைக்கப்பட்டது.

**தோன்றிமலை**

தோன்றிமலைப் பகுதியை ஆட்சி செய்தவன் தாமன் தோன்றிக்கோன் ஆவான். இவன் சிறந்த வீரனாகவும் அறவோர்களில் சிறந்தவனாகவும் உழவர்களில் சிறந்தவனாகவும் விளங்கினான் என

"அறிவ ரறிவன் மறவர் மறவன்

மள்ளர் மள்ளன் றொல்லோர் மருகன்"[162]

என ஐயூர் முடவனார் இப்புறப்பாடலில் புகழ்ந்து பாடுகிறார். இம்மன்னன் வள்ளலாகவும் திகழ்ந்தான். இவன் இப்புலவர்க்குப் பல பசுக்களும் காளைகள் பூட்டிய மாட்டு வண்டிகளையும் பரிசாகக் கொடுத்தான். இம்மன்னனின் இயற்பெயர் தாமன் என்பது. இவன் ஆட்சி புரிந்த தோன்றிமலையோடு சேர்த்துத் தாமன் தோன்றிக்கோன் என அழைக்கப்பட்டான். தமிழகத்தில் திண்டுக்கல்லுக்கு மேற்கில் தோன்றிமலை எனும் மலையொன்று உள்ளது. கருவூர்க்கு அருகில் தான்தோன்றிமலை ஒன்றுண்டு. இவ்விரு மலைகளில் கரூர்க்கு அருகிலுள்ள தான்தோன்றி மலையே சங்ககாலத் தோன்றிமலையாக இருக்கக் கூடும். தாமனின் தோன்றிமலை என்பது தான்தோன்றி மலை என மருவியிருக்கக்கூடும்.

**வேங்கட நாடு**

வேங்கடநாடு வேங்கட மலையையும் அதனைச் சார்ந்த பகுதியையும் உள்ளடக்கிய சிற்றரசு நாடாக விளங்கியது. இன்றளவும் வேங்கடம், திருப்பதி என அழைக்கப்படும் தன்மையதாய் விளங்குவது. இந்நாட்டை புல்லி என்னும் கள்வர் தலைவனின் மரபினரும் திரையர் மரபினரும் ஆண்டு வந்தனர். இந்நாடு தமிழகத்தின் வட எல்லையாக விளங்கியது. தொல்காப்பியப் பாயிரமும் சங்கப் பாக்களும் வேங்கடத்தை வடவேங்கடம் என்று குறிப்பிடுகின்றன.

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகம்"[163]

"தென்குமரி வடபெருங்கல்"[164]

எனும் பாடல்களில் வேங்கடம் வட எல்லையாகக் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. வேங்கடத்துக்கு அப்பால் மொழிபெயர் தேசமான வடுகர் நாடு இருந்தது என்பதை "வேங்கடத் தும்பர் ……….. வடுகர் தேஎத்து" (அகம் 213) இப்பாடலடி காட்டுகிறது.

**வேங்கட நாட்டின் வளங்கள்**

வேங்கடம் ஏறுவதற்கு அரிய கோடுகளைக் கொண்டிருந்தது. உயர்ந்த வெண்மையான அருவிகளை உடையதாக இருந்தது. வேங்கட மலையில் வேங்கை மரங்கள் மிகுதி. இவ்வேங்கை மலர்கள் புலிபோன்ற தோற்றத்தைக்

கொண்டிருக்கும். இம்மரங்களுக்கிடையே பெருத்த கிளைகளுடன் நாரத்தை மரங்கள் இருக்கும். இந்நாரத்தை மலர்கள் உதிரும்படிக் குரங்குகள் இங்குமங்கும் பாய்ந்து கொண்டிருக்கும்.

"பல்பொறிப்
புலிக்கேழ் உற்ற பூவிடைப் பெருஞ்சினை
நரந்த நறும்பூ நாண்மலர் உதிரக்
கலைபாய்ந்து உகளுங் கல்சேர் வேங்கைத்
தேங்கமழ் நெடுவரை பிறங்கிய
வேங்கட வைப்பிற்"[165]

எனும் பாடல் உணர்த்துகிறது. இம்மலை என்றும் நீங்காத திருவிழாக்களைக் கொண்டிருக்கும் (அகம். 61). இம்மலையில் வெண்கடம்ப மரங்கள் மிகுதி. இம்மலர்கள் வெண்மையான சுண்ணச்சாந்து விரித்ததுபோலத் தோற்றமளிக்கும். திண்ணிய கொம்புகளை உடைய யானைகள் இந்நாட்டில் மிகுதி. இந்த யானைகள் மரங்கள்மீது உராய்வதால் பனித்துளிகள் சிதறி உழவர் வெண்ணெல்லை உலர்த்தும் பாறைமீது படியும் (அகம். 211). இம்மலையில் வாழும் ஆண் யானையானது கன்றினை ஈன்ற பெண் யானைக்கும் கன்றிற்கும் இரைவேண்டி முற்றாத மூங்கிலின் முளையினைக் கொண்டுவந்து உண்டிருக்கும். இங்குள்ள வேங்கை மலர்களின் துகளைப் பரப்பிக் கொண்ட மயிலானது குருந்த மரத்தின் கிளையிலிருந்து தன் துணையை அழைத்தவண்ணம் இருப்பதை,

"சாரல்
ஈன்றுநாள் உலர்ந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய முளைதரு பூட்டும்
வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை
நன்னாட் பூத்த நாகிள வேங்கை
நறுவீ யாடிய பொறிவரி மஞ்ஞை
நனைப்பசுங் குருந்தின் நாறுசினை யிருந்து
துணைப்பயிர்ந் தகவுந்"[166]

என்னும் இப்பாடல் விளக்குகின்றது. இம்மலையில் யானைகள் அதிகமாகக் காணப்படும் என்பதை அகம். 209, 213, 359 ஆகிய பாடல்கள் கூறுகின்றன.

இம்மலை நடத்தற்கரிய கல்திரள்களையுடைய வழிகளைக் கொண்டிருந்தது. இயற்கை வளங்களைக் கொண்டு விளங்கிய இம்மலையில் ஒருமுறை மழை இல்லாது ஒழிந்ததால் வற்கடம் (பஞ்சம்) ஏற்பட்டது. "வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென" (புறம். 391) எனும் இப்பாடலில் வேங்கடத்தில் பஞ்சம் வந்ததால் தெற்கு நோக்கிச் சோழநாட்டுக்கு இடம் பெயர்ந்ததைக் கல்லாடனார் எனும் புலவர் பதிவு செய்துள்ளார்.

**வேங்கட நாட்டு மன்னர்**

வேங்கட மலைநாட்டில் வாழும் மக்கள் வேட்டுவர், கள்வர் என அழைக்கப்பட்டனர். இவர்கள் வலிய வில்லையும் கொடும் பார்வையையும் உடையவர். மானை வேட்டையாடி அதன் தசைகளை நெருப்பில் சுட்டு உண்பர். நெல்லால் விளைவிக்கப்பட்ட கள்ளினைக் குடித்து மயங்குவர். புலால் படிந்த கையுடனும் கழுவாத வாயினையும் உடையவர். ஓயாது அரற்றுகின்ற கோட்டான்கள் ஒடுங்கும் கடம்ப மரங்களையுடைய சிற்றூர்களில் வாழக்கூடியவர் என்பதை,

> "குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்
> புலாஅல் கையர், பூசா வாயர்
> ஓராஅ உருட்டுங் குடுமிக் குராலொடு
> மராஅஞ் சீறூர் மருங்கில் தூங்கும்
> செந்துதல் யானை வேங்கடம்"[167]

என மாமூலனார் இப்பாடலில் புலப்படுத்துகிறார்.

இக்கள்வர் மக்கள் யானைக் கன்றினை அதன் தாயிடமிருந்து பிரித்துக் கொண்டுவந்து ஊரின் மன்றத்தே பிணித்துக் கள்ளிற்கு விலையாகக் கொடுப்பர். மேலும் யானையின் வெண்கோடுகளான தந்தங்களை வெட்டி அவற்றையும் கள்ளிற்கு விலையாகத் தருவர் எனச் சங்கப் பாடல்கள் (புறம். 389, அகம். 61, 83) தெரிவிக்கின்றன. இந்நாட்டுப் பெண்கள் வரகரிசியைப் பூணிட்ட உலக்கையால் துவைத்து, உரலில் தீட்டிப் பின் சுனைநீரை முகந்து கொண்டுவந்து கழிமட்பாண்டத்தைக் கல் அடுப்பில் வைத்துக் கடுக்கை மரத்துத் தேனினால் சமைப்பர். இச்சோற்றை ஆவின் பாலோடு சேர்த்துப் பகிர்ந்துண்ணுவர். இதனை,

"குடவர் புழுக்கிய பொங்குஅவிழ்ப் புன்கம்
மதர்வை நல்ஆன் பாலொடு பகுக்கும்
நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி
தேன்தூங்கு உயர்வரை நல்நாட்டு உம்பர்
வேங்கடம்"[168]

என்னும் பாடல் உணர்த்துகிறது. இவ்வுணவை ஆடுகளின் கழுத்தில் மாட்டியுள்ள மூங்கில் குழாய்களில் நிரப்பியவாறு ஆநிரைகளை மேய்ப்பர். மழையில்லாத காலங்களில் அவ்வழியே வழிப்போக்கர்கள் பசியால் வருந்தியபடி செல்லும்போது அவர்களுக்கு இந்த உணவைத் தேக்கு இலைகளில் கொடுத்து வருத்தம் போக்குவர்.

**வேங்கட நாட்டை ஆட்சி செய்த மன்னர்கள்**

மலைநாடாக விளங்கிய வேங்கடத்தைப் புல்லி என்னும் மன்னன் மரபினர் ஆட்சி செய்தனர். புல்லி கள்வர் பெருமகன் என அழைக்கப்பட்டான். வேங்கடம் பலராலும் புல்லியின் வேங்கடம் என்றே வழங்கப்பட்டது.

"மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம்"[169]
"புல்லி குன்றத்து"[170]

"மாவண் புல்லி ......... பெருவரை"[171]

என்னும் பாடல்கள் இதனை உறுதிப்படுத்துகின்றன. புல்லியின் வழியினரான ஆதனுங்கன் மற்றும் நல்லேர் முதியனும் வேங்கடத்தை ஆட்சி செய்தனர் என

"கல்லிழி யருவி வேங்கடங் கிழவோன்
செல்வுழி யெழாஅ நல்லேர் முதிய
ஆத னுங்கன்"[172]

கள்ளில் ஆத்திரையனார் இப்புறப்பாடல் மூலம் குறிப்பிடுகிறார்.

வேங்கடத்தின் தென்பகுதியில் அமைந்த நாடான தொண்டை நாட்டின் மன்னன் திரையன் இந்நாட்டைக் கைப்பற்றினான். எனவே இது திரையனின் வேங்கடம் என வழங்கியதை "வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை"

(அகம். 85) எனும் அகப்பாடலடி காட்டுகின்றது. இது மட்டுமல்லாது இவ்வேங்கடம் பாண்டியரின் உயர் ஆட்சியை ஒப்புக்கொண்டிருந்தது என்பதை,

"வேங்கடம் பயந்த வெண்கோட் டியானை
மறப்போர்ப் பாண்டியர்"[173]

எனும் அடியால் குறிப்பாக உணர வைக்கிறார் புலவர். இவ்வாறு புல்லி வழியினருக்கு உரியதாக இருந்த வேங்கடம் பின் தொண்டை நாட்டுத் திரையரும் பாண்டியரும் ஆளும் நிலைக்குத் தள்ளப்பட்டது.

**பாணன் நாடு**

பாணன் நாடு என்பது ஆட்சி செய்த மன்னன் பெயரால் அழைக்கப்பட்டது. இது வடக்குப் பகுதியில் அமைந்த நாடாகும். இது தமிழகத்தின் வடபகுதியில் அமைந்த நாடு என்றும் இன்றைய கர்நூல் மாவட்டத்தின் திருப்பருப்பதம் மலைகளையும் சித்தூர் மாவட்டத்தின் மேற்குப் பகுதிகளையும் கோலார் மாவட்டத்தையும் உள்ளடக்கியதாக இருந்தது என மா. இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார்.[174] சங்கப் பாடல்களில் இந்நாடு வடக்குத் திசையில் உள்ளதாகக் குறிப்பிடப்படுகிறது. இந்நாட்டில் செல்லுதற்கரிய சுரம் இருந்தது. இச்சுரம் ஒளிபொருந்தி மிக்க வெம்மையுடையதான ஞாயிறு காய்ந்து அச்சுறுத்தும் வகையில் அமைந்திருக்கும். இவற்றை மீறி இவ்வழிச் செல்வோரைக் கொன்றிடும் பொருட்டு யானை வழி பார்த்துக் காத்திருக்கும். இதனை,

"வடாஅது
நல்வேற் பாணன் நன்னாட் டுள்ளதை
வாட்கண் வானத் தென்றூழ் நீளிடை
ஆட்கொள் யானை அதர்பார்த் தல்கும்"[175]

எனும் பாடல் உறுதிபடுத்துகின்றது.

இந்நாட்டை ஆட்சி செய்த பாணன் என்னும் மன்னன் சிறந்த வீரனாவான். இவன் கல்லில் நடந்து செல்லும் பழக்கமுடைய வலிய அடியினையுடையவன். இவன் பகைவர் அயரும் நேரம் பார்த்து ஆநிரைகளைக் கவரும் தன்மையுடையவன். மூங்கில் குழாயில் உணவைப் பாதுகாத்து வைப்பான்.

"அகல்சூல் அம்சுரைப் பெய்த வல்சியம்
இகந்தனர் ஆயினும் இடம்பார்த்துப் பகைவர்
------------- ------------- --------------- --------------------
எழாஅப் பாணன் நல்நாட்டு"[176]

இம்மன்னன் மற்போர் செய்வதில் வல்லவன். இம்மன்னன் ஒருமுறை ஆரியப் பொருநனுடன் மற்போர் புரிய நேர்ந்தது. அச்சமயத்தில் ஆரியப் பொருநனின் தோள்களை நசுக்கி வலுவிலக்கச் செய்து தோள் வேறு உடல் வேறாகக் கிடக்கும்படி செய்த மறவனாக விளங்கினான். இந்நாட்டிற்கு அப்பால் செல்லுதற்கரிய பாலைவனம் இருந்தது. இங்குச் சென்றோரைக் கொன்ற கள்வர் தம் படைக்கலங்களைச் சின்னீர்த்துறையில் கழுவிச் செல்வர். வேங்கடத்திற்கு அப்பாலும் அச்சுரம் பாடப்பட்டுள்ளது. வேங்கடத்து மக்களிடமும் மூங்கில் குழாயில் உணவைப் பாதுகாக்கும் முறை பேசப்படுகிறது. எனவே சங்ககாலத்தே பாணன் நாடு வேங்கட நாட்டிற்கு மேற்கே அமைந்திருந்தது எனக் கருதலாம். இராசமாணிக்கனாரின் கருத்தும் இதனை அரண் செய்வதாக உள்ளது.

**மிளைநாடு**

சங்க இலக்கியத்தில் மிளை என்னும் நாடு குறிக்கப்படுகிறது. ஆனால் இந்நாட்டை ஆட்சி செய்தவர்கள் பற்றிய குறிப்போ, எங்கு அமைந்துள்ளது என்ற குறிப்போ காணப்படவில்லை. இந்நாடு பாலை நிலத்தையுடைய நாடாகச் சுட்டப்படுகிறது. இங்குள்ள வெட்சி மரத்தின் அரும்பானது சேவலின் காலிலுள்ள முள் போன்று இருக்கும். இந்த அரும்பு முதிர்ந்த மலர்கள் குருந்த மலர்களோடு பாறையின்மீது பரவலாக உதிர்ந்து கிடக்கும். இந்நாட்டின் மேட்டு நிலத்தில் தழைத்த பரல் என்னும் செடியின் தண்டினை பெண் மானும் ஆண் மானும் சேர்ந்து கடித்து அதிலுள்ள நீரை உறிஞ்சிக் குடிக்கும். நீர் இல்லாத பாலை நிலமாக இந்நாடு விளங்கியதை,

"இதல்முள் ஒப்பின் முகைமுதிர் வெட்சி
கொல்புன் குறுந்தொடு கல்அறைத் தாஅம்
மிளைநாட்டு அத்தத்து ஈர்ஞ்சுவல் கலித்த
வரிமரல் கறிக்கும் மடப்பிணைத்
திரிமருப்பு இரலைய"[177]

என்னும் அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது. இந்நாடு தமிழகத்தின் எப்பகுதியில் அமைந்திருந்தது என்பது பற்றிய குறிப்புகள் இல்லை. இது மேலும் ஆராய்வதற்குரியது.

### தொண்டைநாடு

தொண்டைநாடு வேங்கட நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் இடையில் அமைந்த சிற்றரசு நாடாக விளங்கியது. இந்நாடு வடக்கே வேங்கடம், தெற்கே பெண்ணையாற்றையும் மேற்கே சவ்வாது மலை, கிழக்கே கடலையும் எல்லைகளாகக் கொண்டிருந்தது. இந்நாடு சங்க காலத்தின் பிற்பகுதியில் உருவாக்கம் பெற்றது. சங்க காலத்தே அருவாநாடு, அருவா வடதலை நாடு என வழங்கப்பட்டது. இந்நாட்டு மக்கள் அருவாளர் எனப்பட்டனர். இதனைத் 'தொல் அருவாளர் தொழில் கேட்ப' எனும் பட்டினப்பாலை (275) அடியால் உணரலாம். இந்நாட்டின் தலைநகரமாகக் காஞ்சி விளங்கியது. தொண்டை நாட்டை ஆட்சி செய்தோர் திரையர், தொண்டையர் என அழைக்கப்பட்டனர். "தொண்டை நாட்டில் முதலில் குறும்பர் என்னும் இனத்தவர் இருந்தனர். அவர்கள் தொண்டை நாட்டை இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரித்து வாழ்ந்து வந்தனர். சோழநாட்டுப் பிரிவினைகளில் கோட்டம் என்ற சொல்லே இல்லை. பின்வந்த பல்லவரும் அவற்றைப் புதியதாக உண்டாக்கியதற்குச் சான்றில்லை. எனவே தொண்டை நாட்டில் முற்காலத்தே இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரித்து ஆட்சி செய்தனர்"[178] எனக் கூறுவார் மா. இராசமாணிக்கனார். இக்கருத்துக்கேற்ப தொண்டை நாடு இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்ததெனக் கல்வெட்டுகள் மூலமும் அறிய முடிகிறது.

### இருபத்து நான்கு கோட்டங்கள்

1. புழல் கோட்டம்
2. ஈக்காட்டுக் கோட்டம்
3. மணவிற் கோட்டம்
4. செங்காட்டுக் கோட்டம்
5. மையூர்க் கோட்டம்
6. எயில் கோட்டம்
7. தாமல் கோட்டம்
8. ஊற்றுக்காட்டுக் கோட்டம்

9. களத்தூர்க்கோட்டம்

10. செம்பூர்க் கோட்டம்

11. ஆம்பூர்க் கோட்டம்

12. வெண்குன்றக் கோட்டம்

13. பல்குன்றக்கோட்டம்

14. இளங்காட்டுக் கோட்டம்

15. காலியூர்க் கோட்டம்

16. செங்கரைக் கோட்டம்

17. பருவூர்க் கோட்டம்

18. சுடிகூர்க் கோட்டம்

19. செந்திருக்கைக் கோட்டம்

20. குன்றவர்த்தனக் கோட்டம்

21. வேங்கடக் கோட்டம்

22. சேத்தூர்க் கோட்டம்

23. வேலூர்க் கோட்டம்

24. புலியூர்க் கோட்டம்

**தொண்டை நாட்டின் வளங்கள்**

தொண்டை நாடு நானில வளங்களையும் பெற்ற நாடாக விளங்கியது. களவு இல்லாத நாடாகத் திகழ்ந்தது. இந்நாட்டின் காடுகளில் வாழும் விலங்குகளும் பிறர்க்குத் துன்பம் செய்யா. தொண்டை நாட்டு முல்லை நிலத்தில் சுள்ளி என்னும் முள்மரங்கள் மிகுதி. எனவே அங்கு வாழுகின்ற மக்கள் அம்மரத்தை வேலியாக அமைப்பர். இங்குள்ள வீடுகளின் முற்றத்தில் வரகு முதலிய தானியங்கள் கொட்டி வைக்கக்கூடிய குதிர்கள் இருக்கும். இக்குதிர்கள் பெண் யானையைப்போல அகன்று காணப்படும். வரகுக் கதிரைத் திரிக்கும் திரிமரங்கள் யானையின் காலையொத்துக் காணப்படும். இங்கு வாழும் மக்கள் தம் வீட்டின் கூரைக்கு வரகு வைக்கோல் வேய்ந்திருப்பர். இம்மக்கள் பூளைப்பூ போன்ற வரகுச் சோற்றுக்கு வேங்கை மலரினை ஒத்த அவரைப் பருப்பை அவித்துக் கூட்டாக வைத்து விருந்தோம்புவர். இதனை,

“நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன
குறுந்தாள் வரகின் குறள்அவிழ்ச் சொன்றி

புகர்இணர் வேங்கை வீ கண்டன்ன
அவரைவான் புழுக்கு அட்டி பயில்வுற்று
இன்சுவை மூரல் பெறுகுவிர்"[179]

என உருத்திரங்கண்ணனார் குறிப்பிடுகிறார்.

தொண்டை நாட்டில் முல்லை நிலத்தைக் கடந்தபின் அதனருகே மருதநிலம் அமைந்திருந்தது. இம்மருத நிலமானது என்றும் நீங்காத புது வருவாயுடன் திகழும். மருத நிலத்து வயல்களின் சகதியில் காளைகள் தம்முள் சண்டையிட்டுக் கொள்ளும். இச்சண்டையின்போது காளைகள் சுற்றிச் சுற்றி வருவதால் வயலை உழாமலே சேறாகும். இதனைச் சமப்படுத்தி உழவர்கள் நாற்று நடுவர். இங்குக் களை பறிக்கும்போது அங்குப் பூத்த நெய்தல் மலரையும் களையோடு சேர்த்து வீசுவர். இந்நெற்பயிர்கள் முற்றி விளையும்போது கொட்டினால் கடுப்பைத் தரும் சிவந்த குளவியைப்போன்று காட்சியளிக்கும். நெல்லறுத்த உழவர்கள் வைக்கோல் போர்களைப் பாம்புகள் வாழும் மருத மரத்தின் நிழலில் வரிசையாக வைப்பர். இதனைப் பார்க்கப் பெரும் பூதங்கள் போலக் காட்சியளிக்கும்.

"பாம்புஉறை மருதின் ஓங்குசினை நீழல்
பலிபெறு வியன்களம் மலிய ஒற்றி
கணம்கொள் சுற்றமொடு கைபுணர்ந்து ஆடும்
துணங்கை அம்பூதம்"[180]

என்னும் பெரும்பாணாற்றுப்படையின் இப்பாடலடிகள் இதனைக் காட்டுகின்றன. நெற்போரை அடித்துத் துகளைத் தூற்றி அகற்றிவிட்டுத் தூய நெல்லைப் பொன்மலை போன்று குவித்து வைப்பர் இவ்வுழவர். இவர்கள் மிகுந்த செல்வ வளத்துடன் திகழ்ந்தனர்.

மருத நிலப்பகுதிகளில் நெல் மட்டுமல்லாது கரும்பும் மிகுதியாக நடுவர். இங்குக் கரும்பாலைகள் பல உண்டு. மூங்கில் நிறைந்த மலைகளில் யாளி பாய்ந்து தாக்குவதால் யானை கலங்கிப் பிளிறும் ஓசையைப் போல இக்கரும்பாலைகள் எந்நேரமும் ஒலியெழுப்பிக் கொண்டிருக்கும் (பெரும்பாண். 257 – 262). தொண்டை நாட்டு நெய்தல் நிலத்தில் உப்பு விளைவிக்கப்பட்டது. மீன்பிடி தொழிலும் நடைபெற்றது. இந்நாட்டின்

கடற்கரைப் பட்டினமான நீர்ப்பெயற்றுத் துறைமுகத்தில் வணிகம் சிறப்பாக நடைபெற்றது. இங்குக் கடல் வாணிகத்தின் மூலம் பிற (ரோமானிய) நாட்டுக் குதிரைகள் கொண்டு வரப்பட்டன. மேலும் வடநாட்டிலிருந்து பொன், மணிகள் போன்ற வளமான பொருள்களும் இறக்குமதி செய்யப்பட்டன. (பெரும்பாண். 322 – 336).

தொண்டைநாட்டின் உள்பகுதிகளில் உப்பு விற்கும் உமணர்கள் உப்பு மட்டுமல்லாது மலையில் கிடைக்கக்கூடிய சந்தனம், மணிகள் போன்றவற்றையும் கடலில் கிடைக்கும் பொருள்களான முத்து, பவளம் போன்றவற்றையும் விற்று வாணிகம் செய்தனர். இதனை,

"மலையவும் கடலவும் மாண்பயம் தரூஉம்
அரும்பொருள் அருத்தும் திருந்துதொடை நோன்தாள்
அடிபுதை அரணம் எய்திப் படம்புக்கு"[181]

எனும் இப்பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

**தொண்டையர் மரபு**

தொண்டை நாட்டை ஆட்சி செய்த மன்னன் தொண்டைமான், தொண்டையோர் மருக, தொண்டையர் கோன் என்னும் பெயர்களில் அழைக்கப்பட்டனர். இவர்கள் வாடாத தும்பைப் பூவினைத் தம் குடிப்பூவாகச் சூடுவர்.

"இருநிலம் கடந்த திருமரு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்த்
திரைதரு மரபின் உரவோன் உம்பல்"[182]

என்னும் பெரும்பாணாற்றுப்படை வரிகளில் உருத்திரங்கண்ணனார் இளந்திரையனின் முன்னோன் திரைகடல்வழி வந்து தொண்டைநாட்டுக்கு மன்னன் ஆனான் எனக் கூறுகிறார். வென்வேற்கிள்ளி எனும் சோழன் நாகநாட்டின் இளவரசி ஆகியோர்க்குப் பிறந்து கடல்வழி வரும்போது கப்பல் உடைந்துபோனது. எனவே கடல் அலைகளில் கட்டையைப் பற்றிக்கொண்டு மிதந்து வந்தான். திரைகொண்டு வந்த காரணத்தால் திரையன் என்றும் அவ்வாறு வருங்காலத்து வேந்தனின் மகன் என்பதற்கு அடையாளமாகத் தொண்டைக்கொடி சுற்றியிருந்ததால் தொண்டைமான் என்றும்

அழைக்கப்பட்டான். அவன் ஆட்சி செய்த நாடு தொண்டை நாடு என வழங்கப்பட்டது எனவும் கூறுவர்.

தொண்டையர் வலிய போரில் நல்ல பயிற்சி பெற்றவர்களாகவும் போர்த்தொழில் பயின்ற யானைப் படைகளையும் கொண்டு போர் புரியும் சிறப்புடையவர்களாகவும் விளங்கியதை,

"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்"[183]

"பொருவார்
மண்ணெடுத் துண்ணும் அண்ணல் யானை
வண்டேர்த் தொண்டையர்"[184]

போன்ற சங்கப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. இப்படை பலத்தால் அருகே அமைந்த நாடான வேங்கட நாட்டைக் கைப்பற்றினான். அதுமுதல் புல்லியின் வேங்கடம் திரையனின் வேங்கடமாக மாறியுள்ளதை அறியமுடிகிறது.

**ஒய்மாநாடு**

"தொண்டைநாட்டின் தென்பகுதி ஒய்மாநாடு என்று வழங்கப்பட்டது. இந்நாடு திண்டிவனத்திற்கு வடக்கிலுள்ள மாவிலங்கையை வடவெல்லையாகவும் கடலைத் தென்னெல்லையாகவும் வில்லிப்பாக்கத்தைக் கிழக்கெல்லையாகவும் கொண்டு விளங்கியது. மேற்கில் விழுப்புரம் வரையில் பரந்திருந்தது"[185] என ஆர். ஆளவந்தார் குறிப்பிடுகிறார். இன்றைய திண்டிவனம், செங்கற்பட்டு மதுராந்தகத்தின் தென்பகுதி ஆகியவற்றை உள்ளடக்கிய சிற்றரசு நாடாக ஒய்மாநாடு விளங்கியது. இந்நாட்டை ஓவியர் குடியினர் ஆட்சி செய்தனர். ஓவியர் பெருமகன் என்பது ஒய்மான் என மாறியது. ஒய்மான் ஆண்டநாடு ஒய்மாநாடு என அழைக்கப்பட்டது. இந்நாட்டின் தலைநகரமாக மாவிலங்கை விளங்கியது. வேலூர், எயிற்பட்டினம், கிடங்கில், ஆமூர் போன்ற ஊர்களும் சிறப்பாகப் பேசப்படுகின்றன.

ஒய்மாநாடு முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்களைப் பெற்ற நாடாக விளங்கியது. இந்நாட்டு முல்லை நிலத்தே அவரைக் கொடிகள் பவழம்போலப் பூக்கும். கரிய அரும்புகளையுடைய காயாம் மலர்கள் மயிலின் கழுத்தை ஒத்திருக்கும். முசுண்டைக் கொடியோ கொட்டம் போன்ற

பூக்களுடன் விளங்கும். குலையினையுடைய காந்தள் கைவிரல்களைப் போலப் பூத்துக் குலுங்கும். ஒய்மாநாட்டின் கொல்லையிடத்து நெடிய வழிகளில் இந்திரகோபம் என்னும் தம்பலப் பூச்சிகள் ஊர்ந்து செல்லும். முல்லைப் பூக்கள் அழகுடன் மலர்ந்திருந்ததை,

"பைந்நனை அவரை பவழங் கோப்பவும்
கருநனைக் காயாக் கணமயில் அவிழவும்
கொழுங்கொடி முசுண்டை கொட்டம் கொள்ளவும்
செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்
கொல்லை நெடுவழிக் கோபம் ஊரவும்
முல்லை சான்ற முல்லையம் புறவின்"[188]

என்னும் சிறுபாணாற்றுப்படையின் பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

"ஒய்மாநாட்டில் பெயர்பெற்ற ஆறுகள் இல்லை. இந்நாடு மழையை நம்பியிருந்தது. ஆங்காங்குப் பெரிய நீர்நிலைகள் அமைக்கப்பட்டிருந்தன. ஏரிப் பாய்ச்சலையுடைய நிலப்பகுதியே மருத வளத்துடன் காணப்பட்டது"[187] என்பார் மா. இராசமாணிக்கனார். இந்நாட்டில் சிறிய கொம்புகளையுடைய காஞ்சி மரத்தின் மலர்கள் மணம் வீசியபடி இருக்கும். நீலமணி போலும் தோற்றமளிக்கக்கூடிய சிச்சிலிப் பறவை மீனைத் தன் அலகால் பற்றும்போது அதன் நகங்கள் நீர்நிலைகளிலுள்ள வெண்தாமரை இலைகளைக் கிழிக்கும். இவ்வெண்தாமரை மலரிலுள்ள தேனை உண்ணக் கரிய வண்டுகள் சூழும் காட்சி திங்களைப் பாம்பு சேர்வதைப் போலத் தோன்றும். இதனை,

"நிலைஅருங் குட்டம் நோக்கி நெடிதுஇருந்து
புலவுக் கயல் எடுத்த பொன்வாய் மணிச்சிரல்
வள்உகிர் கிழித்த வடுஆழ் பாசடை
முள்அரைத் தாமரை முகிழ்விரி நாள்போது
கொங்குகவர் நீலச் செங்கண் சேவல்
மதிசேர் அரவின் மானத் தோன்றும்
மருதம்"[189]

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன.

ஒய்மாநாட்டின் கடற்கரையில் உள்ள வெள்ளிய மணலில் தாழை அன்னம்போல் பூக்கும். இளவேனிற் காலம் தொடங்கும் நாள்களில் செருந்தி

மலர்கள் பொன்னைப் போலப் பூக்கும். நீலமணி போலக் கழிமுள்ளி மலரும். நெடிய தாளையுடைய புன்னையோ முத்துப் போல அரும்பும் (சிறுபாண். 146 – 151).

ஒய்மாநாட்டை ஓவியர் குடியினரான ஒய்மான் நல்லியக்கோடன் மற்றும் அவன் வழித்தோன்றல் ஒய்மான் வில்லியாதன் ஆகியோர் ஆட்சி செய்தனர். இவ்விருவரும் சிறந்த வள்ளல்களாகத் திகழ்ந்தனர். இவர்கள் காலத்தே கடையெழு வள்ளல்கள் இல்லை. அவர்களின் கொடைப் பணியை நல்லியக் கோடன் தொடர்ந்து செய்வான் எனச் சிறுபாணாற்றுப்படை புகழாரம் சூட்டுகிறது. புறநானூற்றுப் பாடல்களும் (176, 379) இதனை உறுதிப்படுத்துகின்றன. இதனை நோக்க ஒய்மாநாடும் சங்க காலத்தின் பிற்பகுதியில் தோற்றம் பெற்றது என்பதை அறியமுடிகிறது.

### நாட்டின் உட்பிரிவுகள்

ஒருநாடு அதனைப் பல உள்நாடுகளாகப் பிரித்து ஆட்சிப் பொறுப்பு பகிர்ந்தளிக்கப்பட்டது. சங்க காலத்தில் கூற்றம், கோட்டம் எனப் பிரிக்கப்பட்டிருந்தது. சேரநாடு குட, குட்ட நாடு என இரு பிரிவுகளைக் கொண்டிருந்தது. கூற்றம் சோழ நாட்டின் பிரிவுகளில் ஒன்றாகும். அதுபோல கோட்டம் என்பது தொண்டைநாட்டின் பிரிவுகளில் ஒன்று. சங்க காலத்தே மிழலைக் கூற்றம், முத்தூற்றுக் கூற்றம், பல்குன்றக்கோட்டம் முதலான பிரிவுகளை உள்ளடக்கி நாடுகள் பிரிக்கப்பட்டிருந்ததை உணரமுடிகிறது.

### குட்டநாடு

சேரநாட்டின் ஒருபகுதி குட்ட நாடாகும். சேரர் முதலில் தன் ஆட்சியை அமைத்தது குட்ட நாட்டில்தான். குட்டம் என்பதற்குக் காயல் என்பது பொருள். கடல் முகத்தின் அருகே பல தீவுகளை உருவாக்கிக் காயல்களாகப் பரவிச் செல்வதால் காயல்களின் நிலம் என்பது குட்ட நாடு எனப் பெயர் பெற்றது என்பர். தற்போதைய கோட்டயம், கொல்லம் பகுதிகளைச் சூழ்ந்த நாடு சங்ககாலக் குட்டநாடாக விளங்கியது. இந்நாட்டை ஆண்ட சேரவேந்தர் 'குட்டுவன்' என்று அழைக்கப்பட்டனர்.

## குடநாடு

குட்ட நாட்டிற்கு வடபால் அமைந்த சேரநாட்டுப் பகுதி குடநாடு ஆகும். இது மேற்குப் பகுதியில் அமைந்த நாடாதலால் குடநாடு என்று அழைக்கப்பட்டது. இந்நாடு பொன்னானி ஆற்றின் கடல் முகத்திலிருந்து பேரியாற்றின் தென்கோடி கடல்முகம் வரை பரவியிருந்தது. இந்நாட்டை ஆட்சி புரிந்த சேர வேந்தர் 'குடக்கோ' என அழைக்கப்பட்டனர். குட மற்றும் குட்ட நாட்டின் வளங்கள் சேரநாட்டுப் பகுதியில் முன்பே விளக்கப்பட்டுள்ளது.

## முத்தூற்றுக் கூற்றம்

சோழநாட்டின் உள்பகுதியில் அமைந்திருந்தது இக்கூற்றம். இது தொன்றுமுதிர் வேளிர்களுக்கு உரியதாகத் திகழ்ந்தது. இக்கூற்றம் திரண்ட நெல் வளங்களைப் பெற்று விளங்கும். இங்கு வயலிடத்தே உள்ள மீனைக் கொத்தும் நாரைகள் நெற்போரிடத்தே உறங்கும் தன்மையதாய் விளங்கியதை,

"கழனிக்
கயலார் நாரை போர்விற் சேக்கும்
பொன்னனி யானைத் தொன்றுமுதிர் வேளிர்
குப்பை நெல்லின் முத்தூறு"[189]

என்னும் புறப்பாடல் காட்டுகிறது. இவ்வாறு 'குப்பை நெல்' என்னும் ஒருவகை நெல் விளையும் இடமாகிய முத்தூரைப் பாண்டியன் நெடுஞ்செழியன் போரிட்டு வென்றான். அதுமுதல் முத்தூற்றுக் கூற்றம் பாண்டியப் பேரரசோடு இணைக்கப்பட்டது.

## மிழலைக் கூற்றம்

சோழநாட்டைச் சேர்ந்த பிரிவுகளில் மிழலைக் கூற்றமும் ஒன்று. இக்கூற்றம் காவிரி கடலோடு கலக்கும் இடத்தே அமைந்திருந்தது. இதன் தலைநகரமாக நீடூர் விளங்கியது. இக்கூற்றமானது இன்றைய மாயவரத்திற்கு அருகில் அமைந்திருந்தது[190] என்பார் ரா.பி.சேதுப்பிள்ளை. இக்கூற்றத்தை மாவேள் எவ்வி எனும் வேளிர் தலைவன் ஆட்சி புரிந்தான். இந்நாடு மக்கள் மிகுந்து வாழும் நல்ல ஊர்களையுடையதாக இருந்தது.

"தங்கா வுறையு ணல்லூர் கெழீஇய
ஓம்பா வீகை மாவே ளெவ்வி

புனலும் புதவின் மிழலை"[191]

எனும் இவ்வடிகளில் நீர் வேண்டுமளவு திறக்கக்கூடிய கதவுகளையுடைய வாய்த்தலைகளையுடையதாக மிழலை விளங்கியதை உணரமுடிகிறது. இங்கு வாழும் மக்கள் நெல்லறுத்துச் சோர்வடையும்போது கடல் நீரில் பாய்ந்து விளையாடுவர். மதுவை அருந்திக் குரவைக்கூத்தின் தாளத்திற்குத் தக ஆடுவர். இங்குள்ள ஆண்கள் புன்னைமாலையும் பெண்கள் முள்ளிப் பூவாலான மாலையையும் அணிவர்.

நடு இரவில் கடலுக்குச் சென்று பிடித்துக்கொணர்ந்த வாளை மீன்களை விற்கச் செல்லும் அழகிய பெண்கள் கள் மிக்க தெருவில் மீனைக் கொடுத்து அதற்கு மாறாகப் பழைய செந்நெல்லைக் கொள்ளாது கழங்கினைப் போன்ற பெரிய முத்துக்களும் அணிகலன்களும் பெறுவர். இத்தகைய வளமிக்க ஊர்களைக் கொண்டதாக எவ்வியின் நாடு இருந்ததை,

"மாலிருள் நடுநாள் போகித் தன்ஐயர்
காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு
அவ்வாங்கு உந்தி அஞ்சொல் பாண்மகள்
நெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகில்
பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்
கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்
பயங்கெழு வைப்பிற் பல்வேல் எவ்வி"[192]

என்னும் இப்பாடலில் நக்கீரர் குறிப்பிடுகிறார். இத்தகைய வளங்களையுடைய மிழலைக் கூற்றத்தைப் பாண்டியன் நெடுஞ்செழியன் கைப்பற்றிக் கொண்டான் என்பதைப் புறப்பாடல்வழி அறியமுடிகிறது.

**பல்குன்றக் கோட்டம்**

தொண்டைநாட்டின் இருபத்து நான்கு கோட்டங்களில் ஒன்று பல்குன்றக் கோட்டம். இதனை நன்னன் சேய் நன்னன் ஆட்சி செய்தான். இக்கோட்டம் நவிரமலை மற்றும் அதனைச் சுற்றிய பகுதிகளை உள்ளடக்கியதாக விளங்கியது. இன்றைய சவ்வாது மலைப்பகுதியும் திருவண்ணாமலை, செங்கம் பகுதிகளையும் கொண்டதாக பல்குன்றக் கோட்டம் விளங்கியது. இதன் தலைநகரமாக செங்கண்மா இருந்தது.

நன்னனின் பல்குன்றக் கோட்டத்தில் நவிரம் எனும் மலை இருந்தது. இம்மலைமீது உறையும் கடவுளாக காரியுண்டிக் கடவுள் (சிவபெருமான்) விளங்கினான். இம்மலை செல்வதற்கரிய அரண்களைக் கொண்டிருந்தது. இம்மலையில் தோன்றி அந்நாட்டை வளம் கொழிக்கச் செய்யும் ஆறாகச் சேயாறு விளங்கியது. நவிர மலையின் பக்க மலையில் மரங்கள் மிகுதியாக வளர்ந்திருக்கும். இம்மலைமீது ஏறும் வழி பாதையை நேராக எடுத்து நிறுத்தியதைப் போன்றிருக்கும். இதனை,

"படுத்துவைத் தன்ன பாறை மருங்கின்

எடுத்து நிறுத் தன்ன இட்டருஞ் சிறுநெறி"[193]

என்னும் பாடலடிகளில் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் காட்டுகிறார்.

இந்நாட்டில் வளம்மிக்க ஊர்கள் பல உள்ளன. இவ்வூர்கள் மிகுந்த வருவாய் காரணமாக எப்போதும் புதுமையாக இருக்கும். இங்கு மழை மிகுதியாகப் பொழிவதால் விதைத்த விதைகள் தவறாது முளைத்து வளம் சேர்க்கும். இங்கு முசுண்டை, எள், தினை, வரகு, அவரை, நெல், கரும்பு, மூங்கில், வெண்கடுகு, இஞ்சி, கவலைக்கிழங்கு, வாழை, பலா, மா போன்றவை மிகுதியாகப் பயிராககும் என மலைபடுகடாம் (95 – 140) கூறுகிறது. பல்குன்றக் கோட்டத்தின் நவிர மலையானது சிறியதும் நெடியதுமான மலையுச்சிகளைக் கொண்டிருக்கும். இங்குப் பலவகை ஓசைகளும் கேட்டவண்ணமிருக்கும். இங்குள்ள ஆண் குரங்கானது பெரிய பலாப்பழத்தைத் தோண்டுவதால் தேன் ஊறும். இப்பலாவின் மணம் மலை முழுவதும் பரவும். இதனை,

"கலைதொடு பெரும்பழம் புண்கூர்ந்து ஊறலின்

மலைமுழுதும் கமழும் மாதிரம்"[194]

எனும் பாடலடிகள் காட்டுகின்றன.

இந்நாட்டின் முல்லை நிலமானது புலி வந்ததால் மருண்டோடிய பெண்மானை நினைத்து அழைத்த வண்ணமிருக்கும் ஆண்மான். முல்லைக் கொடிகள் நிறைந்த இப்பகுதியில் காளைகள் மேய்ச்சலுக்கு வரும். இங்குள்ள பசுக்களின் இனிய பாலை இடைமகளிர் விருந்தினருக்குக் கொடுப்பர். மேலும் இந்நாட்டின் மருத நிலப்பகுதிகளில் பொலிவற்ற அடியையுடைய காஞ்சி மரங்கள் நிறைந்திருக்கின்றன. நீர்புகும்

வழிகளையுடைய பள்ளமான நிலங்கள் இருந்த ஊர்களில் பலவிதச் சோலைகளும் சேரிகளும் இருந்தன. பலவித நன்மைகளையும் உடையதாக மருதநிலப் பகுதி விளங்கியதை,

"புல்லரைக் காஞ்சிப் புனல்பொரு புதவின்
மெல்லிவல் இருந்த ஊர்தொறும் நல்லியாழ்ப்
பண்ணுப் பெயர்த் தன்னகாவும் பள்ளியும்
பல்நாள் நிற்பினும் சேந்தளிர் செலினும்
நன்பல உடைத்து அவன் தண்பனை நாடே"[195]

என்னும் இப்பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. இத்தகைய வளங்களையுடைய இந்நாட்டின் தலைவனாக நன்னன் சேய் நன்னன் விளங்கினான். இவன் வேளிர் குலத்தைச் சேர்ந்தவன். நன்னன் வேண்மான் என்றும் அழைக்கப்பட்டான். (அகம். 97) இவன் சிறந்த வள்ளலாகத் திகழ்ந்தான். இரவலர்க்குக் கைந்நிறைய அணிகலன்களை நல்குவான். இந்நாடு சங்க காலத்தின் பிற்பகுதியில் தோற்றம் பெற்றது எனக் கருத இடமுண்டு. தொண்டைநாடும் அதன் பிரிவான பல்குன்றக் கோட்டமும் ஒரே காலகட்டத்தில் தோற்றம் பெற்றிருக்கலாம் என்பதை அறிய முடிகிறது.

## தொகுப்புரை

வடக்கே வேங்கடத்தையும் தெற்கே குமரி முனையையும் கிழக்கு மேற்கில் கடல்களையும் எல்லையாகக் கொண்ட தமிழகம் பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டுப் பல்வேறு மன்னர்களாலும் வேந்தர்களாலும் ஆளப்பட்டு வந்தது. அரசு தோற்றம் பெற்றபோது அந்த அரசின் எல்லைகளாக நாடுகள் உருவாக்கம் பெற்றன. நாட்டின் பாதுகாப்பிற்காக அரண்கள் அமைத்து நிர்வாகத்திற்கான நிதியாக வரி வசூலித்தனர்.

நாட்டைப் பேரரசு நாடுகள், சிற்றரசு நாடுகள் என இருவகையாகப் பகுக்கலாம். இவை பரப்பளவினை அடிப்படையாகக் கொண்டவை. பேரரசு நாடுகளை ஆண்டவர்கள் வேந்தர் என்றும் சிற்றரசு நாடுகளை ஆட்சி புரிந்தவர்கள் மன்னர் என்றும் அழைக்கப்பட்டனர்.

ஆரம்ப காலகட்டங்களில் சிறிய பரப்பைக் கொண்டிருந்தாலும் பிற நாடுகளை வென்று இணைத்துக்கொண்டு பேரரசுகள் உருவாயின. அவ்வகையில் சேரர்கள் ஒற்றுமையுடன் செயல்பட்டு நாட்டை விரிவுபடுத்தினர். சோழரின் ஒற்றுமையின்மை நாட்டின் பரப்பை விரிவுபடுத்த இயலாத நிலையை உருவாக்கியது. பாண்டியர் வீரத்துடன் பல பகுதிகளைத் தன் நாட்டோடு இணைத்தனர். சேர, சோழ, பாண்டிய நாடுகள் சங்க காலத்தே பேரரசு நாடுகளாகத் திகழ்ந்தன.

சிற்றரசு நாடுகளில் பெரும்பான்மையானவை மலையையும் அதனைச் சார்ந்த பகுதிகளையும் கொண்டிருந்தன. இதனை ஆட்சி புரிந்தவர்கள் வேளிர், மழவர், அதியர், ஓவியர், ஆவியர் குடியினைச் சார்ந்தவர்கள்.

சிற்றரசு நாடுகளின் தலைவர்கள் பேரரசர்களின்கீழ் ஆட்சி செய்தனர். சிலர் பேரரசர்களின் தலைமையை ஏற்க மறுத்துப் போரிட்டு மடிந்தனர். நாடுகளுக்கு இடையேயான போருக்கு முக்கிய காரணம் நாட்டின் பரப்பை விரிவுபடுத்துவதாகும்.

கொங்குநாடு பரப்பில் பெரியதாக இருந்தாலும் நிலையான ஒருவர் முழுநாட்டையும் ஆளாததால் அடிக்கடி எல்லைப் போருக்கு உள்ளானது.

பேரரசு நாடுகளின் வெற்றிக்கும் சிற்றரசின் தோல்விக்கும் இந்நாடுகளின் வளர்ச்சி நிலைகளுக்கும் அந்நாடுகள் அமைந்த நிலப்பகுதிகளே காரணங்களாக அமைந்தன.

சிற்றரசு நாடுகளை ஆட்சி செய்தவர்கள் பேரரசர்களின்கீழ் படைத்தலைவர்களாகப் பணியாற்றினர். எனவே பேரரசர்கள் தனக்கு அடங்காத சிற்றரசு நாடுகளை மற்ற சிற்றரசரைக் கொண்டே தன்கீழ்க் கொண்டு வந்தனர். சிற்றரசர்களின் ஒற்றுமையின்மை அவர்களின் அழிவிற்கு வழிகோலியது.

சங்க காலத்தின் பிற்பகுதியில் தொண்டை நாடு, ஒய்மாநாடு, பல்குன்றக் கோட்டம் போன்ற நாடுகள் தோற்றம் பெற்றன.

## குறிப்புகள்

1. பி.டி.சீனிவாச ஐயங்கார், மொ.பெ; க. கோவேந்தன், தமிழர் வரலாறு, பக். 22 – 23
2. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 51
3. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப.
4. புறம். 299
5. மேலது. 338
6. மேலது. 353
7. மேலது. 299
8. மதுரைக்காஞ்சி, வரி, 776
9. தேவநேயப் பாவாணர், பழந்தமிழாட்சி, ப. 18
10. சிலம்பு. 23
11. மேலது. 30
12. புறம். 287, 345
13. தங்க. கந்தசாமி, போரியல், ப. 111
14. மதுரைக்காஞ்சி, அடி 65 – 67
15. புறம். 21
16. மேலது. 37, 21
17. அகம். 336
18. குறள். 381
19. பொருநர். 54
20. நற்றிணை, 18
21. புறம். 126
22. பதிற். 45, 46, 48
23. புறம். 66
24. குறள். 756
25. புறம். 75
26. பெரும்பாண். 80 – 81
27. பட்டினப். 118 – 125

28. வி. கனகசபை, மொ.பெ, கா. அப்பாதுரை, 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், ப. 27
29. மதுரைக். 70 – 71
30. புறம். 17
31. வி. கனகசபை, மேலது,ப. 27
32. குறள். 955
33. அ. சிதம்பரனார், சேரர் வரலாறு, ப. 8
34. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பண்டைநாளைச் சேர மன்னர் வரலாறு, பக். 26 – 27
35. பதிற். 15
36. மேலது. 15
37. மேலது. 30
38. சிறுபாண். 41 – 47
39. பதிற். 51
40. மேலது. 30
41. மயிலை சீனி வேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப. 2
42. பத்மஜா ரமேஷ், வி.பி. புருஷோத்தமன், சங்ககால மன்னர்களின் காலநிலை, I , ப. 214
43. அகம். 65
44. பதிற். பதிகம். 4
45. பதிற். 71
46. மேலது. 44
47. பதிற். பதிகம். 8
48. அகம். 209
49. கா. கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை, சோழர் , ப. 2
50. மா. இராசமாணிக்கனார், சோழர் வரலாறு, ப. 89
51. புறம். 393
52. மேலது. 67
53. மேலது. 377

54. அகம். 201

55. புறம். 399

56. மேலது.386

57. மேலது.13

58. பட்டினப். 8 – 13

59. பொருநர். 246 – 247

60. பட்டினப். 5 – 7

61. கே.என். சிவராசபிள்ளை, முற்காலத் தமிழர் வரலாறு, ப. 95

62. புறம். 13

63. கே.என். சிவராசபிள்ளை, மேலது, பக். 108 – 110

64. அகம், 336

65. புறம், 373

66. வி.எஸ்.வி. இராகவன், மெகஸ்தனிஸ், ப. 144

67. புறம், 58

68. அகம். 137

69. மேலது.338

70. மேலது.38

71. மதுரைக். 109 – 114

72. மேலது. 271 – 273

73. மேலது .286 -289

74. மேலது. 302 – 310

75. மேலது.321 – 325

76. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப. 3

77. அகம். 296

78. மேலது.266

79. மேலது.253

80. பெ. மாதையன், சங்ககால இனக்குழச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்,ப.37

81. தொல்.பொருள். மரபு. 84

82. புலவர் குழந்தை, கொங்குநாடு, ப. 40

83. மயிலை சீனி. வேங்கடசாமி, கொங்குநாட்டு வரலாறு, ப. 6
84. பதிற். 22
85. மேலது.77
86. அகம். 79
87. பதிற். 22
88. அகம். 368
89. மேலது.253
90. நற். 185
91. மேலது.185
92. குறுந். 89
93. கலித். 56
94. அகம். 208
95. குறுந். 100
96. புறம், 148
97. அகம். 209
98. நற். 320
99. அகம். 213
100. பதிற். 73
101. புலவர் குழந்தை, கொங்குநாடு, ப. 125
102. புறம். 390
103. மேலது.99
104. பதிற். பதிகம், 8
105. அகம். 143
106. மேலது.372
107. புறம், 158
108. மேலது.168
109. அகம். 143
110. புறம். 151
111. குறுந். 328

112. பதிற். பதிகம், 9
113. புறம். 158
114. சிறுபாண். 84 – 87
115. குறுந். 11
116. அகம். 226
117. மயிலை சீனி. வேங்கடசாமி, துளுநாட்டு வரலாறு, ப. 3
118. புறம். 154
119. அகம். 173
120. அகம். 258
121. மேலது.15
122. நற். 270
123. குறுந். 292
124. அகம். 158
125. மயிலை சீனி. வேங்கடசாமி, கொங்குநாட்டு வரலாறு, ப. 22
126. குறுந். 163
127. பதிற். 21
128. பதிற். பதிகம், 4
129. அகம். 396
130. வி.எஸ்.வி. இராகவன், தாலமி, ப.
131. அகம். 253
132. மேலது.36
133. புறம். 117
134. மேலது.105
135. சிறுபாண். 78 – 81
136. அகம். 78
137. புறம். 112
138. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 539
139. புறம். 122
140. மேலது.124

141. மேலது.174

142. மேலது.128

143. மேலது.375

144. குறுந். 84, புறம். 128

145. அகம். 69

146. மேலது.25

147. மேலது.322

148. மேலது.138

149. மேலது.137

150. புறம். 33, 215

151. மேலது.137

152. மேலது.139

153. மேலது.380

154. மேலது.158

155. மேலது.150

156. அகம். 152

157. குறுந். 210

158. புறம். 205

159. அகம். 3

160. புறம். 242

161. பத்மஜா ரமேஷ், வி.பி. புருஷோத்தமன், சங்ககால மன்னர்களின் காலநிலை, II, ப. 28

162. புறம். 399

163. தொல். பாயிரம்

164. புறம். 17

165. அகம். 141

166. மேலது.85

167. மேலது.265

168. மேலது.393

169. மேலது.61

170. மேலது.295

171. மேலது.359

172. புறம். 389

173. அகம். 27

174. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, பக். 152 – 153

175. அகம். 325

176. மேலது.113

177. மேலது.133

178. மா. இராசமாணிக்கனார், தமிழ்நாட்டு வரலாறு, பக். 61 – 63

179. பெரும்பாண். 192 – 196

180. மேலது.232 – 235

181. மேலது.67 – 69

182. மேலது.29 – 31

183. அகம். 213

184. குறுந். 260

185. ஆர், ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 94

186. சிறுபாண். 164 – 169

187. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 277

188. சிறுபாண். 178 – 184

189. புறம். 24

190. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 326

191. புறம். 24

192. அகம். 126

193. மலைபடு. 15 – 16

194. மேலது.292 – 293

195. மேலது.449 - 453

# இயல் இரண்டு

## சங்க கால நகரங்கள்

மனிதன் கூடிவாழ்ந்த சமூக நிலையே நகரங்களின் தோற்றத்திற்கு வித்திட்டது. மிகுதியான மக்கள் வாழுகின்ற மருத நிலத்தைச் சார்ந்த பகுதி நகரம் என்று அழைக்கப்பட்டது. வேளாண்மையைத் தொடர்ந்து பிற தொழில்கள் முக்கியத்துவம் பெற்றபோது கிராமங்கள் வளர்ந்தன. வளர்ந்த கிராமப் பகுதிகள் பேரூர்களாகவும் நாளடைவில் நகரங்களாகவும் வளர்ச்சி பெற்றன. முதன்முதலில் நகரம் எப்போது தோன்றியது என்பதை வரையறுத்துக் கூறமுடியவில்லை என்பர் அறிஞர்கள். நாகரிகம் தோன்றியது ஒரு புரியாத புதிராக உள்ளதுபோல் நகரம் தோன்றியதும் புரியாத புதிராகவே உள்ளது என கிஸ்ட் மற்றும் ஹால்பர்ட் கூறுவர். சங்க காலத்தில் இருந்த நகரங்கள் அவற்றின் செல்வநிலை, நகரமைப்பு, நகரத்திற்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவம், நடைபெற்ற வரலாற்று நிகழ்வுகள் ஆகியவற்றை இவ்வியல் ஆராய முற்படுகிறது.

### நகரம் - விளக்கம்

சங்க இலக்கியங்களில் நகர் என்ற சொல் நூற்றுக்கும் அதிகமான (140) இடங்களில் பயின்று வருகின்றது. ஆனால் நேரிடையாக நகரத்தைக் குறிக்கக் கூடியதாக இல்லை. நகரம் என்னும் சொல்லானது மாளிகை, வீடு, மனை, கடவுளின் கோயில், இல்லம், அரண்மனை ஆகிய பொருட்களை அதிகமாகவும் மக்கள் வாழும் நகரப்பகுதியைக் குறைவாகவும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. இதற்கு மாறாகப் பேரூர், மூதூர், தொல்பதி, பட்டினம் முதலான சொற்கள் நகரம் எனும் பொருளைக் குறித்து நின்றன. நகரங்கள் பெரும்பாலும் மருத நிலங்களில் உருப்பெற்றன. மருதநிலம் விளையுள் அதிகம் கொண்டதாக விளங்கியது. இவ்வேளாண்மை வளர்ச்சி பிற தொழில்கள், வணிகம் ஆகிய காரணிகள் விரிவடைய ஏதுவாக அமைந்தது. நகரத்தைக் குறிக்கும் பெயர்களாகச் சேந்தன் திவாகரம்,

"பாடியும் புரமும் நகரப் பதியே"

எனக் குறிப்பிடுகின்றது. நாகரிகத்தின் விளைவால் புதிதாகத் தோன்றிய ஊர்கள் நகர்கள் என்ற பெயரைப் பெற்றன எனக் கருதலாம்.

“தொடக்கத்தில் எடுத்த எடுப்பிலேயே நகரமைப்பு அமைந்துவிடவில்லை. முதலில் சிறுசிறு குடியிருப்புகளைக் கொண்ட கிராமங்களையும் சிற்றூர்களையும் அமைக்கும் ஊரமைப்புதான் ஏற்பட்டது. பின் அது படிப்படியாகப் பெருகி நகரமைப்பு வரை விரிவடைந்தது என்பதே பொருத்தமாக இருக்கும்”[1] என்பார் நா. பார்த்தசாரதி. மேலும் இவர் நகரமைப்பு மயமதம் எனும் கட்டடக்கலை விதிப்படி அமைக்கப்பட்டது என்றும் கூறுகிறார். இக்கருத்திற்கேற்ப கைவல் கம்மியர் சிற்பநூல் முறைப்படி மனைகளையும் நகரங்களையும் அரண்மனைகளையும் வகுத்துக் கொடுத்தனர் என்பதை,

“நூல்அறி புலவர் நுண்ணிதின் கயிறுஇட்டு
தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி
பெரும்பெயர் மன்னர்க்கு ஒப்ப மனைவகுத்து”[2]

என்னும் நெடுநல்வாடையின் அடிகள் வாயிலாக நக்கீரர் உணர்த்துகின்றார்.

நகரங்களை மிகப்பெரிய மாடிவீடுகள் அணிசெய்தன. அவற்றிடையே அரண்மனையின் வாயில்கள் மிகவும் உயரமானதாக இருக்கும். இவ்வாயில்களின் வழியே யானைகளின்மேல் அமர்ந்தபடி வெற்றிக் கொடிகளை உயர்த்திப் பிடித்தபடி வீரர்கள் செல்வர். அரண்மனைகளில் விடிவிளக்குகள் எரிந்து கொண்டே இருந்ததை, “வைகு சுடர் விளங்கும் வான்தோய் வியனகர்ச்” (அகம். 87) என்னும் அடி காட்டுகிறது.

“நாகரிகம் நிறைந்த மக்களோடும் பல்வகைத் தொழில்களோடும் பிற சிறப்புகளோடும் அரசியல் தொடர்போடும் வணிக நலத்தோடும் அமைந்த மிகப்பெரிய குடியிருப்புகளை நகரம் என்று அழைத்தனர்”[3] என ஆர். ஆளவந்தார் கூறுகிறார். சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் நகரங்கள் பெரும்பாலும் அரசியல் தொடர்போடும் அரசன் குடியிருப்பு, கோட்டைகள் சூழ்ந்ததாகவும் அதன் வளங்கள் தலைவியின் அழகுக்கு உவமையாகவும் காட்டப்படுகின்றன. இத்தன்மைத்தான நகரங்களை நகரம், தலைநகரம், துறைமுக நகரம் என மூவகையாகப் பாகுபடுத்தி இவ்வியல் ஆராய்கிறது.

## நகரங்கள்

### அம்பர்

சங்ககாலம்தொட்டே நிலவிவரும் அம்பர் எனும் ஊர் இன்றைய தஞ்சை மாவட்டத்தில் பூந்தோட்டம் புகைவண்டி நிலையத்திற்குத் தென்கிழக்கே சுமார் நான்கு கல் தொலைவில் உள்ளது. அம்பர், அம்பர் மாகாளம், இன்னம்பர் என மூன்று ஊர்கள் காணப்படுகின்றன. இவற்றுள் அம்பர், அம்பர் மாகாளம் இரண்டும் அருகருகே அமைந்துள்ளன. இவையே சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் அம்பர் ஆகும்.

சங்க காலத்தே அம்பர் நகரமாக விளங்கியது. இந்நகரம் சோழநாட்டில் அமைந்திருந்தது. இதனைச் சூழ்ந்து அரிசிலாறு ஓடியது. இது காவிரியிலிருந்து பிரிந்தோடும் கிளை ஆறாதலால் காவிரி எனவும் குறிக்கப்பட்டது. இந்நகரம் தாழ்ந்த நிலப்பாங்கான தோட்டங்களையும் நெல் விளைகின்ற கழனிகளையும் உடையதாகத் திகழ்ந்தது. இதனை,

> "காவிரி யனையுந் தாழ்நீர்ப் படப்பை
> நெல்விளை கழனி யம்பர் புல்லிய
> நல்ல ருவந்தை"[4]

என்னும் புறநானூற்றின் இப்பாடலடிகள் விளக்குகின்றன. மேலும் இப்பாடல் அம்பர் நகரத்தை அருவந்தை என்பவன் ஆட்சி செய்தான் எனவும் கூறுகிறது.

அருவந்தையின் அம்பர் நகரத்தை வளவன் தந்தங்களையுடைய யானைப் படைகளுடன் வந்து போரிட்டு தனதாக்கிக் கொண்டான். அதுமுதல் கிள்ளியின் அம்பர் என அழைக்கப்பட்டது.

> "ஏந்துகோட்டு யானை இசைவெம் கிள்ளி
> வம்பணி உயர்கொடி அம்பர் சூழ்ந்த
> அரிசிலந் தெள்ளறல்"[5]

எனும் இப்பாடலில் சோழன் கிள்ளிவளவனின் அம்பர் புதியதாகிய அலங்கரிக்கப்பட்ட உயர்ந்த கொடிகளுடன் விளங்கியது எனவும் இந்நகரைச் சூழ்ந்து அரிசிலாறு ஓடுகிறது எனவும் புலவர் கல்லியங்குமரனார் புகழ்ந்து கூறுகிறார்.

## அரையம்

அரையம் என்னும் நகரம் சிற்றரையம், பேரரையம் என்ற இரு பகுதிகளாகத் திகழ்ந்தது. இந்நகரம் இருங்கோவேளின் முன்னோருக்கு உரியதாக இருந்தது. இந்நகரத்தை ஒட்டியமைந்த மலையில் பொன் விளைந்தது. எனவே அரையம் பலகோடிப் பொன்னை நிதியாகக் கொண்டு செல்வ வளத்துடன் இருந்தது. வெற்றி பொருந்திய நீண்ட மதிலுடன் விளங்கிய இந்நரகம் இருங்கோவேளின் முன்னோன் காலத்திலேயே அழிந்துபட்டது. இவ்வழிவிற்குக் காரணம் கழாஅத்தலையார் எனும் புலவரை இருங்கோவேளின் முன்னோன் ஒருவன் இகழ்ந்தான். எனவே இந்நகரம் அழிவைச் சந்தித்தது எனக் கபிலர் பாடுகிறார்.

"பொன்மிளிரக்
கடிய கதழு நெடுவரைப் படப்பை
வென்றி நிலைஇய விழுப்புக ழொன்றி
இருபாற் பெயரிய வுருகெழு மூதூர்க்
கோடிபல வடுக்கிய பொருணுமக் குதவிய
நீடுநிலை யரையத்துக் கேடுங் கேளினி
நுந்தை தாய நிறைவுற வெய்திய
ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்
நும்போல் லளிவி னுமரு ளொருவன்"[6]

எனும் இப்பாடலில் கபிலர் பலகோடிப் பொன்னைக் கொண்டு விளங்கிய நகரம் என அரையத்தைப் புகழ்கிறார்.

அரையம் எனும் நகரம் அழிந்ததற்கான காரணத்தைக் கூறும் கபிலர் அந்நகரம் எவ்விதத்தில் அழிந்தது எனக் கூறவில்லை. இவ்வொரு பாடலைத் தவிர சங்கப் பாடல்களில் இதற்கான குறிப்புகள் இல்லை. ஆனால் ரா. ராகவையங்கார் தனது வேளிர் வரலாற்றில் இந்நகரம் மண் மாரியால் அழிந்தது எனக் கூறுகிறார். இது கபிலர் காலத்திலேயே அழிந்துவிட்டது என்பதால் எங்கு அமைந்திருந்தது என அறிய முடியவில்லை. இருங்கோவேளின் முன்னோருடைய நகரம் என்ற ஒரு குறிப்பு மட்டுமே உள்ளது. எனவே எருமை நாட்டுப் பகுதியில் துவாரகை நகரத்திற்கு அருகில் இருந்திருக்கக் கூடும் என ஊகிக்கலாம்.

**அலைவாய்**

அலைவாய் எனும் நகரம் திருச்சீரலைவாய், செந்தில், திருச்செந்தில் என்ற பெயர்களில் வழங்கப்பட்டு தற்போது திருச்செந்தூர் என அழைக்கப்படுகிறது. இன்றைய திருநெல்வேலி மாவட்டத்தில் கடற்கரை ஓரமாக இந்நகரம் அமைந்துள்ளது. சங்க இலக்கியங்களில் அலைவாய் முருகனுக்குரிய இடங்களில் ஒன்றாகப் பாடப்பட்டுள்ளது. இன்றளவும் முருகனின் ஆறுபடை வீடுகளுள் ஒன்றாகத் திகழ்கிறது. "அலையிடத்து அமைந்துள்ள கோவிலாதலின் அலைவாய் எனப்பட்டது. பின்னர் இப்பெயர் அக்கோவில் உள்ள ஊருக்குப் பெயராயிற்று எனலாம்"[7] என இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார்.

அலைவாயிடத்தே வான்வழியே சென்று முருகன் எழுந்தருளுவான். அச்சமயத்தில் தேவர்கள் துந்துபி முழக்குவர். கொம்பு, சங்கு, முரசு போன்றவற்றையும் முழக்குவர். மயிலானது முருகப்பெருமானின் வெற்றிக் கொடியிலிருந்து அகவும் எனத் திருமுருகாற்றுப்படை கூறுகிறது. முருகனுக்குரிய நகரமாக அலைவாய் விளங்கியதை,

"திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎய்"[8]

என்னும் பாடல் புலப்படுத்துகிறது.

கடல் அலைகள் அலைக்கும் கடற்கரைப் பக்கத்தே அமைந்திருந்த இந்நகரின் மணிவிளக்கு எந்நேரமும் ஒளிவீசிக் கொண்டிருக்கும். இந்நகரின் பக்கத்தே உள்ள வயலில் உழுவோர் செருக்குடன் எழுப்பும் ஆரவாரத்திற்கு அஞ்சி மயில்கள் குன்றிடத்தே சென்று அமரும். இதனை,

"கழனி யுழவர் கலிசிறந் தெடுத்த
கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை
அணங்குடை வரைப்பகம் பொலியவந் திறுக்குந்
திருமணி விளக்கின் அலைவாய்"[9]

என்ற அகப்பாடலில் பரணர் குறிப்பிடுகிறார். இந்நகரம் இன்றளவும் தன் பெருமை குன்றாது முருகன் உறையும் பகுதியாகவே விளங்கி வருகிறது.

### ஆமூர்

சங்க இலக்கியங்கள் வாயிலாக மூன்று ஆமூர் இருந்தமை தெரிய வருகின்றது. இம்மூன்றில் நகரமாக விளங்கியது ஒய்மாநாட்டில் அமைந்த ஆமூராகும். இந்நகரம் மருதநில வயல்களை மிகுதியாகக் கொண்டிருந்தது. சான்றோர் உறையும் அரிய காவலுடையதாக விளங்கியது. பெரிய இந்நகரத்தைச் சுற்றிலும் அகழி இருந்தது. இந்நகரில் அந்தணர்கள் வசித்து வந்தனர். இங்கு உழவரின் தங்கை, வருகின்ற விருந்தினர்க்கு முறைப்படி வரவேற்பளித்து உபசரிப்பாள். இரும்புப் பூண் போட்ட உலக்கை கொண்டு குத்திய அரிசியைக் கொண்டு ஆக்கிய வெண்சோற்றுத் திரளை நண்டின் கலவையுடன் பரிமாறிப் பசியாற்றுவர். இதனை,

"மருதஞ் சான்ற மருதத் தண்பனை
அந்தண ரருகா வருங்கடி வியனகர்
அந்தண் கிடங்கின் அவன் ஆமூரெய்தின்
……….. ……….. ……… ………….
இருங்காழ் உலக்கை இரும்புமுகந் தேய்த்த
அவைப்புமாண் அரிசி அமலைவெண் சோறு
கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுகுவீர்"[10]

என நல்லூர் நத்தத்தனார் சிறுபாணாற்றுப்படையில் புலப்படுத்துகிறார்.

"ஆமூர் எனும் பெயர் கொண்ட ஊர் திண்டிவனம் வட்டத்தில் இல்லை. எனினும் வேலூருக்கு வடமேற்கில் ஏறத்தாழ நான்கரைக் கல் தொலைவில் 'கொண்டாமூர்' என்றும் இதற்கு வடமேற்கில் மூன்றரைக்கல் தொலைவில் 'சிற்றாமூர்' என்றும் அதற்கும் வடமேற்கில் மூன்றுகல் தொலைவில் 'நல்லாமூர்' என்றும் மூன்று ஊர்கள் அமைந்துள்ளன. இந்த நல்லாமூர் கிடங்கிலுக்கு அருகில் உள்ளதாலும் சிறுபாணன் கூற்றுப்படி மருத வளம் காணப்படுவதாலும் நல்லாமூரே சங்ககால ஆமூராய் இருந்திருக்கலாம்"[11] என இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார். எனவே இன்றைய நல்லாமூரே சங்க கால ஒய்மானாட்டு ஆமூர் நகரமாக விளங்கியது என்பதை அறிய முடிகிறது.

### ஆவிநன்குடி

இன்றைய பழநி மலையின் அடிவாரப் பகுதியே அக்கால ஆவிநன்குடி ஆகும். பழநி மலை 'பொதினி' என சங்க இலக்கியங்களில் பயின்று

வந்துள்ளது. இதனை ஆவியர் குடியினர் ஆண்டு வந்தனர். “ஆவிக் கோமானின் குடியினர் வாழ்ந்த ஊர் ஆவிகுடி என வழங்கப் பெற்று நாளடைவில் ஆவினன்குடி என ஆகியிருக்க வேண்டும்”[12] என்று ஆர். ஆளவந்தார் கூறுகிறார். பொதினி மலையையும் பேகனையும் பாடிய புலவர்கள் ஆவிநன்குடியைக் குறிப்பிடாததால் இந்நகரம் பிற்காலத்தில் புகழ்பெற்றதாக விளங்கியிருக்க வேண்டும். இன்றுள்ள பழனி என்னும் தலத்தில் மலையடிவாரத்தில் உள்ள கோயில் ஆவிநன்குடி எனும் ஊரைச் சார்ந்த பழைய கோயில். மலைமீதுள்ள கோயில் பிற்காலத்தது என பழனித்தல வரலாறு கூறுகிறது. இந்நகரம் ‘சித்தன் வாழ்வு’ என்ற பெயரையும் கொண்டிருந்தது.

திருஆவிநன்குடியில் உறையும் முருகனைத் தரிசிக்க முனிவர்கள் வந்தனர். இவர்கள் மரவுரி தரித்தும் வலம்புரிச் சங்கின் வடிவில் நரைமுடியையும் உடையவராய் விளங்கினர். இவர்கள் காமமும் சினமும் நீங்கியவராய் வருத்தம் சிறிதும் இல்லாதவர்களாகவும் திகழ்ந்தனர். வெறுப்பில்லாத் தூய ஆடையை அணிந்த கந்தருவர் முருகனை வந்து வழிபடுவர். இவர்கள் இனிய பாக்களை மென்மையாகப் பாடுவர். குற்றமற்ற கந்தருவ மகளிரும் மட்டுமல்லாது கருடக் கொடியையுடைய திருமாலும் காளைக் கொடியைக் கொண்ட உமையை ஒருபாகத்தே பெற்ற முக்கண்ணனான சிவனும் ஆயிரம் கண்களையுடைய பல வேள்விகள் செய்த ஐராவத வாகனனான இந்திரன் ஆகியோரும் திருஆவிநன்குடி சென்று முருகனைத் தரிசித்தனர் எனத் திருமுருகாற்றுப்படை (126 – 173) கூறுகிறது.

மேற்கூறிய இவர்கள் அனைவரும் வந்து காணும்படி குற்றமற்ற தெய்வானையுடன் முருகப்பெருமான் எழுந்தருளியிருந்தான். இதனை,

“தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவிநன்குடி அசைதலும் உரியன்”[13]

என்னும் இவ்வடிகள் உணர்த்துகின்றன.

### கடம்பின் பெருவாயில்

சங்ககாலத் துளு நாட்டில் அமைந்த நகரங்களுள் ஒன்றாகக் கடம்பின் பெருவாயில் விளங்கியது. இதனை நன்னன் மரபினர் ஆட்சி செய்தனர். இந்நகரம் எப்பகுதியில் இருந்தது என்பதற்கான குறிப்புகள் சங்க

இலக்கியத்தில் இல்லை. துளு நாட்டிலுள்ள நகரம் என்ற செய்தியை மட்டுமே அறியமுடிகின்றது. இந்நகரத்தின்மீது களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் படையெடுத்து வந்தான். இச்சேரனின் படைகளும் நன்னனின் படைகளும் இந்நகரத்தே போரில் சந்தித்தன. இப்போரில் நன்னனின் காவல் மரமாகிய வாகை மரத்தை வெட்டிச் சாய்த்தான் நார்முடிச்சேரல். இப்போரில் யானைகளின் உடல்களையும் இழுத்துச் செல்லும் அளவுக்கு இரத்த ஆறு ஓடியது என வியந்து கூறுகிறது பதிற்றுப்பத்தின் பதிக வரிகள்.

"உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை
நிலைச்செருவின் ஆற்றலை அறுத்து அவன்
பொன்படு வாகை முழுமுதல் தடிந்து
குருதிச் செம்புனல் குஞ்சரம் ஈர்ப்பச்
செருப்பல செய்து செங்களம் வேட்டுத்
துளங்குகுடி திருத்திய வளம்படு வென்றிக்
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்"[14]

இப்போருக்கான காரணம் நார்முடிச் சேரலின் படைத்தலைவனான ஆஅய் எயினனை நன்னனின் படைத்தளபதி மிஞிலி கொன்றான். எனவே மிஞிலியையும் நன்னனையும் கொன்று மீள்வேன் என வஞ்சினம் கூறிக் கடம்பின் பெருவாயில்மீது போர்தொடுத்தான். நார்முடிச்சேரல்[15]. புன்னாட்டின்மீது போர்தொடுக்க, நார்முடிச் சேரலின் ஆணைக்கிணங்கி பன்னாட்டு மக்களுக்கு ஆறுதல் கூறியபடி போரை எதிர்கொண்டான் ஆஅய் எயினன். இப்போரில் எயினனை மிஞிலி கொன்றதும் எயினனின் உடலுக்கு வெயில் படாதவாறு பறவைகள் காத்ததையும் (அகம், 142, 181, 208, 396) முதல் இயலில் விளக்கப்பட்டுள்ளது. இந்நிகழ்ச்சி நார்முடிச் சேரலுக்கு சினமேற்படுத்திக் கடம்பின் பெருவாயில்மீது போர் தொடுக்கச் செய்தது என ஊகிக்கலாம். இப்போரில் நன்னனின் காவல் மரத்தை அழித்தும் மனம் பொறாது மீண்டும் ஒருமுறை போர்தொடுத்துச் சென்று வாகைப் பெருந்துறை எனுமிடத்தில் தாக்கினான். இது பிற்பகுதியில் விளக்கப்பட உள்ளது.

**கொடுமணம்**

சங்ககாலக் கொடுமணம் தற்போது கொடுமணல் என அழைக்கப்படுகிறது. இது இன்றைய ஈரோடு, திருப்பூர் மாவட்டங்களின் எல்லைப் பகுதிக்கு அருகில் உள்ளது. நொய்யலாற்றின் வடகரையில்

ஈரோட்டிலிருந்து நாற்பது கல் தொலைவில் அமைந்துள்ள சிற்றூரே சங்க காலத்தில் நகரமாக விளங்கிய கொடுமணம் ஆகும். "இதன் அமைவிடம் சங்க காலச் சேரநாட்டின் தலைநகரமான கரூரை மேற்குக் கரையுடன் இணைக்கும் பண்டைய வணிகப் பாதையில் இருப்பது குறிப்பிடத்தக்கது. கிறிஸ்துவுக்கு முந்தைய முதல் சில நூற்றாண்டுகளில் இப்பகுதி வணிகத்திலும் தொழில் முறையிலும் சிறப்புற்றிருந்தது"[16] எனக் கூறுகிறார் தொல்லியல் ஆய்வாளர் க. இராஜன். சங்க காலத்தில் கொடுமணத்தில் அணிகலன்கள் செய்யப்பட்டன. அணிகலன்கள் செய்வதில் புகழ்பெற்ற நகரமாக கொடுமணம் விளங்கியதை,

"கொடுமணம் பட்ட நெடுமொழி ஒக்கலொடு"[17]

"கொடுமணம் பட்ட வினைமான் அருங்கலம்"[18]

என்னும் பதிற்றுபத்தின் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இந்நகரம் சேரர்க்குரியதாக இருந்தது.

கொடுமணம் நகரத்தே செய்யப்பட்ட வேலைப்பாடு மிக்க அரிய கலைப்பொருட்கள் 'பாண்டில்' என்னும் வண்டிகளில் ஏற்றி மேற்குத்தொடர்ச்சி மலைகளின் வழியே உள்நாடுகளுக்குக் கொண்டு செல்லப்பட்டன. இது சிறந்த வணிக நகரமாகத் திகழ்ந்தது. இங்கு சங்க காலத்திலேயே கா்னீலியன் கற்கள், ஆனிக்ஸ் கற்கள் மற்றும் பலவிதமான கற்களைக் கொண்டு பல வடிவங்களில் செய்தனர். இக்கற்களையும் மணிகளையும் கோர்த்து அணிகலன்கள் செய்தனர். இங்கு மேற்கொண்ட அகழாய்வில் இயற்கையாகவும் பட்டை தீட்டப்பட்டதுமான கற்கள் இதுவரை 2,260க்கும் மேற்பட்டவை கண்டறியப்பட்டுள்ளன.

கடந்த இருபத்திரண்டு ஆண்டுகளாக விட்டுவிட்டு நிகழும் அகழ்வில் நாணயங்கள், முதுமக்கள் தாழி, கோக்கும் மணிகள், அணிகலன்கள், ஆபரணங்கள், மண் உபயோகிக்கும் தக்களி, சுடுமண்ணால் செய்யப்பட்ட தொழில் கருவிகள், பண்டைய தமிழ் பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட மண்பாண்டங்கள், இலக்கணப் பிழையின்றி எழுதிச் சுடப்பட்ட பானையோடுகள், கத்தி, கேடயம், அம்பு முனைகள், அரிவாள், இரும்பாலான கருவிகள், நெசவுத் தொழிற்சாலை, மணிகள் கோர்க்கும் தொழிற்சாலைகள், சங்கை அறுக்கும் தொழிற்கூடங்கள், அச்சு முத்திரைகள், நாணயப்

பத்திரமாற்றம் ஆகியவை கிடைத்துள்ளன. இவை பதிற்றுப்பத்து கூறும் செய்தியை மெய்ப்பிப்பனவாக உள்ளன.

எனவே சங்க காலத்தில் கொடுமணம் எனும் நகரம் அணிகலன்கள் செய்யும் தொழில் நடைபெற்ற மிகப்பெரிய தொழில் நகரமாக விளங்கியதை உணரமுடிகிறது.

**துறையூர்**

சங்ககாலத்தில் துறையூர் எனும் நகரம் காவிரியாற்றின் கரையில் அமைந்திருந்தது. எனவே இது சோழநாட்டிலுள்ள நகரமாகலாம். இவ்வூரின் துறையில் குளிர்ந்த நீரோடும் வாய்த்தலைகள் (மதகுகள்) பல அமைக்கப்பட்டிருந்தன. இந்நகரம் நீர்வளமும் நிலவளமும் பெற்றதாக விளங்கியது.

"தண்புனல் வாயிற் துறையூர் முன்றுறை
நுண்பல மணலினும்"[19]

எனத் துறையூர் ஆற்றங்கரையிலுள்ள நுண்ணிய மணலினும் பலகாலம் வாழ்க என ஆஅய் அண்டிரனை வாழ்த்துகிறார் புலவர் துறையூர் ஓடைக்கிழார். இப்புலவர் சுட்டிய துறையூர் பெரம்பலூர் மாவட்டத்தில் அமைந்துள்ள துறையூர் ஆகலாம். இன்றளவும் இப்பெயராலேயே அழைக்கப்பட்டு வருகிறது. இன்றும் நகரமாகவே விளங்கும் இதனைச் சுற்றி ஆறுகளும் ஓடைகளும் காணப்படுகின்றன. எனவே இது சங்க காலத் துறையூராக இருக்க வாய்ப்புகள் அதிகம். இக்கருத்து மேலும் ஆராய்வதற்குரியது.

**பரங்குன்றம்**

பரங்குன்றம் திருப்பரங்குன்றம் என இன்றளவும் அழைக்கப்பட்டு வருகிறது. சங்க காலத்தில் இருந்த மதுரை மாநகரின் மேற்கே அமைந்திருந்தது. ஆனால் தற்போதைய மதுரைக்குத் தென்மேற்கில் ஐந்து கல் தொலைவில் அமைந்துள்ளது. இந்நகரம் சங்க காலம் முதல் முருகனுக்குரிய தலமாக விளங்கியது என்பது,

"கொடிநுடங்கு மறுகிற் கூடற் குடாஅது
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய
ஓடியா விழவின் நெடியோன் குன்றம்"[20]

இவ்வகப்பாடலால் உணரமுடிகிறது.

பரங்குன்றின்மீது சோலைகள் மிகுதியாக இருந்தன. மலையிலிருந்து அருவிகள் பல கொட்டின (பரி.14). குளிர்ந்த நீரையுடைய சுனைகளும் இருந்தன. இவற்றின் குவளை மலர்கள் நிறைந்திருக்கும். சந்தன மரங்கள் காணப்படும் இக்குன்று விண்ணை நோக்கி உயர்ந்திருக்கிறது. எனவே இது இமயமலையை ஒத்து நிற்கும் எனப் புகழப்படுகிறது. இதனைப் 'பரங்குன்று இமயக் குன்றம் நிகர்க்கும்' (பரி. 8) என்னும் அடி காட்டுகிறது.

மலைப்பகுதியாக இருந்தாலும் முருகன் உறையும் பகுதியாக இருந்ததால் நகரமாக விளங்கியது. இங்கு முருகனைக் காணும் பொருட்டு சிவன், பிரமன், திருமால், இந்திரன் முதலிய தேவர்கள் வருவர். இந்நகரம் தினந்தோறும் திருவிழாக் கோலத்துடனே திகழும். பிரிந்து சென்ற கணவர் விரைவில் வந்து சேரவேண்டும் எனத் தலைவியர் முருகனை வேண்டிப் பூசை செய்வர் எனப் பரிபாடல் கூறுகிறது. மதுரைக்கும் பரங்குன்றத்திற்கும் இடையில் அகன்ற வயல்கள் அமைந்திருந்தன. இவ்வயல்களிலுள்ள தாமரை மலர்களில் வண்டுகள் இரவில் துயில் கொள்ளும். வைகறைப் பொழுதில் தேன் மணக்கும் நெய்தல் மலர்களிலுள்ள தேனை நுகரும். ஞாயிறு தோன்றியவுடன் பரங்குன்றத்தில் உள்ள சுனையில் பூத்த மலர்களில் சென்று ஆரவாரித்த வண்ணமிருக்கும். இதனை,

"கூடற் குடவயின்
இருஞ்சேற் றகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முட்டாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந்த துறைதலும் உரியன்"[21]

திருமுருகாற்றுப்படையின் இவ்வடிகள் புலப்படுத்துகின்றன. இந்நகரம் இன்றும் முருகனுக்குரிய படைவீடுகளுள் ஒன்றாகத் திகழ்கிறது.

**மாவிலங்கை**

சங்க காலத்து மாவிலங்கை புகழ்பெற்ற பண்டைய இலங்கையின் பெயரைக் கொண்டது எனச் சிறுபாணாற்றுப்படை புகழும். இது ஒய்மாநாட்டின் உள்நாட்டு நகரமாக விளங்கியது. தற்போது

திண்டிவனத்திற்கு வடக்கில் ஏறத்தாழ ஏழு கல் தொலைவில் தெள்ளாறு செல்லும் நெடுஞ்சாலையில் மேல்மாவிலங்கை, கீழ்மாவிலங்கை என்னும் சிற்றூர்கள் அமைந்துள்ளன. இவையே சங்க காலத்து மாவிலங்கையாக விளங்கின. இந்நகரத்தைத் தாலமி 'மெலங்கே' எனக் குறிக்கிறார். "கடற்கரை ஓரமாக நீரும் நிலமுமாக அமைந்த இடம் கலக்குமிடத்தில் கிளைகளாகப் பிரிந்து இடையிடையே நீரும் திடலுமாக அமைவதுண்டு. இவ்வாறு நீரும் திடலுமாக அமைந்திருந்த பட்டினம், மாவிலங்கை என்னும் பெயரைப் பெற்றிருந்தது"[22] என மயிலை சீனி வேங்கடசாமி குறிப்பிடுகிறார்.

மாவிலங்கையைச் சூழ்ந்து நிர் நிறைந்திருந்தது. இந்நீர்த்துறையில் மகளிர் நீராடுவர். அந்நீரில் சுரபுன்னை மலர்களும் அகில் கட்டைகளும் சந்தனக் கட்டைகளும் மிதக்கும். இதனை ஓவியர் குடியினர் ஆண்டு வந்தனர். இவர்கள் கொடையில் சிறந்தவனாக நல்லியக்கோடன் விளங்கினான். புகழ்பெற்ற பழைய இலங்கையின் பெயரைக் கொண்டு விளங்கியதை,

"நறுவீ நாகமும் அகிலும் ஆரமும்
துறையொடு மகளிர்க்குத் தோட்புனை யாகிய
பொருபுனல் தரூஉம் போக்கரு மரபின்
தொன்மா இலங்கை கருவொடு பெயரிய
நன்மா இலங்கை மன்ன ருள்ளும்
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்
உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்"[23]

என்னும் சிறுபாணாற்றிப்படையின் இப்பாடலடிகள் காட்டுகின்றன.

மாவிலங்கை நகரத்தே விளையாடும் சிறுமிகள் கேழல் பன்றி உழுத கரிய சேற்றைக் கிளறுவர். அச்சேற்றின் அடியில் ஆமை முட்டைகள் இருக்கும். இந்த முட்டையோடு தேன்நாறும் ஆம்பற் கிழங்குகளையும் உண்பர். இந்நகரம் இமும் எனும் ஓசையுண்டாகும்படி முழங்கும் நீர் வெளிப்படும் மதகுகளைக் கொண்டதாகத் திகழ்ந்தது (புறம். 176). இங்கு நெல் அறுக்கும்போது அரிவாள் கூர் மழுங்குமாயின் சேற்றில் படிந்திருக்கும் வயல் ஆமையின் முதுகில் அரிவாளைத் தீட்டிக் கூராக்குவது உவழர்களின்

வழக்கம். நெற்பயிர் நெருங்கிய விளைவயல்களை உடையதாக மாவிலங்கை விளங்கியது என்பதை,

"நெல்லரி தொழுவர் கூர்வாள் மழுங்கிற்
பின்னை மறத்தோ டரியக் கல்செத்து
அள்ளல் யாமைக் கூன்புறத் துரிஞ்சும்
நெல்லமல் புரவி னிலங்கை"[24]

என்னும் இப்புறப்பாடல் மூலம் புறத்திணை நன்னாகனார் பாடியுள்ளார். இதன் வாயிலாகச் சங்க காலத்தே மாவிலங்கை ஆழ்ந்த அகழி, மதில் போன்றவற்றோடு நீர்வடியும் மதகுகளைக் கொண்டு விளங்கியதையும் நீர்வளத்தால் செழிப்புறும் மருதநில வயல்களையும் கொண்டிருந்ததையும் உணர முடிகின்றது.

"மேல்மாவிலங்கை ஏரிக்குக் கிழக்கிலும் மூதூர் ஏரிக்கு மேற்கிலும் நெடுஞ்சாலையை அடுத்துள்ள பகுதியில் ஓரடி நீளமும் அரையடி அகலமும் இரண்டங்குலம் கனமும் உடைய செங்கல் அடிப்படை ஏறத்தாழ முப்பது ஆண்டுகளுக்குமுன் காணப்பட்டது. அப்பகுதியில் இன்றும் பண்டைக்கால மட்பாண்டச் சிதைவுகள் காணப்படுகின்றன[25] என்பார் மா. இராசமாணிக்கனார். மேலும் அவர் மேல்மாவிலங்கை கீழ்மாவிலங்கை இரண்டும் சேர்ந்த பகுதியே சங்ககால மாவிலங்கையாக விளங்கியது என்றும் அது காலப்போக்கீல் இரண்டாகப் பிரிந்துவிட்டது என்றும் கூறுகிறார்.

**மோகூர்**

இது பாண்டிய நாட்டில் அமைந்த நகரமாகும். இதனைப் பழையன் மாறன் ஆட்சி செய்தான். இந்நகரம் இன்றைய மதுரைக்கருகில் 'திருமோகூர் என்னும் ஊராக விளங்குகிறது. "மோகம் என்பதற்குப் பாதிரி அல்லது மோகமுடையவர் ஆகிய பொருள்களின் அடிப்படையில் 'மோகூர்' தோன்றியிருக்கக்கூடும் என்பதே பொருத்தமாக உள்ளது"[26] என கே. பகவதி கூறுகிறார்.

சங்க காலத்தில் மோகூரை ஆண்ட பழையன் மாறன் பாண்டியனின் படைத்தளபதியாக விளங்கினான். இப்பழையனின் அவையில் நன்மொழிக் கோசர் சிறப்பித்தனர் என மதுரைக்காஞ்சி (506 – 507) கூறுகிறது.

ஒருமுறை கிள்ளிவளவன் எனும் சோழமன்னன் கோதை மார்பனின் வஞ்சியைக் கைப்பற்றி முற்றிலும் அழித்தான். அவ்வெற்றியோடு திரும்பும்போது மதுரையைத் தாக்கத் திட்டமிட்டு மதுரைக்கருகில் பாசறையமைத்துத் தங்கினான். இச்சமயத்தில் பாண்டியனுக்கு உதவும் பொருட்டு பழையன் படைகொண்டு வந்தான். கிள்ளி வளவனின் பாசறையை ஒருபுறம் பாண்டியனும் மறுபுறம் பழையனும் தாக்கினர். இந்த இருமுனைத் தாக்குதலைச் சமாளிக்க முடியாது கிள்ளிவளவன் தோற்றோடினான். இவ்வாறு மதுரையைக் காத்தனர் பாண்டியனும் பழையன் மாறனும் (அகம். 346).

பழையனின் பகைவன் அறுகை என்பவன். இவன் சேரன் செங்குட்டுவனின் நண்பன். அவனைப் பிடித்துச் சிறையில் மறைத்து வைத்தான். தன் நண்பனை மறைத்து வைத்த செய்தியைக் கேட்டுப் பொறுக்காத செங்குட்டுவன் பழையன்மீது போர்தொடுத்துத் தாக்கினான். இதனை,

> "நுண்கொடி உழிஞை வெல்போர் அறுகை
> சேனன் ஆயினும் கேள்என மொழிந்து
> புலம்பெயர்ந்து ஒளித்த களையாப் பூசற்கு
> அரண்கள் தாவுநீஇ அணங்குநிகழ்ந் தன்ன
> மோகூர் மன்னன் முரசும் கொண்டு
> முரசுசெய முரச்சி களிறுபல பூட்டி
> ஒழுகை உய்த்தோய்"[27]

என்னும் பாடல் வாயிலாகப் பரணர் விளக்குகிறார். இப்போரில் பாண்டியனுக்கு உறுதுணையாக வந்த வேந்தர், வேளிரையும் செங்குட்டுவன் வென்றான். இப்போரின்போது இரத்தம் வெள்ளம் போலப் பெருகியோடியது. பழையனின் போர்முரசை அழித்தான். பழையனின் காவல் மரமான வேம்பினை வெட்டிச் சாய்த்தான். கோட்டைகளையும் அழித்தான். இப்போரில் பழையன் இறந்தான். செங்குட்டுவன் பழையனின் மனைவியர் தலைமுடியினைக் கயிறாகத் திரித்து அதில் காவல் மரமான வேம்பினை இழுத்துச் சென்று முரசமாக்கிக் கொண்டான்.

கோசர்கள் மோகூர்மீது படைகொண்டு வந்து போரிட்டனர். மோகூர் பணிந்து வராததால் கோசர்களுக்குத் துணையாக மோரியரும் வடுகரும் வந்தனர். இது பிற்பகுதியில் விளக்கப்படவுள்ளது.

**வாகை**

இந்நகரம் 'சூடாவாகை' எனப் புலவர்களால் புகழ் பெற்றதாகும். வாகை எனும் நகரம் புன்னாட்டிற்கு அப்பால் துளு நாட்டருகே அமைந்திருந்தது. இது ஆஅய் எயினனுக்குரியதாக இருந்தது. இவ்வெயினன் சேரர்கீழ் நார்முடிச் சேரலின் படைத்தளபதியாக விளங்கினான். இவன் யானை, தேர் மற்றும் குதிரைப் படைகளுடன் கடல்போல் திரண்ட வீரர்களையும் கொண்டவனாக விளங்கினான். இதனை,

"படுமணி மருங்கின் பணைத்தாள் யானையும்
கொடிநுடங்கு மிசைய தேரு மாவும்
படையமை மறவரோடு ………… …………..
வண்கை யெயினன் வாகை"[28]

என்னும் இப்பாடல் உணர்த்துகிறது.

துளுநாட்டு நன்னன் புன்னாட்டின்மீது போர்தொடுக்க நார்முடிச் சேரலின் ஆணைப்படி எயினன் புன்னாட்டு மக்களைக் காக்கும் பொருட்டுச் செய்த போரில் நன்னனின் படைத்தளபதி மிஞிலியால் கொல்லப்பட்டான். அதுமுதல் எயினனின் வாகை நன்னனுக்குரித்தாயிற்று. இதனை மிஞிலி ஆட்சி செய்தான். அச்சமயத்தில் பாண்டியனின் படைத்தளபதி அதிகன் வாகைமீது போர் தொடுத்தான். இப்போர் வாகை நகரத்தின் வெளிப்புறத்தே (வாகைப் பறந்தலை) நடைபெற்றது. இப்போரில் அதிகன் தோல்வியடைந்து தன் யானையோடு இறந்தான். (குறுந். 393)

வாகை நகரம் சேரர் கீழிலிருந்து நன்னன்கீழ் சென்றதாலும் நார்முடிச் சேரலின் தளபதியான எயினனை நன்னனின் தளபதி மிஞிலி வென்றதாலும் சினமடைந்தான் நார்முடிச் சேரல். நன்னனையும் மிஞிலியையும் அழிப்பேன் என்று வஞ்சினம் கூறியபடி போருக்குத் தயாரானான். முதலில் கடம்பின் பெருவாயில் எனுமிடத்தே போர்தொடுத்து நன்னனின் காவல் மரமான வாகையை வெட்டினான். அவ்வகையிலும் சினம் தணியாது மீண்டும் வாகைமீது போர்தொடுத்தான். இப்போர் வாகைப் பறநதலையில்

நடைபெற்றது. இப்போரில் நன்னன் கொல்லப்பட்டான். தான் இழந்த பகுதியான வாகை நகரத்தை நார்முடிச் சேரல் திரும்பப் பெற்றான்.

"பெருந்தோள் அரிவை ஒழியக் குடாஅது
இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்
பொலம்பூண் நன்னன் பொருது களத்தொழிய
வலம்படு கொற்றம் தந்த வாய்வாள்
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்
இழந்த நாடுதந் தன்ன"[29]

எனப் புலவர் கல்லாடனார் அகநானூற்றுப் பாடல் வாயிலாக உணர்த்துகிறார்.

சோழன் கரிகால்வளவன் ஒருமுறை வாகைமீது போர் தொடுத்தான். இவ்வளவனை எதிர்த்து ஒன்பது மன்னர்கள் போரிட்டனர். இவர்கள் விரைந்த செலவினையுடைய குதிரைப்படையைப் பெற்றிருந்தனர். எனினும் கரிகாலனோடு முன்நிற்க முடியாது தோற்றோடினர். கரிகால் வளவன் ஒன்பது மன்னர்களையும் அவர்களது குடைகளையும் ஒரு பகலில் வென்றான். இச்செயலைப் புலவர்கள் புகழ்ந்தனர். இதனை அகப்பாடல் (125) காட்டுகிறது. ஆனால் சோழனின் இப்போர் நன்னனுடன் நடந்ததா? சேரருடன் நடந்ததா? என அறிய குறிப்புகள் இல்லை. கரிகாலனுடன் வாகையில் போரிட்ட ஒன்பது மன்னர்கள் யாரெனவும் அறியமுடியவில்லை. ஆனால் வாகை நகரம் போர்களைச் சந்தித்த வண்ணம் இருந்ததைச் சங்கப் பாடல்களால் அறியமுடிகிறது.

**தலைநகரம்**

அரசனின் தலைநகரம் அரசிருக்கை, கோநகர், படைவீடு எனும் பெயர்களால் அழைக்கப்பட்டது. இவற்றுள் அரசிருக்கை என்பது அரசன் நிலையாக வாழும் நகரையே குறிக்கும். கோநகர் அரச குடும்பத்தினர் இருந்து ஆளும் நகரையும் படைவீடு என்பது படை நிறுத்தப்பெற்று அரசன் நாடுகாவல் சுற்றுப் போக்கில் தங்கக்கூடிய நகரையும் குறிப்பதுண்டு. தலைநகரங்கள் அவற்றின் பெருமை பற்றிப் பேரூர் அல்லது மாநகர் என்றும் ஆரவாரம் பற்றிக் கல்லென் மூதூர் என்றும் பழைமையான வெற்றியுடைமை பற்றிப் பழவிறன் மூதூர் என்றும் காவல் மிகுதி பற்றிக் கடிநகர் என்றும் சிறப்பித்துக் கூறப்படுகின்றன.

“கோநகரங்கள் சுற்றிலும் கோட்டைச் சுவர்கள் கொண்டது. புறநகரில் படைகள் தங்கும் இடங்கள் கொண்டது. வானுயர் மாடமாளிகைகள், கூடகோபுரங்கள் கொண்டது. நால்வகைப் படை இருக்கைகள் கொண்டது. பலவகையான கோயில்களும் அம்பலங்களும் அறக்கோட்டங்களும் கொண்டது. அரசனின் அரண்மனையும் தோட்டமும் பூங்காக்களும் இளமரக்காவும் உடையது”[30] என்பார் நா. பார்த்தசாரதி. தலைநகரங்களை வடமொழியில் ‘இராஜதானி’ என வழங்குவர். இத்தன்மைத்தான நகரங்கள் பல சேரிகளாகப் பாகுபட்டிருந்தன. ஒவ்வொரு குலத்தவரும் அல்லது வகுப்பாரும் சேர்ந்து வாழும் தெரு அல்லது தெருத்தொகுதி சேரி எனப்பட்டது. இதனைத் தொல்காப்பியர்,

“ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்”[31]

எனக் குறிப்பிடுகிறார்.

கடல்கோள்களாலும் பகைவராலும் தலைநகரங்களுக்கு அழிவு நேர்ந்தபோதும் பழந்தலைநகர் வசதியற்றவிடத்தும் பிறிதொரு நகரைத் தலைநகராக்கிக் கொள்வதும் புதிய தலைநகரை அமைத்துக் கொள்வதும் பண்டைய தமிழரசர் வழக்கமாக இருந்தது. இவ்வகையில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு தலைநகரங்கள் அமைவதுண்டு. பாண்டியரின் தலைநகரம் தொன்மதுரை, கபாடபுரமாக இருந்து கடல்கோளால் அழிவுற்றுப் பின் வடமதுரை தலைநகரமாக அமைந்தது என்பர். சோழர்களின் தலைநகரம் உறந்தை புகழ்பெற்று விளங்கியது. பின் எக்காரணத்தாலோ புகார் தலைநகராக்கப்பட்டது. அவ்வாறு விளங்கிய சங்க காலத் தலைநகரங்களை இப்பகுதி ஆராய முற்படுகிறது.

**அழுந்தூர்**

சங்கப் பாடல்களில் அழுந்தை, அழுந்தூர் எனச் சுட்டப்பட்டு இன்று திருவழுந்தூர், தேரழுந்தூர் எனும் பெயர்களில் அழைக்கப்படுகிறது. சங்க காலத்தே சோழர் தலைநரகமாக விளங்கிய இவ்வூர் இன்று நாகப்பட்டினம் மாவட்டம் மயிலாடுதுறைக்குப் பதினோரு கல் தொலைவில் உள்ளது.

அழுந்தூர் சோழர் தலைநகரமாக விளங்கியது. இதனை வேளிர் ஆட்சி செய்தனர். இவ்வழுந்தூர் வேளிர் மகளே கரிகாலனின் தாயாவாள். இது வேளிர்க்கும் சோழர்க்குமுள்ள உறவுமுறையை விளக்குகிறது.

வெண்ணிப்பறந்தலை என்னுமிடத்தே கரிகால் வளவனுக்கும் பெருஞ்சேரலாதன், பாண்டியன் ஒருவன் வேளிர் பதினொருவர் ஆகியோருக்கும் இடையில் போர் நடந்தது. இப்போரில் இருபெரு வேந்தரையும் பதினோரு வேளிரையும் கரிகாலன் வென்றான். இவ்வெற்றியைக் கேட்டு அழுந்தூரே ஆர்த்தது எனக் கூறுகிறார் பரணர் (அகம். 246).

அழுந்தூரைத் திதியன் ஆண்டு கொண்டிருந்த காலத்தில் இவ்வூரில் அன்னி மிஞிலி என்னும் ஒரு பெண் வாழ்ந்தாள். அவள் தந்தை உண்மையையே பேசும் இயல்புடையவர். இவர் இவ்வூரில் வாழ்ந்த முதுகோசர் ஒருவரின் விளைநிலத்தில் தன் பசுக்களைத் தவறி விட்டுவிட்டார். இச்செயலுக்காக அம்முதுகோசர் ஒன்றுகூடி மிஞிலியின் தந்தையின் கண்களை எடுத்துவிட்டனர். இதனையறிந்த மிஞிலி கலத்தில் உண்ணாமலும் தூய ஆடைகளை உடுத்தாமலும் பழிக்குப்பழி வாங்கும் சபதம் கொண்டாள். அன்னி மிஞிலி பலபேரிடமும் அம்முதுகோசரைப் பழிவாங்கத் தூண்டினாள். இறுதியில் குறும்பியன் என்னும் மன்னன் அழுந்தூரிலுள்ள திதியனிடம் கூறுமாறு வழிகாட்ட, திதியன் மூலம் அம்முதுகோசரை அழித்தாள். இதனை,

“தந்தை
கண்கவின் அழித்ததன் தப்பல் தெறுவர
ஒன்றுமொழிக் கோசர்க் கொன்றுமுரண் போகிய
கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலி”[32]

என்னும் பாடல் வாயிலாக அறிய முடிகின்றது.

“கல்வெட்டிலும் இவ்வூர் செயங்கொண்ட சோழ நாட்டுத் திரைமூர் நாட்டுத் திருவழுந்தூர்’ எனக் குறிக்கப்பட்டுள்ளது. எனவே முதலில் அழுந்தூர் எனவும் அழுந்தை எனவும் குறிக்கப்பட்ட இவ்வூர் பின்னர் இங்குள்ள கோயில் சிறப்புப் பெற்ற பின்னர் திருஅழுந்தூர் என்றாகிப் புராணக் கதையின் செல்வாக்குக் காரணமாக தேர் அழுந்தூர் எனப் பெயர் பெற்றிருக்க வாய்ப்புண்டு”[33].

**உறையூர்**

சங்க காலத்தில் உறையூர், உறந்தை, கோழி என்னும் பெயர்களால் வழங்கப்பட்டது. இன்றும் உறையூர் என்றே அழைக்கப்படுகிறது, சங்க

காலத்தில் சோழநாட்டின் தலைநகரமாக விளங்கிய உறையூர் இன்று திருச்சியின் ஒரு பேட்டையாக மாறிவிட்டது. ஒரு கோழி யானையை எதிர்த்து நின்று போர்புரிந்த இடமாதலின் 'கோழியூர்' எனப் பெயர் பெற்றதாகக் கூறுவர். இதனை, "ஓடாப் பூட்கை உறந்தை" (சிறுபாண். 83) எனும் பாடலுக்கு உரைகூறும் பொ. வே. சோமசுந்தரனார் குறிப்பிடுகிறார். உறையூரை ஆட்சி செய்த வேந்தனும் ஊர்ப்பெயரால் 'கோழியோனே' என அழைக்கப்படுவதைப் புறம்.212 காட்டுகிறது.

**உறையூர் நகரமைப்பு**

உறையூர் காவிரியின் தென்கரையில் அமைந்திருந்தது. எனவே காவிரி பாயும் தோட்டங்களையுடைய மருதநிலப் பகுதிகளைத் தன்னகத்தே கொண்டு இருந்தது. (அகம். 137, 385). இதனால் 'ஊரெனப் படுவது உறையூர்' என்று புகழப்படுகிறது. உறையூருக்குக் கிழக்கே பெருங்குன்றம் அமைந்திருந்ததை,

"கறங்கிசை விழவின் உறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றம்"[34]

குறுங்கடி மருதனார் அகநானூற்றில் பாடுகிறார். இக்குன்று இன்றைய திருச்சி மலைக்கோட்டையாகும்.

கரையை உடைத்திடுமளவுக்கு நீர்ப்பெருக்கை உடைய காவிரி பாயும் மருத நிலங்களைக் கொண்டதாக உறையூர் விளங்கியது. இந்நகரம் வெண்ணெல் விளையும் வயல்களை வேலியாகச் சூழ்ந்தும் நெல் குவியல்களை உடையதாகவும் திகழ்ந்தது. இந்நகரம் மதிலாகிய வேலியைக் கொண்டிருந்தது. நகரத்தைச் சூழ்ந்து காவல் புறங்காடு இருந்தது. இது கற்கள் நிறைந்து பல தடைகளைக் கொண்டிருந்தது. இதனை விரைந்த செலவினையுடைய குதிரைகளைக் கொண்ட தித்தன் அமைத்தான். இதனை,

"ஆதி போகிய பாய்பரி நன்மான்
நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கல்முதிர் புறங்காட் டன்ன
பல்முட் டின்று"[35]

என்னும் பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

**அறங்கூறவையம்**

தலைநகரமாக விளங்கிய உறையூரில் அறங்கூறு அவையம் அமைந்திருந்தது. இம்மன்றம் நீதி நிலைக்கச் செய்யும் செயலால் சிறப்புப் பெற்றது. இதனைப் புலவர் பலரும் புகழ்ந்தேத்தினர். இதனை அகம் 9, நற். 400, புறம், 39, 58 ஆகிய பாடல்கள் காட்டுகின்றன.

**உறையூரின் சிறப்புகள்**

பகைவர்களை வென்று அடிக்கின்ற வீரமுரசையும் போர் வெற்றியையும் உடையதாகச் சோழர்களின் உறையூர் விளங்கியது. இந்நகரம் ஓங்கியுயர்ந்த நிலையான மாடங்களையும் கெடாத புகழையும் பெற்று விளங்கியதைப் "பிறங்குநிலை மாடத் துறந்தை"(புறம். 69) என்னும் பாடலடி புலப்படுத்துகின்றது.

"உறையூரைச் சோழருக்குமுன் ஆட்சி செய்தவன் சேந்தன் (ஆர்க்காட்டின் தலைவன்). இவனிடமிருந்து தித்தன் உறையூரைக் கைப்பற்றினான்"[36] என்பர். உறையூரில் மதில், புறங்காடு அமைத்துக் காவலுடையதாக ஆக்கினான் தித்தன். இதனால் பல தலைமுறைகள் கழித்தும் 'தித்தன் உறந்தை' என்றே உறையூர் அழைக்கப்பட்டது. பின்னவர் வந்த கரிகால் வளவன் உறையூரை மேலும் விரிவுபடுத்தினான். பெரிய நிலைகளையுடைய மாடங்கள் அமைத்தான். திருக்கோயில் எடுத்து குடிமக்களை நிலைபெறச்செய்தான். உயர்ந்த மதில்களில் பெரிய வாயில்களையும் சிறிய வாயில்களையும் அமைத்தான். ஞாயில் என்னும் மதிலுறுப்புகள் தோறும் அம்புக்கட்டுகளை வைத்தான். இதனால் மதிலானது திருமகள் நிலைபெற்று விளங்கியது என உருத்திரங்கண்ணனார் பாடியுள்ளார். இதனை,

"பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிரீஇ
வாயிலோடு புழையமைத்து
ஞாயிரோடும் புதைநிரீஇ
பொருவேமெனப் பெயர்கொடுத்து
ஒருவேமெனப் புறக்கொடாது
திருநிலைஇய பெருமன்னெயில்
மின்னொளி பொறிப்பத்"[37]

என்னும் பட்டினப்பாலை அடிகள் காட்டுகின்றன.

உறையூர் சங்கப் புலவர்களால் மட்டுமல்லாது வெளிநாட்டு அறிஞர்களாலும் புகழப்பெற்ற தன்மையுடன் விளங்கியது. கிரேக்க அறிஞர்களான பிளைனி, உறையூரை 'ஓதன்பரோ' (Odenberoes) எனவும் தாலமி 'ஓர்தௌரா' (Orthoura) எனவும் இதன் இருப்பிடம் $10^0$. 50' வடக்கு X $78^0$. 46' கிழக்கு என்றும் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு சிறப்புடன் விளங்கிய இந்நகரம் பிற்காலத்தில் தன் சிறப்பை இழக்கத் தொடங்கியது. காவிரிப்பூம்பட்டினத்தைச் சோழநாட்டின் தலைநகரமாக மாற்றியபின் உறையூர் புகழ் குன்றத் தொடங்கியது. தற்போது சிறிய ஊராக, திருச்சியின் ஒரு பேட்டையாகத் தோற்றமளிக்கிறது.

## காஞ்சி

காஞ்சி தொண்டை நாட்டின் தலைநகரமாக விளங்கியது. சங்க காலத்தே கச்சி, காஞ்சி என அழைக்கப்பட்டுப் பிற்காலத்தில் காஞ்சிபுரம் என வழங்கப்பட்டது. தற்போது தமிழகத்தின் மாவட்டங்களில் ஒன்றாகத் திகழ்கிறது. இன்றைய காஞ்சிபுர நகரின் கிழக்கிலுள்ள நிலப்பரப்பே சங்ககாலக் காஞ்சி என்ற கருத்தும் நிலவுகிறது, "கச்சி என்ற பெயர் (சீந்தில் என்பது பொருள்) தாவரப் பெயரே. காஞ்சி என்ற பிற்காலப் பெயரும் தாவரப் பெயர் அடிப்படையில் அமைந்ததே. எனவே கச்சி, காஞ்சி என்ற இரண்டு பெயருமே தாவரப்பெயர் அடிப்படையில் அமைந்தன எனக் கூறுவதற்கு வாய்ப்பு உள்ளது என்றும் காஞ்சி என்ற ஊர் மரப்பெயரால் பெயர் பெற்றது"[38] என்றும் ஆர். ஆளவந்தார் கூறுகிறார்.

காஞ்சி மாநகரத்தின் பழைய வடிவமானது இருபுறமும் அமைந்த ஏரிகள் இருபுறத் தோகைகளாகவும் கோட்டை மதில் வயிறாகவும் பீலி கடிகையாகவும் நீர் வண்ணன் அத்தியூரை வாயாகவும் உடைய காஞ்சி அழகிய மயில் போன்ற தோற்றமுடையதாக இருந்தது. இதனை,

"ஏரி யிரண்டும் சிறகா எயில்வயிறாக்
காருடைய பீலி கடிகாவாச் சீருடை
அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு"

என்னும் பழந்தமிழ்ப் பாடல் காட்டுகிறது.

தொண்டைமான் இளந்திரையன் ஆட்சி செய்த காஞ்சி நகரம் பல வளங்களையும் பெற்றிருந்தது. இங்கு யானைக்குக் கொடுப்பதற்கு நெய் ஊற்றி மிதித்துப் பெரிய பெரிய உருண்டையான கவளங்களாக்கி வைத்திருந்தனர் பாகர். இதனைச் சூலுடைய மந்திகள் யானைப்பாகர் சோர்வான நேரத்தில் வந்து கவர்ந்து சென்று உண்ணும். இதுபோன்ற சோலைகள் பலவற்றைக் கொண்டதாகக் காஞ்சி விளங்கியது. இங்கு அடிக்கடி தேர்கள் செல்வதால் சாலைகள் குழிந்த பாதையுடன் காணப்பட்டன (பெரும்பாண். 393 – 400). இங்குப் பொருள்களைக் கொடுப்போரும் கொள்வோரும் மிகுதியாக இருந்ததால் நடந்து செல்லவும் தடை ஏற்படுமளவுக்குச் சாலைகளில் நெரிசல் இருக்கும்.

காஞ்சி மாநகரத்தின் நுழைவாயில் பிறர் அடைய முடியாத உயர்ந்த மதிலுடனும் காவற்காடு சூழ்ந்தும் இருந்தது. செங்கல்லால் ஆன உயர்ந்த புறப்படைவீடும் அதனைச் சுற்றி மதிலும் இருந்தன. இது தாமரையின் நடுவில் உள்ள பொகுட்டைப் போலக் காட்சியளித்தது. இப்பெரிய உலகத்தில் பலசமய மக்களும் வந்து தொழுகின்ற நிலையில் இந்நகரம் அமைந்திருந்தது. இந்நகரம் பழமையான ஊர்களைத் தன்னகத்தேகொண்டு வெற்றியுடைய மூதூராகவும் விளங்கியதை,

> "பல்இதழ்த்
> தாமரைப் பொகுட்டின் கான்வரத் தோன்றி
> சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்
> இழுமென் புள்ளின் ஈண்டு கிளைத்தொழுதிக்
> கொழுமன் சினைய கோளி யுள்ளும்
> பழம்மீக் கூறும் பலாஅப் போல
> புலவுக்கடல் உடுத்த வானம் சூடிய
> மலர்தலை உலகத்துள்ளும் பலர் தொழ
> விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர்"[39]

என்னும் அடிகள் வாயிலாக உருத்திரங்கண்ணனார் விவரிக்கிறார்.

**கிடங்கில்**

கிடங்கில் நல்லியக்கோடன் ஆட்சி செய்த ஒய்மாநாட்டின் தலைநகரமாக விளங்கியது. இன்றும் கிடங்கில், கிடங்கால் என்னும்

பெயர்களில் அழைக்கப்படுகிறது. இன்று இது திண்டிவனத்திற்கு அருகில் உள்ளது. "கிடங்கு என்ற சொல் அகழி என்றும் பண்டகசாலை என்றும் பொருள்படுவதால் இந்த இரண்டில் ஒன்றின் அமைப்பால் பெயர் பெற்ற ஊராகக் கிடங்கில் அமைந்திருக்கலாம்"[40] என்று ஆர். ஆளவந்தார் குறிப்பிடுகிறார்.

கிடங்கில் இனிமை பொருந்தியதாக விளங்கியது என்றும் கொத்துக் கொத்தாகப் பூக்கும் தோட்டங்களை உடையதாக விளங்கியது என்றும் கூறுவதை "கிளைமலர்ப் படப்பைக் கிடங்கில்" (சிறுபாண். 160) என்னும் பாடலடியும் நற்றிணை (65) ஆம் பாடலும் காட்டுகின்றன. இந்நகரம் மிகவும் பழமையானது. இந்நகரத் தெருக்களில் உள்ள புழுதியை யானைகளின் மதநீர் அடக்கியது. இது திருவிழாக்களையுடைய நகரமாகவும் திகழ்ந்ததை,

"பிணன் உகைத்துச் சிவந்த பேர்உகிர்க் பணைத்தாள்
அண்ணல் யானை அருவிதுகள் அவிப்ப
நீறுஅடங்கு தெருவின் அவன் சாறுஅயர் மூதூர்"[41]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

"இன்றுள்ள திண்டிவனம் இரயில் வண்டி நிலையத்தை அடுத்துப் பள்ளமான இடம் ஒன்று உள்ளது. அவ்விடத்தில் ஒரு சிவன் கோயிலும் சில தெருக்களும் உள்ளன. அவ்விடத்தைச் சுற்றிலும் இடிபட்ட தடித்த மதிற்சுவர் சில இடங்களில் காணப்படுகிறது. அதைச் சுற்றிலும் அகழி இருந்தமைக்குரிய அடையாளம் காணப்படுகிறது. இவ்வூர் சிவன் கோயிலில் எட்டு கல்வெட்டுகள் உள்ளன. அவை அக்கோயில் 'ஒய்மாநாட்டுக் கிடக்கை நாட்டுக் கிடங்கில்' எனும் ஊரில் இருப்பதாகக் குறித்துள்ளன. அதுபோல இன்று கிடங்கில் என்று சொல்லப்படும் சிறிய இடத்திற்கு வடக்கில் அரைக்கல் தொலைவில் மற்றொரு சிவன் கோயில் உள்ளது. இது முன்சொன்ன கோயில் அளவைவிடப் பெரியது. பெரிய கோபுரம் உள்ளது. இதில் 13 கல்வெட்டுகள் உள்ளன. அவை அக்கோயிலை 'ஒய்மாநாட்டுக் கிடக்கை நாட்டுக் கிடங்கிலான இராசேந்திர சோழ நல்லூர்த் திண்டீசுவரம்' என்றே குறித்துள்ளன'[42]. எனவே பண்டைக் காலக் கிடங்கில் நகரம் இவ்விரு கோயில்களையும் பெற்றிருந்தது எனலாம். மேலும் இன்றுள்ள திண்டிவனம்

எனும் நகரத்தின் பெரும்பகுதி பண்டைக்காலக் கிடங்கில் நகரம் என இராசமாணிக்கனார் கூறுகிறார்.

**கோவலூர்**

திருமுடிக்காரி ஆண்ட மலாடு நாட்டின் தலைநகரமாகக் கோவலூர் விளங்கியது. இந்நகரம் கோவல், கோவலூர் என அழைக்கப்பட்டுத் தற்போது திருக்கோயிலூர், திருக்கோவலூர் என அழைக்கப்பெற்றது. இவ்வூர் விழுப்புரம் மாவட்டத்தில் அமைந்துள்ளது.

தென்பெண்ணை ஆற்றின் கரையில் அமைந்த நகரம் என அகப்பாடலொன்று தெரிவிக்கின்றது.

"துஞ்சா முழவின் கோவற் கோமான்
நெடுந்தேர்க் காரி கொடுங்கால் முன்துறை
பெண்ணை அம்பேரியாற்று நுண்அறல் கடுக்கும்"[43]

கரிய நுண்மணலைப் பெண்ணையாற்றின் கரையானது கொண்டிருந்தது என இப்பாடல் தெரிவிக்கின்றது. இப்பெண்ணை ஆற்றின் நடு ஆற்றுத்துருத்தியின் ஓரிடத்தில் கபிலர் வடக்கிருந்து உயிர் துறந்தார். இன்றும் கோவலூர்க்கு அருகிலுள்ள ஆற்றிடத்தில் கபிலர்க்கு என ஓரிடமுண்டு. இது கபிலர் வடக்கிருந்த செய்தியைக் கூறுகிறது எனப் புறநானூற்றின் உரையாசிரியர் ஔவை துரைசாமிப்பிள்ளை கூறுகிறார்.

மலையமான் திருமுடிக்காரிக்கு உரியதான கோவலூர்மீது அதியமான் நெடுமான் அஞ்சி படையெடுத்துச் சென்றான். இப்போரில் கோவலூரை வென்று முற்றிலும் அழித்தான். இவ்வெற்றியைப் பரணர் புகழ்ந்து பாடியுள்ளார் என ஔவை பாடியதை,

"பரணர் பாடினான் மற்கொன் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறி"[44]

என்னும் இப்புறநானூற்றுப் பாடல்வழி அறியமுடிகிறது.

**செங்கண்மா**

இன்றைய திருவண்ணாமலைக்கு அருகில் அமைந்துள்ள செங்கம் எனும் ஊரே சங்ககாலச் செங்கண்மா ஆகும். இது பல்குன்றக் கோட்டத்தை ஆட்சி செய்த நன்னன் சேய் நன்னனின் தலைநகரமாகத் திகழ்ந்தது. இந்நகரம் சேயாற்றின் கரையில் அமைந்திருந்தது. இந்த ஆறு தற்போது

செய்யாறு என வழங்குகிறது. இதனை இராசமாணிக்கனார் "சேயாறு என்பது இன்று செய்யாறு என வழங்கப்படுகிறது. இது வடஆர்க்காடு மாவட்டத்தில் சவ்வாது மலைத்தொடரில் வடக்கில் தோன்றித் தெற்கு நோக்கி மலைகளிலேயே பாய்ந்து வருகிறது. சவ்வாது மலைகளிலிருந்து தரை வழியே ஏறத்தாழ ஆறு அல்லது ஏழு கல் தொலைவு வந்தவுடன் அதன் தென்கரையில் செங்கம் எனும் ஊர் அமைந்துள்ளது. இது நன்னனின் தலைநகரம் ஆகும்"[45] எனக் கூறுகிறார்.

செல்வம் நிறைந்து மிகவும் ஓங்கி உயர்ந்த மதில்களை உடையதாக நன்னனின் தலைநகரான செங்கண்மா விளங்கியது. ஊரினின்றும் வேற்றிடத்திற்குப் பெயர்தல் அறியாத பழங்குடி மக்கள் நிறைந்ததாக இந்நகரம் விளங்கியது. அகன்ற பரப்புடையதாக இருப்பினும் மக்கள் மிகுதியாக இருத்தலால் இடம் போதாததாகத் தோன்றும் மிகப் பெரிய அங்காடித் தெரு இருந்தது. இங்குள்ள மக்கள் செய்யும் ஆரவாரம் கடலலைகள் போலவும் மேகம் போன்றும் ஒலிக்கும். இந்நகரில் பகைவர் செல்ல அஞ்சும் பல குறுந்தெருக்கள் உள்ளன. அங்கு மலை போன்றும் முகில் போன்றும் மாடங்கள் உயர்ந்து நிற்கும். இவ்வூரில் வாழ்வோர் வெறுப்பில்லாமல் விருப்பத்துடன் வாழ்வர். குளிர்ந்த சோலைகளில் வண்டுகள் ஒலித்துக் கொண்டிருக்கும். இதனை,

"நிதியஞ் துஞ்சு நிவந்தோங்கு வரைப்பிற்
பதியெழ லறியாப் பழங்குடி கெழீஇ
வியலிடம் பெறாஅ விழுப்பெரு நியமத்து
யாறெனக் கிடந்த தெருவிற் சாறென
இகழுநர் வெரூஉம் கவலை மறுகிற்
கடலெனக் காரென ஒலிக்குஞ் சும்மையொடு
மலையென மழையென மாடமோங்கித்
துனிதீர் காதலின் இனிதமர்ந் துறையும்
பனிவார் காவிற் பல்வண் டிமிரும்
நனிசெய்த தன்றவன் பழவிறன் மூதூர்"[46]

எனப் பெருங்கௌசிகனார் ஆறுபோன்ற அகன்ற தெருக்களைக்கொண்ட நகரமாகச் செங்கண்மா விளங்கியதை விவரிக்கிறார்.

## தகடூர்

இன்றைய தருமபுரிப் பகுதியே சங்ககாலத் தகடூர் ஆகும். இதனைத் தலைநகரமாகக் கொண்டு அதியமான் வழியினர் ஆட்சி செய்தனர். தருமபுரிக்கு அருகில் உள்ள அதியமான்கோட்டையில் இருந்தபடி அதியமான் தகடூரை ஆட்சி செய்தான்.

இந்நகரம் இயற்கை வளம் பொருந்தியதாக விளங்கியது. இங்கு அமைந்திருந்த நீர்த்துறையானது மலையிடத்து பூத்து மலர்களைக் கொணர்ந்து ஒதுக்கும் வளம் பொருந்தியதாகத் திகழ்ந்தது. அதியமானின் தகடூர், அன்பார்களுக்கு அன்றி மாறுபட்ட வேந்தர்களுக்குக் கனவிலும் சென்று சேர இயலாத காவலுடையதாகத் திகழ்ந்தது. இந்நகரம் அகன்றும் மலைகளின் கூட்டத்தை ஒத்த மாடங்களையும் கொண்டிருந்ததை,

"தார்வலர் குறுகி னல்லது காவலர்
கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
மலைக்கனத் தன்ன மாடஞ் சிலம்ப"[47]

என ஔவையார் சுட்டுகிறார். மேலும் தகடூர் வீரர்கள் விரும்பிக் காக்கும் காவற்காட்டைக் கொண்டிருந்தது. இந்நகரத்துப் பெண்கள் மருத நிலத்தற்குச் சென்று தாமரை, நெய்தல் மலர்களை எடுத்துக்கொண்டு முல்லை நிலத்துப் புனங்களுக்குச் சென்று பாடலைப் பாடிக் கிளிகளை விரட்டுவர்.

அதியமானின் தலைநகரான தகடூர்மீது இளஞ்சேரல் இரும்பொறை போர் தொடுத்தான். இரும்பொறையின் படையானது தகடூருக்கு வரும்போது ஆடுகள்போலக் குதிரைப் படையும் பசுக்கள் போல யானைப்படையும் பரவியிருந்தது (பதிற். 78). இவ்வாறு பெரும்படை கொண்டு வந்த இரும்பொறை அதியமானோடு போரிட்டு வென்று, அவன் மகளிர் வருந்தும்படி அதியனைக் கொன்றான். அதியனுக்கு உதவிய வேந்தர்களின் முரசு, கொடி, குடைகளையும் கைப்பற்றி, களவேள்வி செய்தான். தகடூரையும் நிர்மூலமாக்கினான். இதனை,

"பல்வேல் தானை அதிக மானோடு
இருபெரு வேந்தரையும் உடன்நிலை வென்று
முரசும் குடையும் கலனும் கொண்டு
உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டுத்

துகள்தீர் மகளிர் இரங்கத் துப்புஅறுத்துத்
தகடூர் எறிந்து நொச்சிதந்து எய்திய
அருந்திறல் ஒள்இசைப் பெருஞ்சேரல் இரும்பொறை"[48]

என்றும் பதிற்றுப்பத்துப் பதிகம் புலப்படுத்துகிறது.

தர்மபுரிப் பகுதியில் ரோமானியக் காசுகள், முத்திரைக் காசுகள் ஆகியவை கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை பழங்காலத்தே சிறந்த நகரமாகத் தகடூர் விளங்கியதையும் இங்கு வணிகம், தொழில் சிறப்புடன் நடைபெற்றன என்பதையும் காட்டுகின்றன.

**துவரை**

துவரை, துவாரகை எனவும் அழைக்கப்பட்டது. இந்நகரம் தெற்கு மைசூர்ப் பகுதியில் அமைந்துள்ளது. தற்போது 'ஹளெபீடு' எனப் பெயர் பெற்றுள்ளது. இந்நகரைத் தலைநகரமாகக் கொண்டு இருங்கோவேள் ஆட்சி செய்தான். இப்பொழுதும் இங்கு 'துவார சமுத்திரம்' என்னும் பெரிய ஏரி அமைந்துள்ளது.

செம்பால் புனைந்து அழகாகச் செய்யப்பட்ட மிகப் பெரிய மதிலையுடையதாகத் துவாரபதி விளங்கியது. இதனை ஆட்சி செய்த இருங்கோவேள் வேளிருள் 49ஆவது தலைமுறையினன். வேளிருள் முதலில் தோன்றியவன் 'புலிகடிமால்' என்பர். இருங்கோவேள் அணுகுவதற்கரிதான வலிமையையும் பொன்மயமான மலையான 'பொன்படுமால்' எனும் மலையையும் துவரை நகருக்குரியவனாகவும் பாடப்படுவதை,

"செம்புபுனைந் தியற்றிய சேணெடும் புரிசை
உவரா வீகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே விறப்போ ரண்ணல்
தரணி யானைச் சேட்டிருங் கோவே
…….. …….. ……… ……..
இருங்கட லுடுத்தவிவ் வையத் தருந்திறற்
பொன்படு மால்வரைக் கிழவ வென்வேல்
உடலுந ருட்குந் தானைக்
கெடலருங் குரைய நாடுகிழ வோயே"[49]

என்னும் புறப்பாடலால் அறியலாம்.

இந்நகரத்தே அமைந்த மதிலை 'இஞ்சியரண்' எனக் கூறுவர். இஞ்சுதல் - இறுகுதல், செம்பை உருக்கிச் சாந்தாக வார்த்துக் கருங்கல்லால் கட்டிய மதில் என்பதால் இஞ்சி என்பர். செம்பு புரிசையிருந்த நகர் துவரை எனப் பெயர் பெற்றது. துவர் - சிவப்பு. துவரை என்னும் பயிற்றின் பெயரும் இக்காரணம் பற்றியதே என்பர். எனவே செம்பு, சிவப்பு எனும் குணங்களின் அடிப்படையில் துவரை என்னும் பெயர் அமைந்திருக்கலாம்.

பாழி

நன்னனின் துளு நாட்டிற்குத் தலைநகரமாகப் பாழி விளங்கியது. "இவ்வூர் பாழி என்னும் மலைக்கு அருகிலேயே இருந்தது. ஆகவே அம்மலையின் பெயரே இவ்வூருக்கும் பெயராயிற்று"[50] என மயிலை சீனி. வேங்கடசாமி கூறுகிறார். "பாழி என்பது வைநாட்டுக்கும் வடகிழக்கு மலபாருக்கும் வடக்கே தற்போது குடகு என்றழைக்கும் பகுதி முழுவதும் உள்ளடக்கிய சுரங்கத் தொழில் பகுதியில் அரண் அமைப்புடைய ஒரு நகரம்"[51] என வி. கனகசபை குறிப்பிடுகிறார். மேலும் "வடகன்னடம் ஜில்லாவிலுள்ள 'பாட்கல்' என்னுமிடத்துள்ள கல்வெட்டு அதனை பாழிக்கல் எனக் குறிக்கிறது"[52] என்று ஔவை சு. துரைசாமிப்பிள்ளை கூறுகிறார்.

இப்பாழி மலைக்குப் பக்க மலையாக எழில்மலை அமைந்திருந்தது. இம்மலை மேலிருந்து பார்த்தால் அதனைச் சூழ்ந்திருந்த நாடுகள் தெரிந்தன. (அகம். 372) இந்நகரம் மதில் சூழ்ந்து மிகுந்த காவலுடையதாகத் திகழ்ந்தது. எனவே பழமையான வேளிர்கள் இந்நகரத்தே அணிகலன்கள், பொற்காசுகள் போன்ற செல்வங்களை மறைத்து வைத்தனர். இதனை,

"நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த
பொன்"[53]

என்ற அகப்பாடல் வாயிலாகப் பரணர் தெரிவிக்கிறார்.

நன்னன் புன்னாட்டின்மீது போருக்கெழுந்தான். நார்முடிச் சேரலின் ஆணைக்கேற்பப் புன்னாட்டு மக்களைக் காக்கும் பொருட்டு ஆஅய் எயினன் நன்னனை எதிர்த்து நின்றான். இப்போரானது பாழி நகரைச் சேர்ந்த

பறந்தலையில் நடைபெற்றது. எனவே பாழிப்பறந்தலை எனவும் அழைக்கப்பட்டது. இப்போரில் நன்னன் படைத்தளபதியான மிஞிலி எயினனைக் கொன்றான். நண்பகல் நேரத்தில் இறந்த எயினனுக்கு வெயில் படாதவாறு பறவைகள் பலவும் கூடித் தம் சிறகுகளால் பந்தலிட்டு நிழல் செய்தன.

"வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்
அரியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
இழையணி யானை யியல்தேர் மிஞிலியோடு
நண்பகல் உற்ற செருவில் புண்கூர்ந்து
ஒள்வாள் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்கு
அங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று
ஒண்கதிர் தெறாமைச் சிறகரில் கோலி
நிழல் செய்து"[54]

என்னும் அகப்பாடலில் பரணர் எயினன் இறப்பையும் பறவைகள் சிறகால் நிழல் செய்ததையும் வியந்து பாடியுள்ளார். இப்பாடல் மட்டுமல்லாது அகம் 142, 396 போன்ற பாடல்களிலும் இந்நிகழ்ச்சியைப் பரணர் பாடியுள்ளதைக் காணமுடிகிறது. பாழிப் பறந்தலையில் நடைபெற்ற இப்போரும் போரின் முடிவுகளும் மேலும் போரைத் தூண்டக்கூடியதாக அமைந்தது. கடம்பின் பெருவாயில், வாகை போன்ற இடங்களில் நார்முடிச் சேரல் போர்தொடுக்க இப்போரே மூல காரணமாக அமைந்தது.

ஒருமுறை சோழன் இளம்பெருஞ்சென்னி பாழி நகரின்மீது போர் தொடுத்தான். இச்சோழ வேந்தன் தன் குடிமக்களுக்கு ஆற்றும் கடனாக இப்போரை மேற்கொண்டான். செம்பினையொத்த மதிலையும் அரணையும் அழித்து, பாழி நகரையும் அழித்ததை அகம் (375) கூறுகிறது. இதன் காரணமாக இச்சென்னி 'செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி' என அழைக்கப்பட்டான். பாழி நகரம் அழிந்ததை இதன்மூலம் உணரமுடிகிறது.

**மதுரை**

மதுரை பாண்டியப் பேரரசின் தலைநகரமாக விளங்கியது. மதுரை, கூடல், நான்மாடக்கூடல், ஆலவாய், திருமருதமுன்துறை போன்ற பெயர்களால் அழைக்கப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

தமிழ்ச் சங்கம் காரணமாக மன்னர், புலவர், மக்கள் ஆகியோர் கூடுமிடம் கூடல் என்றும், மருதமரம் மிகுந்த ஊர் மருதை என்றாகி, மதுரை எனவாயிற்று என்றும் கூறுவர். இந்நகரம் கிரேக்க அறிஞர்களாலும் குறிக்கப்படுகிறது. மதுரையை மெகஸ்தனிஸ் 'மதுரா' என்றும் தாலமி 'மோதூரா' என்றும் இதன் இருப்பிடம் $9^0$. 58' வடக்கு X $78^0$. 10' கிழக்கு என்றும் கூறுகின்றனர்.

சங்ககால மதுரை வைகையின் தென்கரையில் திருப்பரங்குன்றத்திற்குக் கிழக்கில் இருந்தது என அகம் (149) கூறுகிறது. ஆனால் தற்போதுள்ள மதுரை சங்ககால மதுரைக்கு வடக்கில் இருக்கிறது. சங்க காலத்தின் ஆரம்பக் காலகட்டங்களில் கூடலை அகுதை எனும் வள்ளல் ஆட்சி செய்தான். இந்நகரம் அகுதையின் கூடல் என்றே அழைக்கப்பட்டதை,

> "மணநாறு மார்பின் மறப்போ ரகுதை
> குண்டுநீர் வரைப்பிற் கூடல்"[55]

எனும் பாடல் வாயிலாகக் கபிலர் குறிப்பிடுகிறார். மேலும்,

> "பேர்இசைக் கொற்கைப் பொருநன் வென்வேல்
> கடும்பகட்டு யானை நெடுந்தேர்ச் செழியன்
> மலிபுரை நெடுநகர்க் கூடல் நீடிய
> மலிதரு கம்பலை"[56]

என்னும் அகப்பாடலில் பேராலவாயர் என்ற புலவர் செழியனைக் 'கொற்கைப் பொருநன்' என்றும் இவன் கூடல்வரை தனது ஆட்சியை நீட்டித்தான் என்றும் அப்போது ஆரவாரம் எழுந்தது என்றும் குறிப்பிடுகிறார்.

பாண்டியர் நகரமான தென்மதுரை, கபாடபுரம் ஆகியவை கடல்கோள்களால் அழிந்தன என்ற கருத்தையும் கூடலை ஆண்டவன் அகுதை, பாண்டியர் முதலில் கொற்கைப் பகுதியை ஆட்சி செய்தனர் என்னும் கருத்துக்களையும் நோக்க ஆழிப்பேரலைகளால் தலைநகரை இழந்த பாண்டியர் கொற்கையில் ஆட்சி செய்துள்ளனர். பின்னர் கூடல்வரை படையெடுத்து வந்து அகுதையை வென்று கூடலை மதுரை எனப் பெயரிட்டுத் தலைநகரமாக நிர்மானித்தனர் எனக் கருத இடமேற்படுகிறது. இதன் பிறகு அமைந்த மதுரையின் அமைப்பு, அழகு, வளங்கள், பாதுகாப்பு

அரண்கள் ஆகியவற்றைப் புலவர்கள் வர்ணிப்பதைச் சங்க இலக்கியங்களில் காணமுடியும். அவற்றைக் கொண்டு மதுரை நகரினை ஆராயலாம்.

### மதுரையின் அமைப்பு

மதுரை மாநகரம் தரையமைப்பில் வட்டவடிவமாகவும் தாமரைப்பூப் போன்ற உருவத்துடனும் அமைந்திருந்தது எனப் பரிபாடல் கூறுகிறது. மதுரை திருமாலின் உந்தித் தாமரையை ஒக்கும் என்றும் இந்நகரிலுள்ள தெருக்கள் அம்மலரின் இதழ்களைப் போலவும் பாண்டியனின் அரண்மனை அம்மலரின் நடுவிலுள்ள பொகுட்டைப் போலவும் விளங்கியது. இங்கு வாழும் மக்கள் தாமரையின் தாதுக்களை ஒத்திருப்பர். இங்கு வரும் பரிசிலர் தாதுண்ண வரும் வண்டுகளை ஒத்திருப்பர் என்றும் கூறுவதை,

"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர் - பூவின்
இதழகத் தனைய தெருவம் இதழகத்
தரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்
தாதுண் பறவை அனையர் பரிசில் வாழ்வர்"[57]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

மதுரை மாநகரம் மாடங்கள் நிறைந்தாக விளங்கியதை 'மாடமதுரை' (புறம். 32), 'நீண்மாடக் கூடல்' (கலி. 35) போன்ற பாடலடிகள் காட்டுகின்றன. இவ்வாறு வளமுடைய மதுரை நகரில் ஆறு கிடந்தாற்போன்ற அகன்ற தெருக்கள் இருந்தன. தெருவின் இருபக்கங்களிலும் வரிசையாக அமைந்த இல்லங்கள் பேரியாற்றின் இருமருங்கும் அமைந்த கரைகள் போன்றும் தெருவின் நடுவிடம் ஆற்றின் உட்பகுதி போன்றும் காட்சியளித்தன. இங்கு எக்காலத்திலும் திருமகள் வீற்றிருந்த காரணத்தால் செல்வ வளம் நிறைந்ததாக விளங்கியது எனத் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் குறிப்பிடுகிறார்.

மாலைபோல வளைத்துச் சூழ்ந்ததுபோல வையை நதி மதுரையை மூன்று பக்கங்களிலும் மதுரையைச் சூழ்ந்து சென்றது. இவ்வையையாலன்றி வேறு காரணங்களில் மதுரைக்கு அழிவில்லை எனும்படி அமைந்திருந்ததை,

"நிலந்

தார் முற்றியது போலத் தகைபூத்த வையைதன்

நீர்முற்றி மதில்பொருஉம் பகையல்லால் நேராதார்

போர் முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்"[58]

என்னும் கலித்தொகைப் பாடல் காட்டுகிறது. மதுரையில் வானுயர்ந்த மதிலும் அம்மதில் மேல் படைக்கருவிகளும் வைக்கப்பட்டிருந்தன.

### கடைத்தெரு

மதுரை நகரில் நாளங்காடி, அல்லங்காடி எனும் இரு அங்காடிகள் அமைந்திருந்தன. இவ்விடம் எந்நேரமும் ஆரவாரத்தால் சூழ்ந்திருக்கும். இங்கு ஒவ்வொரு கடையிலும் இன்ன பொருள் விற்கப்படுகிறது என்பதை அறிவிக்கும் கொடி கட்டப்பட்டிருக்கும். நகரத்தின் பிற பகுதிகளில் போர் வீரர்கள் உயர்த்திக் கட்டிய வெற்றிக்கொடிகள் அசையும். கல்வியாளர் உயர்த்திய கொடிகளும் கொடை, தவம் முதலியவற்றை உணர்த்தக் கட்டப்பட்ட கொடிகளும் காற்றில் அசைந்தாடிக் கொண்டிருக்கும் என மதுரைக்காஞ்சி (357 – 374) கூறுகிறது.

### கோயில்களும் மடங்களும்

சைவம், வைணவம், பௌத்தம், சமணம் ஆகிய நான்கு சமயத்தார்க்கும் உரிய கோயில்கள் மதுரை நகரத்தே அமைக்கப்பட்டிருந்தன. இங்கு பௌத்தக் கோயிலை அடுத்து பௌத்த பிக்குகள் அறமுரைக்கும் பௌத்தப்பள்ளி இருந்தது. அதுபோலவே சமணர் கோயிலையடுத்து சமணர் பள்ளியும் வேதங்களைக் கற்று விரதங்களைப் பின்பற்றி முற்றும் துறந்த அந்தண முனிவர் அறமுரைத்த அந்தணப் பள்ளி ஒன்றும் இருந்தது (மதுரை. 461 – 492).

### மதுரையின் வளமும் பெருமையும்

மதுரை நகரில் தினமும் திறையாக வரும் பொருட்கள் சிறந்து விளங்கும். கங்கையானது மலைவளங்களைக் கொண்டு கடலில் புகுவதுபோல எல்லா வகையான வளங்களும் மதுரையில் புகுந்தன். அவ்வாறு வந்த பொருட்கள் அளந்து கணக்கிட இயலாத அளவு குவிந்திருக்கும். தேவருலகம் போலப் பொலிவாகவும் மிக்க புகழுடனும் மதுரை விளங்கியது என மதுரைக்காஞ்சி (695 – 699) காட்டுகிறது.

இந்நகரம் தமிழ் மொழியை ஆராய்ந்து நாளும் வளர்த்து வந்தது. இச்செயலால் தமிழ்மொழி நிலைபெற்று விளங்கியது. இந்நகர வீதிகளில் செல்வோர் மொழியின் வீறுநடை கண்டு மகிழ்வர். எனவே மதுரை தமிழ்மொழியோடு இணைத்துப் புகழப்படுவதை,

"தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரை"[59]

என்னும் இவ்வடிகளில் காணலாம். இவ்வாறு பல்வேறு சிறப்புகளுடன் மதுரை விளங்கியது.

**வஞ்சி**

வஞ்சி மாநகரம் சேரர்களின் தலைநகரமாக விளங்கியது. இந்நகரம் கருவூர் என்றும் அழைக்கப்பட்டது. இது மட்டுமல்லாது கொங்குநாட்டுப் பகுதியிலும் கருவூர் அமைந்துள்ளது. இவ்விரண்டு கருவூரில் எது சேரர்க்குரியது என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகிறது. நாமக்கல், திருச்சி மாவட்டங்களை ஒட்டியமைந்துள்ள கரூர் கொங்கு நாட்டுக் கரூராகும். இது சேரர் கொங்கு நாட்டுப் பகுதிகளைக் கைப்பற்றியபோது தன் தலைநகரின் பெயரை இந்நகருக்கும் வைத்தனர். சேரநாட்டின் தலைநகரமான வஞ்சி கருவூர் ஒரே நகரமா, இரு நகரங்களா என்ற கேள்வி எழுகிறது.

மேலைநாட்டு அறிஞரான தாலமி சேரர்களின் தலைநகரான வஞ்சியைக் 'கரூர்' எனவும் இதன் இருப்பிடத்தை $118^{0}$. 40' கிழக்கு X $14^{0}$. 20' வடக்கு என்றும் குறிப்பிடுகிறார்[60]. இது வஞ்சியும் கருவூரும் இரண்டு நகரங்கள் என எண்ண வைக்கிறது. இக்கருத்துக்கு ஏற்ப ஔவை சு. துரைசாமிப்பிள்ளையவர்கள் "பேரியாற்றின் கிளையாகிய சுள்ளியாறு கடலோடு கூடுமிடத்தே முசிறி நகர் இருந்தது. இதற்குக் கிழக்கில் இருந்தது வஞ்சிநகர்; வஞ்சிக்கு வடமேற்கிலும் முசிறிக்கு வடக்கிலும் ஏழு, எட்டுக் கல் தொலைவில் கருவூர் நகரம் இருந்தது"[61] என்கிறார். இந்த இரண்டு நகரங்களையும் சேர்த்தே கூறும் மாண்பு சேரர்களிடையே நிலவியிருந்தது எனலாம். புலவர்களும் அவ்வாறே அழைத்து வந்தனர். சேரர்களில் இருபிரிவினரை அறிவோம். இவ்விரு மரபினரும் இவ்விரு இடங்களில் அரண்மனை அமைத்துத் தங்கினர் எனலாம். இவர்களில் இரும்பொறை

மரபினர் ஆட்சிப் பொறுப்புகளில் கவனம் செலுத்த உதியன் மரபினர் போர்களில் ஈடுபட்டனர். போர் இல்லாத தருணங்களில் வஞ்சிக்கு வரும்போது அவர்களுக்குரிய அரண்மனைகளில் தங்கினர் எனக் கருதலாம். இவ்விரு மரபினரிடையே நிலவிய ஒற்றுமை காரணமாக ஒரே பெயரில் அழைக்கப்பட்டது எனலாம்.

இன்றைய கொச்சிக்கு அருகிலுள்ள திருவஞ்சிக்குளம் எனும் ஊரே சங்ககாலச் சேரர்களின் தலைநகரமாக இருந்தது என்பதே அறிஞர் பலரின் முடிபாகும். வஞ்சி பற்றிக் கூறுமிடத்து இராசமாணிக்கனார், 'கொச்சிக்கு வடக்கில் ஏறத்தாழ எட்டுக்கல் தொலைவில் பேரியாறு கடலோடு கலக்கும் இடமுள்ளது. இப்பேரியாற்றுக்கு வடபாலுள்ள நிலப்பகுதியில் திருவஞ்சிக்குளம் எனும் ஊர் உள்ளது. அதற்கு அண்மையில் 'கருவூர்' எனும் பெயருடன் பல ஊர்கள் உள்ளன. இவையனைத்தும் உப்பங்கழிக்கும் கடலுக்கும் இடைப்பட்ட நிலத்தில் உள்ளன"[62] என்று கூறுகிறார். இதனடிப்படையிலும் இங்கு நடந்த அகழ்வாராய்ச்சியின் அடிப்படையிலும் இப்பகுதியே சங்ககாலச் சேரர் தலைநகரம் எனக் கூறுகிறார். இக்கருத்து ஏற்புடையதாக உள்ளது.

**வஞ்சி நகரமைப்பு**

வஞ்சி மாநரகம் பொருநை ஆற்றங்கரையில் அமைந்திருந்தது. இந்நகரை வளைத்து ஓடிய இந்த ஆறு வஞ்சிக்கு இயற்கை அரணாகவும் அமைந்தது. வஞ்சியின் புறமதிலை முத்தமிடுதல் போலப் பலமுறை மோதி மதிலை அலைத்துப் பாய்ந்தோடும் தன்மையுடையதாய் இப்பொருநை விளங்கியது. இதனை,

"திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்
தெண்ணீர் உயர்கரைக் கவைஇய
தண்ணான் பொருநை மணலினும்"[63]

எனும் பாடல் புலப்படுத்துகிறது. மேலும் வஞ்சி நகரைச் சுற்றியுள்ள பல ஊர்களிலும் உள்ள வயல்களில் நெல் விளையுளைத் தருவதாகப் பொருநையாறு விளங்கியது.

பொருநையாறு தூயவெண் மணலைக் கரைகளில் ஒதுக்கும் (அகம். 93). மென்மையான திரண்ட முன்கையினையும் தூய ஆபரணங்களையும் உடைய மகளிர் இவ்வெண் மணலில் பாவை செய்து விளையாடுவர்.

இம்மணல் பாவைக்குக் கோட்டுப்பூவைப் பறித்துச் சூட்டுவர். பின்னர் பொருநையின் குளிர்ந்த நீரில் பாய்ந்து விளையாடுவர். இந்நகரம் மிகுந்த காப்புடைய காவற்காட்டைக் கொண்டிருந்தது.

வஞ்சி நகரின்மீது சோழன் கிள்ளி வளவன் போர் தொடுத்தான். இச்சோழ வேந்தன் காவற்காட்டை அழித்தான். இச்சமயத்தில் சோழன் போருக்கு வராமல் தன் அரண்மனைக்குள்ளேயே அடைந்திருந்தான். இச்சேரனின் பெயர் குறிப்பிடப்படவில்லை.

### வஞ்சியின் வளங்களும் சிறப்புகளும்

இந்நகரம் புலவர்களால் "பூவா வஞ்சி" (புறம். 32), "வாடா வஞ்சி" (புறம். 39) எனப் போற்றியுரைக்கும் தன்மையதாய் விளங்கியது. இந்நகரைச் சுற்றியுள்ள வயல்களில் நெல்விளைந்து நிறைந்த வளத்துடன் இருக்கும். வஞ்சி மாநகர் செல்வவளம் மிக்கதாகவும் அகன்றதாகவும் விளங்கியதை, "வஞ்சி யன்னவென் வளநகர்" (அகம். 263) எனும் அகப்பாடலடி காட்டுகிறது. இது மட்டுமல்லாது சேரர்கள் விலைமிக்க அணிகலன்களையும் வைரங்களையும் கைப்பற்றி வெற்றிமிக்க தன் தலைநகரமான வஞ்சிக்குக் கொணர்ந்தனர். எனவே வஞ்சி செல்வம் மிக்கதாக விளங்கியது.

இத்தகைய சிறப்புகளைப் பெற்றிருந்தாலும் உறையூர், மதுரை, புகார் நகரங்களுக்கு இணையான வளங்களைப் பெற்றுத் திகழ்ந்தபோதும் இம்மூன்று நகரங்களைப் புகழ்ந்து பாடிய சங்கப் பாடல்களை நோக்குமிடத்து வஞ்சி மாநகரத்தைப் புகழ்ந்த பாடலகள் மிகக் குறைவு. பதிற்றுப்பத்து சேரர்களின் வாழ்க்கை, வீரம், வெற்றி ஆகியவற்றைப் புகழ்ந்தபோதும் ஏனோ வஞ்சிநகரைத் தக்க அளவு பாடாதொழிந்தது. பின் வந்த சிலம்பும் மேகலையும் வஞ்சியைப் புகழ்ந்துள்ளன. இதற்கான காரணம் ஆய்வதற்குரியது.

### துறைமுக நகரங்கள்

நெய்தல் நிலப்பகுதிகளில் ஆற்றுநீர் கடலோடு கலக்குமிடத்தே அமைந்த நகரங்கள் துறைமுகங்களாகத் தோற்றம் பெற்றன. ஒருசில இடங்களில் ஆற்றுமுகத் துவாரங்கள் இல்லாத கடல் துறைப்பக்கத்தே செயல்பட்டன. இத்துறைமுகங்களில் வணிகக் கப்பல்கள் வந்து ஏற்றுமதி இறக்குமதி செய்தன. எனவே இங்கு வணிகமும் செல்வமும் பெருகின.

இதன் காரணமாகத் துறைமுகங்கள் நாகரிகம் வளர்ந்த நிலையையடைந்தன. இவை அரசர்களுக்கு மிகுந்த வருவாயை ஈட்டித் தந்தன. வணிகத்திற்கான உச்ச நிலையைத் துறைமுகங்கள் விளக்கின.

சங்க காலத்திலேயே பல கப்பல்கள் ஒன்றாக நிறுத்துமளவிற்குப் பரந்த இடமுடையனவாகத் துறைமுகங்கள் விளங்கின. பழங்காலத்திலேயே கடற்கரைப் பட்டினங்களில் 'கலங்கரை விளக்கம்' அமைக்கப்பட்டது. இவ்விளக்கம் துறைமுகங்களை அறியும் பொருட்டும் மீன்பிடித் தொழில் செய்வோர் கரையை வந்தடைய உதவும் பொருட்டும் அமைக்கப்பட்டது. விண்ணைத் தொடுகின்ற அளவு உயரமானதாக உள்ள கலங்கரை விளக்கத்தின் உச்சியில் இரவில் தீமூட்டுவர். சங்க காலத் தமிழகம் கிழக்கு மேற்குத் திசைகளில் கடல்களை எல்லையாகக் கொண்டிருந்தது. எனவே இக்கடற்கரைப் பக்கத்தே துறைமுக நகரங்களைக் கொண்டு வணிகத்தில் சிறந்து விளங்கியது. கிழக்கு மேற்குக் கடற்கரைகளில் அமைந்த நகரங்களை முறையே கிழக்குக் கடற்கரைத் துறைமுகங்கள், மேற்குக் கடற்கரைத் துறைமுகங்கள் எனப் பாகுபடுத்தி இப்பகுதியில் ஆராயப்படவுள்ளன.

### கிழக்குக் கடற்கரைத் துறைமுகங்கள்

குணகடலான வங்கக் கடலில் அமைந்த துறைமுகப் பட்டினங்கள் கிழக்குக் கடற்கரைத் துறைமுகங்கள் ஆகும். சங்க காலத்தில் புகழ்பெற்று விளங்கிய இத்துறைமுகங்கள் பிற்காலத்தில் மறைந்து புதிய துறைமுகங்கள் ஏற்பட்டன. சங்க இலக்கியங்களில் புலவர்கள் எயிற்பட்டினம், காவிரிப்பூம்பட்டினம், கானலம் பெருந்துறை, கொற்கை, நீர்ப்பெயற்று, மருங்கூர்ப் பட்டினம், முதுவெள்ளிலை போன்ற துறைமுகங்களைக் குறித்துள்ளனர். அவற்றை விரிவாக ஆராயலாம்.

### எயிற்பட்டினம்

எயிற்பட்டினம் ஒய்மாநாட்டின் துறைமுக நகரமாகத் திகழ்ந்தது. மதில் சூழ்ந்த பட்டினம் என்னும் பொருளில் மதிற்பட்டினம், எயிற்பட்டினம், சோப்பட்டினம் என்ற பெயர்களில் அழைக்கப்பட்டது. இதனைப் பெரிப்ளூஸ் நூலாசிரியர் துறைமுக நகரமாக 'சோபட்மா' எனக் குறிப்பிடுகிறார். இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் தாம் பாடிய

சிறுபாணாற்றுப்படையில் மதிலின் பெயர் எய்திய நகரம் எனக் குறிப்பிடுகிறார். இது எயிற்பட்டினம் என உரை கூறிய நச்சினார்க்கினியர் கூறுகிறார். இந்நகரம் உப்பங்கழிகளைச் சூழ்ந்த ஊர்களையுடையதாகவும் இருந்தது. இங்குள்ள கடற்கரையில் தாழைகள் அன்னம் போல மலர்ந்தன. செருந்தி மலர் இளவேனில் காலத்தில் பொன்னோ எனக் காண்போர் மருளும்படி பூத்திருக்கும். உப்பங்கழிகளுக்கு அருகில் பூத்த கழிமுள்ளிச் செடியின் மலர்கள் நீலமணிபோலக் காட்சியளிக்கும். நெடிய தாளினையுடைய புன்னை மரங்கள் முத்துக்களைப் போல மலர்களை உதிர்க்கும். இதனை,

“அலைநீர்த் தாழை அன்னம் பூப்பவும்
தலைநாட் செருந்தி தமனிய மருட்டவும்
கடுஞ்சூல் முண்டகம் கதிர்மணி கழாஅலவும்
கொடுங்காற் புன்னை நித்தலம் வைப்பவும்
கானல் வெண்மணல் கடலுவாய் நிமிர்தரப்
பாடல்சான்ற நெய்தல் நெடுவழி
மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனிநீர் படுவிற் பட்டினம்”[64]

என்னும் சிறுபாணாற்றுப்படையின் அடிகள் காட்டுகின்றன.

எயிற்பட்டினத்தின் கடற்கரையில் மணமிக்க அகில் மரக்கட்டைகள் அலைகளால் ஒதுக்கப்பட்டுக் கரையை வந்தடையும். முடிச்சுள்ள அகிற்கட்டைகள் ஒட்டகம் படுத்துறங்குவதுபோலக் காட்சியளிக்கும். இக்கட்டைகளை எரித்துக் களிப்புடைய தேறலைக் காய்ச்சி இங்கு வரும் விருந்தினர்களுக்குக் கொடுப்பர். நல்லூர் நத்தத்தனார் “வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகிற்” எனக் கூறுவதால் இது இத்துறைமுகத்தே இறக்குமதியாகும் பொருள் எனக் கருதலாம். மயிலை சீனி. வேங்கடசாமி “விரைமரம் கடலிலிருந்து வந்தது எனக் கூறுகிறபடியால் இது சாவக நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்டது”[65] என்கிறார்.

சங்ககால எயிற்பட்டினம் இன்று எப்பகுதியில் உள்ளது என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகிறது. திண்டிவனத்திற்கு அருகிலுள்ள மரக்காணம் எயிற்பட்டினம் என்று சிலரும் எயிற்பட்டினம் வேறு; மரக்காணம் வேறு என ஒருசிலரும் கருதுகின்றனர். மா. இராசமாணிக்கனார் தன் பத்துப்பாட்டு ஆராய்ச்சியில் “மரக்காணத்திற்குக் கிழக்கில் கடலுக்குச்

செல்லும் வழியில் பூமீசுவரர் கோயில் உள்ளது. இக்கோயிலுக்கு வடகிழக்கில் ஏறத்தாழ 600 கெஜத் தொலைவில் கடலில் உயர்ந்த மேட்டுநிலப் பகுதி இருப்பதாகவும் அங்குக் கடல்நீர் நான்கடி ஆழமே இருப்பதாகவும் அவ்விடத்திற்குச் செல்லும் மீனவர் உரைக்கின்றனர். யக்கியர் குப்பத்திற்குத் தென்கிழக்கில் ஒரு கல் தொலைவில் கடலில் வலை வீசும்போது வலையிலுள்ள இரும்புக் குண்டுகல் பட்டவுடன் ஏறத்தாழ இருபதடி ஆழத்தில் வெண்கல ஓசை எழுகிறது என்றும் கோபுரம் போன்ற கட்டடம் தெரிவதாகவும் கூறுகின்றனர். இவ்வோசை கேட்கும் இடத்திற்கும் வடக்குத் தள்ளி ஒரு நகரம் இருந்து கடலுள் மறைந்திருக்கலாம். இது எயிற்பட்டினமாக இருக்கக் கூடும்”[66] என்கிறார்.

கடலுக்கு அடியில் சுவர் போன்ற அமைப்பு காணப்பட்டதையும் இந்தச் சுவரை ஆய்வு செய்ததில் சுவரின் ஒருபகுதி அரிக்கமேடு முகத்துவாரம் வரையிலும் அடுத்த பகுதி புதுச்சேரியின் எல்லையிலுள்ள நரம்பை என்னும் ஊர் வரையிலும் செல்கிறது. இதையொட்டி மரக்கலங்கள் சென்றுவரும் வகையிலான ஒரு கால்வாய் இருந்ததற்கான தரவுகளும் கண்டுபிடித்தார். ஒருங்கிணைந்த பெருங்கடல் பண்பாட்டு ஆய்வு நிறுவனர் ஒரிசா பாலு. இந்த அழிந்துபட்ட பகுதியே சங்ககால எயிற்பட்டினம் என ‘தி இந்து’[67] நாளிதழ் காட்டுகிறது. இக்கருத்துக்களை நோக்க எயிற்பட்டினம் எனும் நகரம் கடலுள் மூழ்கி அழிந்துவிட்டதை உணரமுடிகிறது.

### காவிரிப் பூம்பட்டினம்

சங்க காலத்தில் தமிழகத்திலிருந்த துறைமுகங்களில் உலகத்தரம் வாய்ந்த துறைமுகங்களில் ஒன்றாகக் காவிரிப்பூம்பட்டினம் விளங்கியது. இது சோழர்களின் புகழ் பெற்ற துறைமுகமாகவும் பின் தலைநகரமாகவும் திகழ்ந்தது. இதனைக் காவிரிப்பூம்பட்டினம், பூம்புகார், புகார் எனவும் பௌத்த நூல்களில் கவீரபட்டினம் எனவும் அழைக்கப்பட்டது. இப்பட்டினத்தைப் பெரிப்ளுஸ் நூலாசிரியர் ‘கமரா’ எனவும் தாலமி ‘கபேரிஸ் எம்போரியான்’ எனவும் இதன் இருப்பிடம் $128^0$. 30’ கிழக்கு X $15^0$. 40’ வடக்கு எனவும் குறித்துள்ளனர். பிளைனி இந்நகரத்தைக் ‘கபேரிஸ் எம்பேரியம்’ என்கிறார். இது தற்போது நாகப்பட்டின மாவட்டத்தில் சீர்காழிக்கு அருகில் ஒரு சிறிய கிராமமாகக் கடற்கரையோரத்தே இருக்கிறது.

காவிரியாறு கடலில் கலக்கும் புகர்முகத்தே காவிரியின் வடகரைப் பகுதியில் இந்நகரம் அமைந்திருந்தது. இந்நகரம் ஓசையுடையதாக விளங்கியதை,

"தேறுநீர்ப் புணரியோடு யாறுதலை மணக்கும்
மலியோதத்து ஒலிகூடல்"[68]

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இதனை நச்சினார்க்கினியரின் 'தெளிந்த கடலில் திரையோடு காவிரி தலைகரக்கும் ஓதத்தினால் ஒலிமலிந்த புகார்முகம்' என விளக்குகிறார்.

### நகரமைப்பு

புகாரின் நகரமைப்பைப் பற்றி விரிவாக விளக்குகிறது பட்டினப்பாலை. இந்நகரம் நன்கு திட்டமிட்டு அமைக்கப்பட்டிருந்தது. இதன் புறநகர் மருவூர் பாக்கம் என்றும் அகநகர் பட்டினப்பாக்கம் என்றும் இருபிரிவாக இருந்தது. இவ்விரு பகுதிகளுக்கும் இடையில் நாளங்காடி எனும் பெரிய கடைத்தெரு இருந்தது.

### பட்டினப்பாக்கம்

பட்டினப்பாக்கம் பாதுகாப்போடு, அமைதி நிறைந்த நகரமாக விளங்கியது. இங்கு அரசனின் அரண்மனையும் குடிமக்களின் இல்லங்கள், கோயில்கள் போன்றவையும் அமைந்திருந்தன. இந்நகரத் தெருக்களில் உள்ள செல்வம்மிக்க மனைகள் பல கட்டுகளையும் பெரிய, சிறிய வாயில்களையும் நீண்ட நடையினையும் கொண்டு மாடங்களுடன் திகழ்ந்தன. இப்பாக்கத்தே புலிப்பொறி பதித்த கதவினையுடைய அட்டில் சாலைகள் இருந்தன. மேலும் இங்கு துறவிகள் உறையும் தவப்பள்ளிகள் இருந்தன. புத்த, சமண தவப்பள்ளிகளும் பிறசமய தவப்பள்ளிகளும் தனித்தனியே அமைதியுடன் திகழ்ந்தன எனப் பட்டினப்பாலை (32- 50) கூறுகிறது.

### மருவூர்ப்பாக்கம்

மருவூர்ப்பாக்கம் தொழிலும் வாணிகமும் இணைந்த நகரமாகத் திகழ்ந்தது. இப்பகுதியில் துறைமுகம், பண்டகசாலை, சுங்கச் சாவடி, அயல் நாட்டாரின் இல்லங்கள் மற்றும் பல்வேறு தொழிலாளர் இல்லங்களும் இருந்தன. பண்டக சாலைகளில் உள்ள பொருட்களைக் கவராதிருக்கும்

பொருட்டு இரவு முழுவதும் காவலர்கள் காவல் செய்வர். இப்பண்டக சாலைகளில் ஏற்றுமதி, இறக்குமதியாகும் பண்டங்கள் மலைபோல் குவிந்திருக்கும். இதற்குப் புலி இலச்சினையிட்ட பின்பே அடுக்கி வைப்பர். பூம்புகாரில் நடைபெற்ற தொல்லியல் அகழ்வாராய்ச்சியில் புலி பதித்த முத்திரைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இப்பண்டங்களுக்குரிய சுங்கம் வாங்கும் சுங்கச் சாவடியும் இங்கிருந்தது.

### அங்காடித் தெரு

பட்டினப்பாக்கத்திற்கும் மருவூர்ப்பாக்கத்திற்கும் இடையில் பெரிய அங்காடித் தெரு இருந்தது. இருபக்கத்தாரையும் இணைப்பதுபோல அமைந்ததால் இங்கு எழுந்த ஆரவாரம் இருபெரு வேந்தரின் முனையிடம் போல் காட்சியளித்தது. இங்கு ஒவ்வொரு கடையிலும் இன்ன பொருள் விற்கப்படுகிறது எனத் தெரிவிக்கும் வகையில் கொடிகள் கட்டப்பட்டிருக்கும்.

### புகாரின் சிறப்புகள்

காவிரியாற்றின் மணலையும் புது வருவாயையும் புகார் நகரமானது வானைத் தொடுகின்ற மதிலையும் உயர்ந்த மாடங்களையும் கொண்டு விளங்கியது. இந்நகரின் புகர்முகத்தில் நாவாய்களும் மரக்கலங்களும் வந்து தங்கியிருந்தன. இவ்வணிகக் கப்பல்கள் பாய்களைச் சுருட்டாமலும் பாரத்தை இறக்காமலும் துறைமுகத்தில் புகுந்து நின்றதை,

"கூம்பொடு
மீப்பாய் களையாது மிசையரந் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்"[69]

என உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பூம்புகாரின் சிறப்பை எடுத்துரைக்கிறார். இக்கப்பல்கள் யானைப் பந்தியின்போது நிற்கும் யானைகள் அசைந்துகொண்டு இருப்பதைப்போல அசைந்தாடிக் கொண்டிருந்தன எனப் பட்டினப்பாலை கூறுகிறது. வெவ்வேறு நாடுகளிலிருந்து நீர்வழியாகவும் வடபகுதியிலிருந்தும் புகார்த் துறைமுகத்திற்கு வந்திறங்கிய பொருட்களையும் ஏற்றுமதிக்காகக் கொண்டு வந்த பொருட்களையும் உருத்திரங்கண்ணனார் பின்வருமாறு பட்டியலிடுகிறார்.

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்

வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு"[70]

புகாரின் துறைமுகத்தை அடுத்த கடற்கரைப் பக்கத்தில் அயல்நாடுகளிலிருந்து வந்த மாலுமிகளும் பலமொழி பேசும் வணிகர்களும் பிறரும் தங்கியிருந்தனர். பூம்புகாரப் பகுதியில் மேற்கொண்ட மேற்பரப்பாய்வில் ஒருபக்கம் புலி, மறுபக்கம் யானை பொறித்த சோழர் காலச் செப்புக்காசு, யவனர் தொடர்புடைய ரூலெட்டட் பானையோடுகள், கல்மணிகள், ரோமானிய நாணயம் ஆகியவை கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மேலும் இங்கு நடத்தப்பட்ட அகழாய்வில் படகுத்துறைக் கட்டிடமும் நீர்த்தேக்கமும் கண்டறியப்பட்டுள்ளன. இவை முறையே கி.பி. 2, 3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என கரிப்பகுப்பாய்வு காலக்கணிப்பு முறையில் கண்டுபிடித்துள்ளனர். இம்முறையில் கி.பி. 3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பௌத்தப் பள்ளியும் மதம் சார்ந்த சுடுமண் பொம்மைகளும் கண்டுபிடித்துள்ளனர். இந்நகரம் சங்க காலத்தின் பிற்பகுதியில் வளர்ந்த நிலையிலும் சிலம்பின் காலத்தில் உச்சத்தையும் எட்டியது. தற்போது குக்கிராமமாகக் காட்சியளிக்கிறது.

**கானலம் பெருந்துறை**

இப்பெருந்துறை சோழப் பேரரசின் தொடக்க காலத்தில் சோழரின் துறைமுகமாக விளங்கியது. இத்துறைமுகம் தித்தனின் பெருந்துறை என அழைக்கப்படுகிறது. இது நீர்த்திவலையின் ஆரவாரம் ஒலிக்கும் பட்டினமாகத் திகழ்ந்தது. இத்துறைமுகத்திற்கு வருகின்ற மரக்கலங்கள் பொன்னைக் கொண்டுவந்து கொடுத்து இந்நாட்டுப் பொருட்களைக் கொண்டு செல்லும். இப்பெருந்துறைப் பட்டினத்திற்கு அருகிலுள்ள கடற்பரப்பில் இறால் கூட்டடங்களின் தொகுதிகள் வாழ்ந்திருக்கும். இறால்மீன் தொகுதி இங்கு வருகின்ற கலங்களைத் தாக்கிச் சிதைக்கும் தன்மையதாக விளங்கின.

இப்பட்டினத்தில் பிண்டன் என்பவனைத் துளுநாட்டு மன்னன் பகை காரணமாகக் கொன்றான். இதனை,

"சினங்கெழு தானைத் தித்தன் வெளியன்
இரங்குநீர்ப் பரப்பில் கானலம் பெருந்துறைத்
தனந்தரும் நன்கலஞ் சிதையத் தாக்கும்
சிறுவெள் இறவின் குப்பை அன்ன
உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்
முனைமுரண் உடையக் கடந்த வென்வேல்
இசைநல் ஈகைக் களறுவீசு வெண்மகிழ்
பாரத்துத் தலைவன் ஆர நன்னன்"[71]

என்னும் அகப்பாடல் மூலம் பரணர் புலப்படுத்துகிறார்.

**கொற்கை**

உலகப் புகழ்பெற்ற பாண்டிய நாட்டின் துறைமுகமாகக் கொற்கை விளங்கியது. இத்துறைமுகம் வளைகுடாப் பகுதியில் இருந்ததால் முத்துக்குளிக்கும் இடமாகவும் சங்கெடுக்கும் இடமாகவும் திகழ்ந்தது. கொற்கை முத்து உலகப் புகழ் பெற்றதாக விளங்கியது. கொற்கை நகரத்தையும் முத்தையும் கிரேக்கர்களான பிளைனி, தாலமி, பெரிப்ளூஸ் நூலாசிரியர் போன்றோர் குறிப்பிடுகின்றனர். "தாலமி கொற்கையைக் 'கோல்கே' எனவும் 'கோல்கே வளைகுடா' எனவும் இதன் இருப்பிடம் $123^0$. 0' கிழக்கு X $15^0$. 0' வடக்கு எனவும் குறிப்பிடுகிறார். பிளைனி 'கோரகே' என வழங்கினார். இவர் "கொற்கை முத்து வெண்நிறம் வாய்ந்ததாகவும் அராபியன் கடலில் முகிழ்ந்தெடுக்கப்பட்ட முத்து சிவப்பு நிறமாகவும் இருந்தது"[72] எனக் குறிப்பிட்டுள்ளார். பெரிப்ளூஸ் நூலாசிரியர் "கோல்கே என்பது கன்னியாகுமரி அப்பால் உள்ள துறைமுகம். அங்கு முத்தெடுக்குந் தொழில் நடைபெறுகிறது. தண்டிக்கப்பட்ட குற்றவாளிகள் அத்தொழிலைச் செய்கிறார்கள். கொற்கை பாண்டிய நாட்டைச் சேர்ந்தது"[73] என எழுதியுள்ளார். அறிஞர்களின் இக்கூற்றுகள் கொற்கையின் பழைமையையும் புகழையும் உணர்த்துகின்றன.

ரோமாபுரி அரசிகளும் சீமாட்டிகளும் முத்துக்களை அணிவதில் பெரும்பொருளைச் செலவிட்டனர். அதனால் ரோம் நாட்டு அரசியல்

தலைவர்கள் முத்துக்களை அணியும் பெண்களை வன்மையாகக் கண்டித்தனர். இவ்வாறு பெண்கள் முத்துக்களைப் பேரார்வத்துடன் அணிவதால் ரோமப் பெருநாட்டின் செல்வம் வற்றிவருகிறது என்று திபெரியஸ் (கி.பி. 16 – 37) என்ற ரோமப் பேரரசன் செனட் சபைக்கு எழுதியுள்ளான். இது கொற்கை முத்தின் பெருமையை உணர்த்துவதாக உள்ளது.

கொற்கை முதலில் பாண்டிய நாட்டின் தலைநகரமாகவும் துறைமுகமாகவும் திகழ்ந்தது. பின்னர் தலைநகரம் மதுரைக்கு மாற்றப்பட்டபின் துறைமுகமாகவும் வணிக மையமாகவும் செயல்பட்டு வந்தது. பாண்டியர் தன் ஆட்சிப்பரப்பைக் கூடல்வரை நீட்டியபின்னரே மதுரை தலைநகரமாகக் கொள்ளப்பட்டதைப் பேராலவாயர் எனும் புலவர் அகநானூற்றில் (296) குறிப்பிடுகிறார். கொற்கைத் துறைமுகம் முத்திற்குப் பெயர்போனதாக விளங்கியதால் கொற்கையும் முத்தும் இணைத்தே கூறப்பட்டதை "முத்துபடு பரப்பின் கொற்கை முன்துறை" (நற். 23) என்னும் பாடலடி உணர்த்துகிறது.

பாண்டியர்களின் கொற்கைத் துறையிடத்தே கடல் அலைகள் கொணர்ந்து வீசிய முத்துக்கள் குதிரைகளின் கால்களை வடுச்செய்து அதன் செலவினைத் தடுக்கும்.

"இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்
கவர்நடைப் புரவிக் கால்வடுத் தபுக்கும்
நற்றேர் வழுதி கொற்கை முன்துறை"[74]

என்னும் அகநானூற்றுப் பாடலின்மூலம் கொற்கையின் செல்வ வளத்தை வெண்கண்ணனார் எனும் புலவர் புகழ்ந்து பாடுகிறார். மேலும் உப்பு வணிகர் வண்டிகளில் உப்பு மூட்டைகளை ஏற்றிக்கொண்டு விற்கச் செல்லும்போது தம் மனைவி, மக்களுடன் தாம் வளர்க்கும் குரங்கையும் கூட்டிச் செல்வர். இக்குரங்கு உமணர் குழந்தைகளுடன் முத்துக்கள் நிறைந்த கிலுகிலுப்பையைக் கொண்டு விளையாடிக் கொண்டு செல்லும் நகரமாகக் கொற்கை விளங்கியதைச் சிறுபாணாற்றுப்படை (51 – 60) விளக்குகிறது. கொற்கைக் கடற்துறையில் முத்துக்கள் மட்டுமல்லாது வலம்புரிச் சங்குகளும் கிடைத்தன.

கொற்கை நகரத்தில் வாழ்ந்த பரதவர் முத்துக் குளியலில் ஈடுபட்டு முத்தெடுத்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. இக்கடற் துறையில் சுறா மீன்களை ஒதுக்கி வலம்புரிச் சங்குகளையும் முத்துக்களையும் மூழ்கியெடுத்து வருவர் பரதவர். இவர்களைக் கரையிலுள்ளோர் ஆரவாரத்தோடு எதிர்கொள்வதை,

"இலங்கிரும் பரப்பின் எறிசுறா நீக்கி
வலம்புரி மூழ்கிய வான்றிமிட் பரதவர்
ஒலிதலைப் பனிலம் ஆர்ப்பக் கல்லென்
கலிகழு கொற்கை எதிர்கொள"[75]

என்னும் இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. கொற்கையில் முத்துக் குளிப்போரும் சங்கெடுப்போரும் தனிச்சேரியில் வாழ்ந்துவந்தனர் என மாங்குடி மருதனார் குறிப்பிடுவதை மதுரைக்காஞ்சியில் (134 – 138) காணமுடிகிறது.

இவ்வாறு சிறப்புடன் விளங்கிய துறைமுகமான கொற்கை நகரம் கடல் தூர்ந்து சிறிய குக்கிராமமாகக் காட்சியளிக்கிறது. இங்குத் துறைமுகம் இருந்ததற்கான சுவடுகள் இல்லை. கொற்கை, தூத்துக்குடி – திருச்செந்தூர் சாலையில் ஏரலுக்கு முன்பாக வடக்குப் பகுதியில் அமைந்துள்ளது. வாழவல்லான் கிராமத்திற்கு மூன்று கல் தொலைவு கிழக்கிலும் உமரிக்காடு கிராமத்திற்கு நான்கு கல் தொலைவு வடக்கிலும் அமைந்துள்ளது. இப்பகுதியில் அகழ்வாராய்ச்சியின் மூலம் பண்டைக்காலத் தாழிகள், மட்பாண்டங்கள், சங்குத் தொழிற்சாலை, பாண்டியர் நாணயங்கள் போன்றவை கண்டெடுக்கப்பட்டுள்ளன. மேலும் "இன்றுள்ள கொற்கையில் அக்கசாலை எனும் சிற்றூரும் மணப்படைவீடு எனும் ஊரும் கொட்டாரம் ஊரும் அருகருகே அமைந்துள்ளன. இம்மூன்று ஊர்களையும் இன்றுள்ள கொற்கை எனும் சிற்றூருடன் சேர்த்து நோக்கின் சங்கப் பாடல்கள் கூறியபடி கொற்கை பேரூராக இருத்தல் புலனாகும்"[76] என இராசமாணிக்கனார் கூறுகிறார்.

## தொண்டி

சங்க காலத்தில் இரண்டு தொண்டி நகரங்கள் அமைந்திருந்தன. இவை முறையே கிழக்கு, மேற்குக் கடற்கரையில் அமைந்திருந்தன. கிழக்குக் கடற்கரைத் தொண்டி பாண்டியர்க்கு உரியதாக இருந்தது. இந்நகரம் இன்று இராமநாதபுரம் மாவட்டத்தில் இப்பெயருடன் சிற்றூராகத்

திகழ்கிறது. வளம் மிக்க கடற்கரைப் பட்டினமாகத் தொண்டி விளங்கியது. இங்கு வாழும் பரதவர் பழைய படகைச் சரிசெய்தும் புதிய வலையினையும் கொண்டு பிடித்த சுறா மீன்களைப் பகிர்ந்து கொள்வர். இதனை,

"கொண்டலொடு
குருஉத்திரைப் புணரி யுடைதரும் எக்கர்ப்
பழந்திமிழ் கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டுமணல் அடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளங்கெழு தொண்டி"[77]

எனும் பாடலில் அம்மூவனார் குறிப்பிடுகிறார். இப்புலவர் இந்நகரைக் கிழக்குக் கடலிலிருந்து வீசுகின்ற காற்றான கொண்டல் காற்று வீசுகிற தொண்டி மாநகரம் எனக் குறிப்பிடுகிறார். இவ்வொரு குறிப்புத் தவிர பாண்டியரின் தொண்டி பற்றிப் பிற குறிப்புகள் இல்லை.

**நீர்ப்பெயற்று**

நீர்ப்பெயற்று என்னும் துறைமுகம் தொண்டை நாட்டில் அமைந்திருந்தது. "நீர்ப்பெயற்று என்பது நீர்ப்பாயல் துறை என்பதன் மரூஉ. இதனைக் 'கடல் மல்லைத் தலசயனம்' என்று வைணவர் வழங்குவர். சலசயனம் என்பதே தலசயனம் என மருவிற்று என்பர். எனவே நீர்ப்பாயல் என்பதன் நேர்ப்பொருளாகச் சலசயனம் எனும் தொடர் அமைவதைக் காணலாம். மல்லை, மாமல்லை, மாவலிபுரம், மகாபலிபுரம் என இப்பட்டினத்தின் பெயர் படிப்படியாய் மருவி இக்காலத்தில் மகாபலிபுரம் என வழங்குகிறது"[78] என உரையாசிரியர்கள் கூறுகின்றனர். மேலும் மதுராந்தகம் வட்டத்தின் தென்பகுதியில் உள்ள 'நீர்ப்பேர்' எனும் சிற்றூரே நீர்ப்பெயற்றாகலாம் என்றும் கூறுவர். நீர்ப்பெயற்று என்பதே கடல்நீர் உட்பெய்தலைக் கொண்டதாகிய நிலம் எனப் பொருள்படும். அதாவது உப்பங்கழியையுடைய நிலப்பகுதியாகும்.

நீர்ப்பெயற்று எனும் நகரத்தின் எல்லையில் துறைமுகம் அமைந்திருந்தது. இத்துறைமுகத்தில் பல கப்பல்கள் குழுமியிருந்தன. இங்கு மேல்திசை நாடுகளிலிருந்து வெண்மை நிறமுடைய குதிரைகள் கப்பல்களிலிருந்து இறக்குமதியாயின. இது வடதிசைக்கண் உள்ள சிந்து

நாட்டுப் புரவி எனவும் கூறுவர். வட திசையிலிருந்து பொன், மணிகள் போன்ற வளமுடைய பொருள்களையும் இறக்குமதி செய்யும் கலங்களும் இத்துறைமுகத்தில் இருந்தன. இதனை,

> "நீர்ப்பெயற் றெல்லை போகிப் பாற்கேழ்
> வாலுளைப் புரவியொடு வடவளந் தரூஉம்
> நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை"[79]

என்னும் பாடலடிகள் வாயிலாக உணரமுடிகின்றது.

இத்துறைமுகத்தை ஒட்டிய கடற்கரையின் உட்பகுதியில் நகரம் இருந்தது. இங்குப் பல தெருக்கள் இருந்தன. இத்தெருக்கள் பரதவர்களும் வணிகர்களும் வாழும் உயர்ந்த மாடங்களுடன் காட்சியளித்தன. துறைமுகமாதலால் ஓங்கி உயர்ந்த பண்டக சாலைகள் இருந்தன. பண்டக சாலையில் வைக்கப்பட்டிருக்கும் பொருட்களைப் பாதுகாக்கும் தொழிலில் ஈடுபடுவோர் சூழ்ந்திருந்தனர். இத்துறைமுகத்தின் அருகே கலங்கரை விளக்கம் இருந்தது. இது வானம் வீழாதபடி முட்டுக்காலாக ஊன்றி வைத்த பற்றுக்கோடு போல விண்ணைத் தொடுமளவுக்கு உயர்ந்திருந்தது. அதன்மீது சாந்திட்ட மாடம் அமைக்கப்பட்டிருந்தது. இவ்விளக்கத்தின்மேல் ஏறுவதற்கு ஏணி சார்த்தப்பட்டிருக்கும். இந்நகரம் செல்வவளம் மிக்கதாகத் திகழ்ந்தது. இத்துறைமுகத்தின் நீர்த்துறையில் மகளிர் நீராடும்போது தம் குழைகளைக் கரையில் வைப்பர். இதனை மீன்கொத்திப் பறவை தன் இரையெனக் கருதி எடுத்துச் சென்று அந்தணர்கள் அமைத்த வேள்வித்தூண்மீது வைக்கும். இந்நகரின் மாடங்களில் வசிக்கும் பெண்கள் பேரணிகலன்களை அணிந்திருப்பர். மணிகள் கோத்த மேகலையும் பொற்சிலம்பு அணிந்து பொன்னாலான கழற்சிக் காய்களைக்கொண்டு கழங்காடுவர். இத்தன்மையுடன் விளங்கிய நீர்ப்பெயற்று எனும் துறைமுகம் இன்று தன் பெயரை முற்றிலும் மறந்து மகாபலிபுரம் என்ற பெயருடன் தமிழகத்தின் சிறந்த சுற்றுலாத் தலங்களுள் ஒன்றாகத் திகழ்கிறது.

**மருங்கூர்ப் பட்டினம்**

கிழக்குக் கடற்கரையில் அமைந்த பாண்டிய நாட்டின் மற்றொரு துறைமுகம் மருங்கூர்ப்பட்டினம். இந்நகரத்தை 'மருங்கை' எனவும் அழைத்தனர். தற்போது இராமநாதபுரம் மாவட்டத்தில் திருவாடனை

வட்டத்திலுள்ள மருங்கூர் என்னும் சிற்றூரே சங்ககால மருங்கூர்ப்பட்டினமாக விளங்கியது. இந்நகரம் பாண்டியர்க்குரியதாகத் திகழ்ந்ததைப் “பசும்பூண் வழுதி மருங்கை” (நற். 358) இப்பாடலடி காட்டுகிறது. இந்நகரம் பெரிய பெரிய உப்பளங்களைக் கொண்டு இருந்தது. இப்பட்டினத்தின் கடைத்தொரு ஒளிவீசும் தன்மையுடன் செல்வம் படைத்ததாக இருந்தது. மருங்கூர்ப் பட்டினத்திற்கு மேற்கே ஊணூர் என்னும் ஊர் அமைந்திருந்தது.

> “ஊணூர் உம்பர்
> விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்
> இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து
> எல்லுமிழ் ஆவணம்”[80]

எனும் இப்பாடல் வாயிலாக மருங்கூர்ப் பட்டினமும் ஊணூரும் அருகருகே அமைந்திருந்ததை அறிய முடிகிறது. இப்பட்டினத்தில் காற்றால் அசையும் தோணியில் பிணிக்கப்பட்ட பாய்மரங்கள் வரிசையாக நிற்கும். இந்நகரத்தில் மகளிர் முற்றத்திலே பலியாக வைத்த வெண்சோற்றைக் காக்கைகள் உண்ணும். பின்னர் இங்குள்ள கடைத்தெருவில் குவித்து வைத்திருக்கும் இறால்களைக் கவர்ந்துகொண்டு துறைமுகத்தே நிற்கும் கப்பல்களில் அமர்ந்து உண்ணும். இவ்வாறு மருங்கூர்ப் பட்டினம் வெண்ணெல்லையும் மீன்களையும் மிகுதியாகக்கொண்டு வளமான நகரமாகத் திகழ்ந்தது.

### முதுவெள்ளிலை

பாண்டிய நாட்டின் மற்றொரு துறைமுகம் முதுவெள்ளிலை ஆகும். இதனைக் குறுநில மன்னரின் இருப்பு எனக் கூறுவார் நச்சினார்க்கினியர். “வெள்ளிலை எனும் சொல் வெற்றிலையைக் குறிப்பதோடு வெள்ளி மடந்தை என்ற நீண்ட செடிவகை ஒன்றையும் குறிக்கும் சொல்லாக உள்ளது. அவ்வகைக் செடிகள் அடர்ந்த பகுதியில் குடியிருப்புகளைக் கொண்ட ஊர் அப்பெயர் பெற்றிருக்கலாம். முது என்பது முன்ஒட்டாக இணைந்து முதுவெள்ளிலை என அமைந்தது போலும்”[81] என ஆர். ஆளவந்தார் கருதுகிறார்.

இங்கு உழவும் வாணிகமும் சிறப்புற்று விளங்கின. இந்நகரத்தில் நெற்கதிர் அறுப்போராலும் பறவைகள் மற்றும் கடலலைகளின் ஆரவாரமும் சுறாமீன்கள் தம்முள் சண்டையிட்டுக் கொள்வதாலும் பரதவர் மீன் வேட்டையாடித் திரும்புதலாலும் உப்பு விற்போர் செய்யும் ஆரவாரத்தாலும்

எந்நேரமும் திருவிழாப்போல ஆரவாரம் இருந்துகொண்டே இருக்கும். இது தென்னை மரங்களை வேலியாகக் கொண்டு புதுவருவாயுடன் திகழ்ந்தது. இதனை,

"நிரைதிமில் வேட்டுவர் கரைசேர் கம்பலை
இருங்கழிச் செருவின் வெள்ளுப்புப் பகர்நரொடு
ஒலியோவாக் கலியாணர்
முதுவெள்ளிலை மீக்கூறும்
வியல்மேவல் விழுச்செல்வம்"[82]

என்னும் மதுரைக்காஞ்சியின் இப்பாடலடிகள் காட்டுகின்றன.

### மேற்குக் கடற்கரைத் துறைமுகங்கள்

மேலைக்கடலான அரபிக்கடலின் கரையோரத்தே அமைந்த துறைமுகப் பட்டினங்கள் மேற்குக் கடற்கரைத் துறைமுகங்கள் ஆகும். சங்க காலத்தில் புகழ் பெற்ற துறைமுகங்களாகத் தொண்டி, நறவு, பந்தர், மாந்தை, முசிறி போன்றவை விளங்கின.

### தொண்டி

மேற்குக் கடற்கரையில் அமைந்த துறைமுகம் தொண்டி. இது சேரர்க்குரியதாக விளங்கியது. இதனைக் கிரேக்க அறிஞர்கள் திண்டிஸ் என அழைத்தனர். தாலமி இதன் இருப்பிடம் $116^{0}$. 0' கிழக்கு X $14^{0}$. 30' வடக்கு எனக் குறிப்பிடுகிறார். "திண்டிஸ் சேரபோத்ராவைச் சார்ந்ததாகும். முசிறிஸ் துறைமுகத்திலிருந்து ஐந்நூறு ஸ்டேடியா தொலைவில் இத்துறைமுகம் உள்ளது"[83] என பெரிப்ளுஸ் நூலாசிரியர் குறிப்பிடுகிறார். இங்கிருந்து மிளகு, ஏலம், தேங்காய் முதலிய பொருட்கள் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன எனப் பிளைனி கூறுகிறார்.

சேரர்களில் இரும்பொறை மரபினர்க்கு உரியதாகத் தொண்டி இருந்தது. பகைவனின் பற்களை வைத்திழைத்த வாயிற்கதவுகளை உடையதாக இருந்தது. இந்நகரம் பொறையனின் தொண்டி என்றே அழைக்கப்பட்டதை, "திண்தேர்ப் பொறையன் தொண்டி" (நற். 8, குறுந். 28, அகம், 60) என்னும் அடி காட்டுகிறது. இந்நகரம் இயற்கை வளம் நிறைந்த எழில் மிக்க அழகுடன் விளங்கியது. இதனை அம்மூவனார் ஐங்குறுநூற்றில் 'தொண்டிப்பத்து' வாயிலாகப் பாடிச் சிறப்பித்துள்ளார். இந்நகரத்தில் நெல்

மிகுதியாக விளையும் என்பதைத் "தொண்டி முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு" (குறுந். 210) எனும் அடி உணர்த்துகிறது. வெண்ணெல் விளையும் மருதம் மட்டுமல்லாது நெய்தல் நிலப்பகுதியையும் உடையதாக இருந்தது. இந்நகரத்து வயல்களில் நெற்பயிரிடையே நெய்தல் மலர்களும் மலர்ந்திருக்கும். இம்மலர்கள் நெற்கதிர் அறுக்கும் உழவர் தம் கூரிய அரிவாளால் அறுத்தும் வாடாத தன்மைத்தாய் நீரில் அலைமோதிக் கொண்டிருக்கும். இதனை,

"கல்லென் புள்ளின் கானலந் தொண்டி
நெல்லரி தொழுவர் கூர்வா ளுற்றெனப்
பல்லிதழ் தயங்கிய கூம்பா நெய்தல்
நீரலைத் தோற்றம்"[84]

என்னும் நற்றிணைப்பாடல் தெரிவிக்கிறது. இந்நெய்தல் மலர்கள் நெற்போரிலும் மலர்ந்திருக்கும். இந்நகரின் கடற்துறையில் இறால் மீன்களைத் தின்னக் கருதிக் கொக்குகள் காத்திருக்கும. இங்கு வாழும் மக்கள் மீன்பிடித் தொழில் செய்தனர்.

"சங்ககாலத் தொண்டி இன்று ஆலப்புழை என்ற பெயருடன் ஓடும் மாக்கலி அல்லது பெரிய உப்பு மயமான ஆற்றின் கரையில் இருந்தது. பளுவேறிய குலைகள் தாங்கிய தெங்குகளால் சூழப்பட்டது அத்துறை. பரந்தகன்ற நெல்வயல்கள், பசுங்குன்றுகள், பன்னிற மலர் விரித்துப் பளிங்குநீர் பரப்பிச் செல்லும் உப்பு மணக்கும் பேராறு ஆகியவற்றைக் கொண்டு தொண்டி விளங்கியது எனப் புறம் (127) வருணிக்கிறது. இவ்வருணனை கேரளத்தின் குவிலாண்டி நகரிலிருந்து ஐந்து கல் வடக்கேயுள்ள பள்ளிக்கரை என்ற ஊருக்கு முற்றிலும் பொருத்தமாக உள்ளதெனக் கூறுகிறார் வி. கனகசவை. மேலும் இவர் பள்ளிக்கரைக்குச் சிறிது தொலைவில் 'தொண்டிப்போயில்' எனும் சிற்றூர் உள்ளது. இது தொண்டிக்குச் செல்லும் வழி என்ற பொருளைக் குறிக்கின்றது"[85] என்கிறார். தொண்டிப்போயில் எனும் சிற்றூரே சங்க காலத் தொண்டி என்போரும் உள்ளனர். தொண்டிப்போயில் எனும் இவ்வூர் சங்க காலத் தொண்டியின் வாயிலாக அமைந்து பள்ளிக்கரை வரை விரிந்த நகரமாக அமைந்திருக்க வாய்ப்புண்டு.

நறவு

நறவு என்னும் துறைமுக நகரம் துளுநாட்டுப் பகுதியில் அமைந்திருந்தது. இது பதிற்றுப்பத்தில் 'துவ்வா நறவு', 'சூடா நறவு' என அழைக்கப்படுகிறது. இந்நகரத்தைச் சேரா்கள் வென்று தன்கீழ் கொண்டு வந்தனா். தாலமி இந்நகரத்தை 'நித்ரிஸ்' என்றும் இதன் இருப்பிடம் $115^0$. 30' கிழக்கு X $14^0$. 40' வடக்கு என்றும் குறிப்பிடுகிறாா். பெரிப்ளுஸ் இந்நகரத்தை 'நவ்ரா' எனும் பெயரில் குறிக்கிறது. மேலும் யவனா் கலங்களில் வரும்போது முதலில் காலடி வைக்கும் நகரம் நவ்ரா எனக் குறிப்பிடுகிறது. இதனைப் பிளைனி 'நித்திரியாஸ்' என்கிறாா். இன்றைய தென் கா்நாடகத்தை ஒட்டிய 'மங்களாபுரம்' சங்ககால நறவாக இருந்தது.

இந்நகரம் இனிய சுனைகளையும் அழகிய பக்க மலைகளையும் உயா்ந்த சிகரங்களையும் கொண்டு அதனைச் சூழ்ந்த பகுதிகளைக் காண வாய்ப்பாக உயா்ந்த மலைப்பகுதியையும் கொண்டிருந்தது. இந்நகரின் கடற்கரைப் பக்கத்தே கடலலைகள் மோதுவதால் எழும் துளிகளையும் குளிா் மேகங்களின் துளிகளையும் கலந்து வீசும் ஊதைக் காற்றால் இங்குள்ளோா் உடல் நடுங்கியபடி இருப்பா். இங்குப் பசியை நீக்கும் மரங்கள் நிறைந்திருக்கும்.

"பறாஅ விளையுள் அறாஅ யாணா்
தொடைமடி களைந்த சிலையுடை மறவா்
பொங்குபிசிா்ப் புணரி மங்குலொடு மயங்கி
துவ்வா நறவின் காய்இனத் தானே"[86]

என்னும் பதிற்றுப்பத்தின் பாடல் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் இந்நகரத்தே வாழ்ந்த மக்களோடு மகிழ்ந்து வாழ்ந்திருந்தான் என்பதை உணா்த்துகிறது.

பந்தா்

பந்தா் சேர நாட்டிலிருந்த துறைமுக நகரமாகும். "இந்நகரம் பொன்னானி வட்டத்தில் 'பந்தலூா்' என்ற பெயருடன் இருக்கிறது"[87] என ஔவை சு. துரைசாமிப்பிள்ளை கூறுகிறாா். இதனைப் பெரிப்ளுஸ் நூல் 'Balita' எனக் குறிப்பிடுகிறது. கொற்கை முத்தக்களைப் போலப் பந்தா் கடற்றுரையிலும் எடுக்கப்பட்ட முத்து பெரிதும் போற்றப்பட்டது. இந்நகரத்தில் விளைந்த முத்தினை,

"பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்"[88]

"பந்தர் பெயரிய பேர்இசை மூதூர்"[89]

என்ற பாடலடிகள் புகழ்கின்றன. பந்தரில் வாழும் மக்கள் இங்குக் கிடைக்கும் முத்தைத் தூய்மை செய்து மேன்மையுறச் செய்தனர். இம்முத்தைக் கொடுமணத்தில் செய்யப்படும் அணிகலன்களில் பொருத்துவர். இந்நகரம் பயன்படுத்த முடியாமல் அழியும் செல்வவளம் மிக்கதாக விளங்கியது. இதன் கடற்கரைப் பகுதியைக் கானலம் பெருந்துறை என்றும் அழைத்தனர். இப்பகுதியையும் அதனையடுத்த வயல் வெளிகள் மிக்க நன்னாட்டையும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆட்சி செய்து வந்தான். இத்துறைமுகத்தே அலைகள் ஒலிக்கும் கடல் வழியே வந்த பொருட்களைப் பாதுகாக்கும் பொருட்டுப் பண்டக சாலை அமைந்திருந்ததைப் பதிற்றுப்பத்து (55) காட்டுகிறது.

**மாந்தை**

மேற்குக் கடற்கரையில் அமைந்த சோழநாட்டுத் துறைமுகங்களுள் ஒன்று மாந்தை. இது மரந்தை என்றும் வழங்கப்பட்டது. இது கடற்துறைப் பட்டினமாதலால் 'கடல்கெழு மாந்தை', 'துறைகெழு மாந்தை' எனக் குறிக்கப்பட்டது.

இந்நகரத்தின் பொங்கியெழுகின்ற கடல் அலைகள் மோதுகின்ற கடற்கரையில் நண்டுகள் தம்முன் மாறுபட்டு நிற்கும். குருகின் தொகுதிகள் ஆரவாரித்தபடி இருக்கும். நாரைகள் கடலலை மோதுவதால் நிலைபெயர்ந்து வேறிடம் செல்லும் (குறுந். 166). இங்குச் சேற்றிலுள்ள வள்ளைக் கொடிகள் பின்னிக் காணப்படும். நெற்பயிர்கள் வளமான இதழ்களைக்கொண்டு கதிர் வளைந்து விரிந்தாடியபடி இருக்கும். இதன்மேல் இறால்மீன் பாய்ந்து விளையாடும். குதிரைகளை மிகுதியாக உடைய குட்டுவனின் இந்நகரம் அழகு மிக்கதாய் விளங்கியது.

மாந்தைத் துறைமுகத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் திரையாகக் கொணர்ந்த பொன்னால் செய்த பாவை, மணிகள், வைரம் முதலான பெருஞ்செல்வத்தை ஆம்பல் கணக்கில் குவித்துப் புதைத்து

வைத்தான். இதனை எடுக்காமல் போகவே நிலத்தில் மறைந்தது. எனவே இந்நிதியத்தை "நிலம் தினத் துறந்த நிதியம்' என மாமூலனார் பாடுகிறார்.

"வலம்படு முரசிற் சேரலாதன்
முந்நீர் ஓட்டிக் கடம்பறுத் திமயத்து
முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து
நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்
பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்
பொன்செய் பாவை வயிரமொடு ஆம்பல்
ஒன்றுவாய் நிரையக் குவைஇ அன்றவண்
நிலந்தினத் துறந்த நிதியத்து"[90]

என்னும் பாடல் இதனை விவரிக்கிறது.

## முசிறி

சேரநாட்டின் சிறப்பு வாய்ந்த உலகப் புகழ் பெற்ற துறைமுகமாக முசிறி விளங்கியது. இதனை முசுறி, முயிரிக்கோடு என அழைத்தனர். வால்மீகி இராமாயணத்தில் முரசிபதனம் எனக் கூறப்பட்டுள்ளது. சங்க காலத்திற்குப் பிறகு மாகோதைப் பட்டினம் என்று வழங்கப்பட்டு தற்போது 'கொடுங்கல்லூர்' (Kodungallur)எனும் பெயர் பெற்றுள்ளது. இத்துறைமுகத்தை யவனர்கள் 'முசிறிஸ்' என அழைத்தனர். தாலமி 'முசிறிஸ்' (Muziris) என அழைத்தார். தாலமி முசிறியின் இருப்பிடம் $117^0$. 0' கிழக்கு X $14^0$. 0' வடக்கு எனக் குறிப்பிடுகிறார்.

முசிறித் துறைமுகம் சுள்ளி என்னும் பேரியாற்றுக் கரையில் கடல்வாய் அருகே அமைந்திருந்தது. யவனர்கள் இப்பேரியாற்றின் வெண்நுரை கலங்க, தங்கள் மரக்கலங்களைக் கொண்டுவந்து இத்துறைமுகத்தே நிறுத்துவர். இவர்கள் பொன்னைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு அதற்கு மாற்றாக மிளகை எடுத்துச் செல்வர். இதனை,

"சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை கலங்க
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி"[91]

எனும் பாடலில் எருக்காட்டுத் தாயங்கண்ணனார் குறிப்பிடுகிறார். யவனர்கள் மிளகை அவலோடு விரும்பி வாங்கினமையால் மிளகுக்கு 'யவனப்பிரியா' எனும் பெயர் உண்டாயிற்று. இந்நகரத்தைப் பாண்டியன் முற்றுகையிட்டு வெற்றி பெற்றான் என அகம் (57) பாடுகிறது.

முசிறியில் வாழும் மக்கள் மீனை விற்று அதற்கு மாற்றாக நெற்குவியலைப் பெறுவர். இந்நகரத்தே உள்ள வீட்டின் கூரைகளையும் தோணிகளின் உயர்ந்த அம்பிகளையும் பிரித்தறிய முடியாத அளவுக்கு வரிசையாக நிறைந்திருக்கும். இங்கு மிளகு மூட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். இத்துறைமுகம் ஆழமில்லாத பகுதியாக இருந்ததால் யவனர்களின் பெரிய கப்பல்கள் கரைக்கு வர முடியாமல் கடலிலேயே நிற்கும். எனவே தோணிகளில் மிளகை ஏற்றிக்கொண்டுபோய்க் கடலில் ஏற்றிவிட்டு பொன்னைக் கொண்டு வருவர் என,

"மீனொடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் மனைமறுக்குந்து
மனைக்குவைஇய கறிமூடையாற்
கலிச்சும்மைய கரைகலக்குந்து
கலந்தந்த பொற்பரிசம்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
………. …….. …….. …………
முழங்கு கடல் முழவின் முசிறி"[92]

என்னும் இப்புறப்பாடலால் பரணர் விவரிக்கிறார்.

இவ்வாறு முசிறித் துறைமுகத்தில் யவனர் வணிகம் செய்ததை 'முசிறி அலெக்சாந்திரியா வணிக உடன்படிக்கை' உறுதி செய்கிறது. இவ்வுடன்படிக்கை கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்றும் இந்த ஒரு சரக்குப் பரிமாற்றத்தின் மதிப்பு 68,000 ரோமானிய, எகிப்து தங்கக் காசுகளுக்குச் சமம் என்றும் அறிஞர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர். "முசிறி துறைமுகத்தின் பெரும்பகுதி கி.பி. 79ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 23, 24 ஆம் நாள்களில் ஏற்பட்ட பெருங் கடல்கோளால் அழிவுற்றது எனப் பிளைனியின் (கி.பி. 23 – 79) வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது"[93].

“கி.பி. 226 அளவில் எழுதப்பட்டது எனப்படும் பியூடிங்கர் தொகைநூல் முசிறியில் யவனர் இருக்கை ஒன்று இருந்ததெனவும் அங்கு அகஸ்டசுக்குக் கோயில் இருந்ததெனவும் அதனை யவனப்படை இரண்டு காத்து வந்தது எனவும் கூறுகிறது. இதைப் பற்றிய குறிப்புகள் சங்கப் பாடல்களில் இல்லை. எனவே அகஸ்டஸ் கோயில் சங்க காலத்துக்குப்பின் கட்டப்பட்டதாக இருக்கக் கூடும். இத்துறைமுகப் பகுதி கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கால் மேலும் அழிந்தது.

மேற்கூறிய கிழக்கு, மேற்குக் கடற்கரைத் துறைமுகங்கள் மட்டுமல்லாது பொதவுகே (அரிக்கமேடு), நாகப்பட்டினம், காயல்பட்டினம், மங்களூர் போன்ற துறைமுகங்களும் சங்க காலத்தில் இருந்துள்ளன. இவை சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படவில்லை. வெளிநாட்டு அறிஞர்களின் குறிப்புகளாலும் அகழ்வாய்வுகளின் மூலமாகவும் கண்டறியப்பட்டுள்ளன.

# தொகுப்புரை

சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள நகரங்கள் ஆற்றங்கரையோரங்களிலும் மருத நிலப்பகுதிகளிலும் அமைந்து செழிப்புடன் திகழ்ந்தன. எனவே இந்நகரங்கள் தலைவியின் அழகை வருணிக்கும்போது உவமைகளாகப் பாடப்பட்டுள்ளன. நகரங்களின் முதன்மைத் தொழில்களாக வேளாண்மையும் வாணிகமும் நடைபெற்றன.

நாட்டின் நிர்வாக மையமாகத் தலைநகரங்கள் திகழ்ந்தன. இவை முழுப் பாதுகாப்பு வசதிகளுடன் இருந்தன. இதனைச் சுற்றி மதில், அகழி, காவற்காடு போன்றவை அமைக்கப்பட்டிருந்தன.

சங்கப் புலவர்கள் நகரங்களைக் குறிப்பிடும்போது அங்கு நடைபெற்ற வரலாற்று நிகழ்வுகளையும் சுட்டிச் செல்கின்றனர். இவை வரலாற்றை அறிந்துகொள்ளும் வாயிலாகத் திகழ்கின்றன.

பழந்தமிழர்கள் நகரமைப்புக் கலைகளில் சிறந்து விளங்கினர் என்பதைக் காவிரிப்பூம்பட்டினம், காஞ்சி, மதுரை போன்ற நகரங்களின் நகரமைப்பு வாயிலாக அறிய முடிகிறது. மேலும் இந்நகரங்களிலிருந்த அங்காடித்தெரு வாணிகத்தையும் சோலைகள், மரங்கள் சூழ்ந்த நகரப் பகுதிகள் ஆகியவை இயற்கைக்குக் கொடுத்த இன்றியமையாமையையும் உணர்த்துகின்றன.

பண்டைய தமிழர்கள் உலக அளவில் வாணிகத்தில் ஈடுபட்டனர் என்பதைத் துறைமுக நகரங்கள் உணர்த்துகின்றன. இத்துறைமுகங்கள் கலங்கரை விளக்கம், பண்டக சாலை, சுங்கச் சாவடி போன்றவற்றைக் கொண்டு விளங்கின.

சங்க காலத்தில் பெரிய நகரங்களாக விளங்கியவை தற்போது சிற்றூர்களாக உள்ளன. சில நகரங்கள் இன்றும் நகரப் பகுதிகளாகவே விளங்குகின்றன. ஒருசில நகரங்கள் மறைந்துவிட்டன. அவை இருந்த சுவடே தெரியாமல் உள்ளன. இவை அகழாய்வுமூலம் கண்டறியப்பட்டுள்ளன.

நகரங்களின் பண்டைய பெயர் திரிந்தும் வேறுபட்டும் வழங்கப்பட்டு வருகின்றன. ஒருசில பெயர்கள் திரியாது தன் பழமையைத் தக்க வைத்துள்ளன.

உலக அளவில் பழந்தமிழகத்து நகரங்கள் புகழ்பெற்று விளங்கியதை மேனாட்டு அறிஞர்களின் வரலாற்றுக் குறிப்புகள் காட்டுகின்றன.

## குறிப்புகள்

1. நா. பார்த்தசாரதி, பழந்தமிழர் கட்டிடக்கலையும் நகரமைப்பும், ப. 143
2. நெடுநல். 76 -79
3. ஆர், ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 46
4. புறம். 385
5. நற். 141
6. புறம். 202
7. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 313
8. அகம். 266
9. மேலது. 266
10. சிறுபாண். 186 – 195
11. மா. இராசமாணிக்கனார், மேலது, பக். 346 – 347
12. ஆர், ஆளவந்தார், மேலது. ப. 73
13. முருகு. 175 – 176
14. பதிற். பதிகம், 4
15. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பரணர், பக். 57 – 58
16. க. இராஜன், கொடுமணல் அகழாய்வுகள், ப. 3
17. பதிற். 67
18. மேலது. 74
19. புறம். 136
20. அகம். 149
21. முருகு. 71 – 77
22. மயிலை சீனி. வேங்கடசாமி, சிறுபாணன் சென்ற வழி,
23. சிறுபாண். 166 – 172
24. புறம். 379
25. மா. இராசமாணிக்கனார், மேலது, ப. 352
26. கே. பகவதி, இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், II, ப. 243
27. பதிற். 44
28. புறம். 351

29. அகம். 199

30. நா. பார்த்தசாரதி, மேலது, ப. 152

31. தொல். பொருள். 983

32. அகம். 196

33. கே. பகவதி, இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், II, ப. 20

34. அகம். 4

35. மேலது. 122

36. பத்மஜா ரமேஷ், வி.பி. புருஷோத்தமன், சங்ககால மன்னர்களின் காலநிலை, II, ப. 68

37. பட்டினப். 285 – 292

38. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், பக். 95 – 96

39. பெரும்பாண். 403 – 411

40. ஆர். ஆளவந்தார், மேலது, ப. 109

41. சிறுபாண். 199 – 201

42. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, பக். 347 – 348

43. அகம். 35

44. புறம். 99

45. மா. இராசமாணிக்கனார், நன்னனது மலைநாடு (கட்டுரை), ரா.பி. சேதுப்பிள்ளை வெள்ளிவிழா மலர்

46. மலைபடு. 478 – 487

47. புறம். 390

48. பதிற். பதிகம், 8

49. புறம். 200

50. மயிலை சீனி. வேங்கடசாமி, துளு நாட்டு வரலாறு, ப. 6

51. வி. கனகசபை, மொ.பெ. கா. அப்பாதுரையார், 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், ப. 172

52. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, சேர மன்னர் வரலாறு, ப. 28

53. அகம். 258

54. மேலது. 208

55. புறம். 347
56. அகம். 296
57. பரி. திரட்டு, 2
58. கலி. 67
59. சிறுபாண். 66 – 67
60. வி.எஸ்.வி. இராகவன், தாலமி, பக். 42, 309
61. ஔவை, சு. துரைசாமிப்பிள்ளை, சேர மன்னர் வரலாறு, ப. 39
62. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, பக். 356 – 357
63. சிறுபாண். 146 – 153
64. மேலது. 154 – 159
65. மயிலை சீனி. வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப. 52
66. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு,
67. தி. இந்து 12.10. 2013
68. பட்டினப். 97. 98
69. புறம். 90
70. பட்டினப். 185 – 193
71. அகம். 152
72. வி.எஸ்.வி. இராகவன், தாலமி, பக். 64 – 65
73. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 382
74. அகம். 130
75. மேலது. ப. 350
76. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 385
77. அகம். 6
78. பத்துப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை, கழக வெளியீடு, அடிக்குறிப்பு
79. பெரும்பாண். 319 – 321
80. அகம். 227
81. ஆர், ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 171
82. மதுரைக். 116 – 120
83. வி.எஸ்.வி. இராகவன், பெரிப்ளுஸ், ப. 200

84. நற். 195

85. வி. கனகசபை, மொ.பெ. கா. அப்பாதுரையார், 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், பக். 38 – 39

86. பதிற். 60

87. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, சேர மன்னர் வரலாறு, ப. 140

88. பதிற். 74

89. மேலது. 67

90. அகம். 127

91. மேலது. 149

92. புறம். 343

93. வி.எஸ்.வி. இராகவன், தாலமி, ப. 49

# இயல் மூன்று

## சங்ககால ஊர்கள்

மனித இனம் ஓரிடத்தில் நிலைத்து வாழத் தொடங்கிய காலத்திலேயே இடப்பெயர்களும் தோற்றுவிக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது அறிஞர்களின் கருத்தாக உள்ளது. பண்டைய வரலாற்றை அறிய மன்னர்களின் வாழ்க்கை நிகழ்வுகள், பண்பாடு, கலாச்சாரம் போன்று மக்கள் வாழ்ந்த ஊர்ப்பெயர்களும் முக்கிய ஆதாரங்களாகின்றன. அவ்வகையில் சங்க இலக்கியங்கள் பழங்காலத் தமிழரின் வாழ்க்கை, பண்பாடு, அரசியல், சமூகம், பொருளாதாரச் செய்திகளை மட்டுமல்லாது சங்க காலத்தில் நடைபெற்ற நிகழ்வுகளையும் ஊர்களையும் பதிவு செய்துள்ளன. இதனைப் புறப்பாடல்களில் மட்டுமல்லாது அகப்பாடல்களிலும் காணமுடிகிறது. அகப்பாடல்களில் தலைவியை வர்ணிக்கும் இடங்களிலும் தலைவியின் அழகுக்கு உவமையாகக் கூறும் இடங்களிலும் ஊர்ப்பெயர்கள் எடுத்தாளப்பட்டுள்ளன.

மக்கள் தங்களை அடையாளப்படுத்த ஊர்ப்பெயரைப் பயன்படுத்துகின்றனர். இது பழங்காலம் முதல் வழக்கிலிருந்துள்ளது என்பது புலவர்கள் தம் பெயரின் முன்னால் ஊர்ப்பெயரை வைத்துக்கொண்டதிலிருந்து உணர முடிகிறது. இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், பிறமொழி இலக்கியங்கள், புதைபொருள் அகழ்வாராய்ச்சி முடிவுகளைப் போன்று இடப்பெயர், ஊர்ப்பெயர் ஆய்வுகளும் வரலாற்றை அறிய உதவும் சான்றாதாரங்களாக விளங்குகின்றன. எங்கு வரலாறு மௌனம் சாதிக்கத் தொடங்குகிறதோ அங்கே இடப்பெயர்களும் ஊர்ப்பெயர்களும் தம் வாய்திறந்து பேசத் தொடங்கும் என அறிஞர்கள் கருத்துரைக்கின்றனர். அவ்வகையில் இன்றும் சில ஊர்கள் தன் பழமையைப் பறைசாற்றிக் கொண்டுள்ளதைக் காணமுடிகிறது. இவ்வியல் சங்கப் புலவர்கள் தாம் பாடிய பாடல்களில் பதிவு செய்த ஊர்களை ஆராய்வதாக அமைகிறது.

## நில அடிப்படையில் ஊர்ப்பெயர்கள்

"சங்கப் பாடல்களில் ஊர்ப்பெயர்களின் பொருள் விளங்குமாறு நேர்முகமாகவும் மறைமுகமாகவும் புலவர்கள் பாடியுள்ளனர்"[1]. தொல்காப்பியம் மக்கள் வாழும் இடத்தை ஊர் என்றே குறித்துள்ளது. இதனை,

"ஏமப் பேரூர்" (அகத். 37)

"ஊரது சார்வும்" (புறத். 43)

"ஊர்க்கொலை" (புறத். 3)

"ஊர்ச்செரு" (புறத். 11)

"ஊரொடு தோற்றம்" (புறத். 25)

"ஊரும் அயலும்" (செய். 183)

"ஊரும் பெயரும்" (மரபு. 75)

எனும் நூற்பாக்களால் அறியமுடிகின்றது. சங்க கால மக்கள் தாம் வாழும் நிலப்பகுதிகளுக்கு ஏற்ப ஊர்களுக்குப் பெயரிட்டனர்.

குறிஞ்சி – சிறுகுடி, குறிச்சி

முல்லை – பாடி, சேரி, பள்ளி

மருதம் - ஊர்

நெய்தல் - பட்டினம், பாக்கம்

பாலை – பறந்தலை

எனும் இம்முறையில் சங்ககால ஊர்ப்பெயர்கள் அமைந்திருந்தன. ஊருக்கு வழங்கும் பெயர்களாகச் சேந்தன் திவாகரம்,

"பாக்கம் பட்டினம் பதி நகர் சும்மை
பக்கம் சேரி புரம் முட்டம் பூண்டி
அகரம் குடியே குறிச்சி கோசரம்
அகலுள் நொச்சி இருக்கை வேலி

குப்பம் பாடி குறும்பு பாழி

சிறுகுடி தண்ணடை உறையுள் எயிலொடு

வாழ்க்கை யுட்படுத் திருபத்தேழும்

நாடிலூரென நவின்றிசினோரே”

எனக் குறிப்பிடுகிறது.

**ஊர்ப்பெயர் அமைப்பு முறை**

“ஊர்ப்பெயரமைப்பு முறைகள் அவ்வம் மக்களின் வாழிடம், வாழ்க்கைமுறை போன்ற பண்பாட்டுக் கூறுகளைப் பொறுத்து அமையும்”[2] என கி. நாச்சிமுத்து கூறுகிறார். சங்க இலக்கியங்களில் மொத்தம் 243 ஊர்கள் இடம்பெற்றுள்ளன. “ஊர்ப் பெயர்கள் அமைப்பு முறையை நோக்கும்போது அவை இருவேறு தனிக்கூறுகளைக் கொண்டுள்ளன. ஊர்ப்பெயரின் ஈற்றில் விகுதியாக அமைந்திருக்கும் கூறு பொதுக்கூறு என்றும் அவ்வூர்களின் இடையில் வேறுபாடு தோன்றுவதற்காக முற்பகுதியில் சேர்க்கப்பட்ட கூறு சிறப்புக் கூறு என்றும் குறிப்பிடப்படும். ஆகவே பொதுக்கூறு, சிறப்புக்கூறு எனும் இரு தனிக்கூறுகளைக் கொண்டதாக ஊர்ப்பெயர்கள் அமைந்தன”[3] என ஆர். ஆளவந்தார் கூறுகிறார். எனினும் பொதுக்கூறு, சிறப்புக்கூறு இல்லாத ஒரே சொல்லாக அமைந்த பெயர்களே முதலில் தோற்றம் பெற்றிருக்கக்கூடும் என்ற கருத்தும் நிலவுகிறது.

**பொதுக்கூறு**

சங்க இலக்கியங்களில் வரும் ஊர்ப்பெயர்களில் நாற்பத்து மூன்று விதமான பொதுக்கூறுகள் இடம்பெறுகின்றன. அவை; அகம், அம்பலம், ஆறு, இல், ஊர், காடு, காரம், கானம், கிரியம், குடி, குன்றம், குன்று, கூடல், கூற்றம், கை, கோட்டம், கோடு, சேரி, தீவம், தீவு, துறை, தேசம், நகர், நாடு, நியமம், பட்டினம், பள்ளி, பாக்கம், பாடி, புரம், பேடு, பேர், பேரி, மங்கலம், மலம், மலை, மாடம், முற்றம், வயம், வாய், வாயில், வெளி, வெண்ணிலை ஆகியன. இத்தகைய பொதுக்கூற்றில் அமைந்த ஊர்ப்பெயர்கள், இயற்கை அமைப்பு, செயற்கை அமைப்பு, குடியிருப்பு அமைப்பு எனும் வகையில் அமைந்துள்ளன. இப்பொதுக்கூறுகளைக் காணும்போது இயற்கைப்

பொருட்கள், குடியிருப்பு மிகுதியாகவும் பிற குறைவாகவும் அமைகின்ற நிலையைக் காணமுடிகிறது.

### சிறப்புக் கூறு

ஊர்ப்பெயர் அமைப்பில் சங்ககால ஊர்களில் முன்ஒட்டாக அமையும் சிறப்புக் கூறுகள் 102 இடம்பெறுகின்றன. அதவம், அரி, அரிமணம், அலை, அழுந்து, அள்ளூ, ஆ, ஆடு, ஆய், ஆர், ஆலம், இரத்தினம், இருந்தை, இடை, இலவந்திகை, ஈரம், உகாய், உம்பல், உறை, ஊன், எயி, எருக்காடு, கச்சி, கடம்பு, கடியல், கயம், கரு, கரும்பு, கள்ளி, குணக்கு, குரா, குழு, குளம், குறும்பு, குன்று, கூடல், கொடுகு, கொல், கொல்லி, கொண், கொன், கோ, கோடு, கோவல், கோழி, கோன், சாலி, சாறு, சிக்கல், சித்திரம், சிரா, சிறு, சிறுமை, சிறை, செம்மை, செல், தகடு, துறை, தேன், நான், நான்மாடம், நீடு, நெய்தல், நொச்சி, பாரம், பாமுள், பாழி, புலி, மரு, மா, மாடல், மால், மிழலை, முகையல், முத்து, முரஞ்சி, முள், முனைமை, வயல், வாகை, வாரணம், விரிச்சி, வெண்மணி, வெள்ளை, வேம்பு, வேல், வேள் ஆகிய சிறப்புக் கூறுகளைக் காணமுடிகிறது. இதனை விளக்கப்பெயரடை, ஆட்பெயரடை என்றும் விளக்கலாம்.

இவ்வகையில் அமைந்த சங்கப் பாடல்களில் குறிப்பிடப்படும் ஊர்களின் பண்டைய சிறப்புகள் வரலாற்று முக்கியத்துவம், பெயர்த்திரிபுகள், இன்றைய நிலை ஆகியவற்றை இவ்வியல் ஆராய்கிறது.

### அகப்பா

அகப்பா மலைமீது இருந்த ஊர். இதன் தலைவனாக வண்டன் என்பவன் திகழ்ந்தான். இது மிக வலிமையான கோட்டையையும் இக்கோட்டைக்குள் நுழையமுடியாத உயர்ந்த நிலைவாயிலையும் கொண்டிருந்தது. வாயிற் கதவைச் சாத்தித் தாழிடுவதற்காக வில்விசையும் கணைய மரமும் அமைக்கப்பட்டிருந்தது. ஆழ்ந்த அகழியையும் நெடிய மதிலையும் கொண்டு விளங்கியது. இவ்வரணை நால்வகைப்படைகொண்டு சென்று பல்யானைச் செல்கெழு குட்டுவன் கைப்பற்றினான். (பதிற். 22) இங்கு வாழ்ந்த மக்களைத் தன்பக்கம் கொணர்ந்து அகப்பாவைத் தீயிட்டு அழித்தான். இதனை,

"அகப்பா எறிந்து பகல்தீ வேட்டு"[4]

எனும் பாடலடி காட்டுகிறது. இச்சேரனுக்குரிய அகப்பாவைத் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் வென்று மீண்டும் தீக்கிரையாக்கினான்.

"குட்டுவன்

அகப்பா அழிய நூறிச் செம்பியன்

பகல் தீ வேட்ட"[5]

என்னும் நற்றிணைப் பாடல் இதனை உணர்த்துகிறது. பாகுடி என்பது ஊரின் பெயர். பெருமலைகளுக்கு இடையே இருந்ததால் அகப்பாக்குடி எனப்பட்டு அகப்பா என மருவியும் வழங்கப்பட்டது"[6] என்பர்.

**அட்டவாயில்**

போரிட்டு அழிக்கப்பட்ட வாயில் - அட்ட வாயில். அட்டு – ஆடு – ஆடனை என மருவித் தற்போது திருவாடனை எனும் ஊராகத் திகழ்கிறது. இவ்வூர் இராமநாதபுரம் மாவட்டத்தில் அமைந்துள்ளது. சங்க காலத்தில் நீண்ட கொடிகள் அசையும் தன்மையதாய் அட்டவாயில் விளங்கியது. இவ்வூரில் செல்வர்களின் விரைந்து செல்லும் தேரானது சென்றபடியே இருக்கும். இவ்வூர் நீண்ட கதிர்களையுடைய வயல்களைக்கொண்டு அழகுடையதாக விளங்கும். இதனை,

"செல்வர்

கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்

நெடுங்கொடி நுடங்கும் அட்டவாயில்"[7]

எனும் அகப்பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

**அதலைக்குன்றம்**

அதலைக்குன்றம் எனும் ஊருக்கு ஈகை வழங்கும் பண்பு கொண்ட ஒருவன் தலைவனாக விளங்கினான். இவன் பெயர் என்ன என்பதும் இவ்வூர் எப்பகுதியில் இருந்தது என்பதும் அறிய முடியவில்லை. அதலை எனும் குன்றத்திலுள்ள ஆழமான சுனைகளில் குவளை மலர்கள் நெருங்கிப்

பூத்திருக்கும். இக்குவளை மலர்களுடன் காட்டுமல்லிகைப் பூக்களையும் சேர்த்துக்கட்டி வைத்துக் கொள்வர் இவ்வூர்ப் பெண்கள். இதனை,

"பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்
அதலைக் குன்றத்து அகல்வாய்க் குண்டுசுனைக்
குவளையொடு பொதிந்த குளவிநாறு"[8]

எனும் பாடலில் மோசிகீரனார் குறிப்பிடுகிறார்.

**அரிமணவாயில்**

அரி – கள்; உறப்பு – செறிவு; கள்ளின் மணம் செறிந்த ஊர் அரிமணவாயில் உறத்தூர் என அமைந்திருக்கலாம் என்பர். ஆனால் அரிமணவாயிலும் உறத்தூரும் இருவேறு ஊர்களாகும். அரிமணவாயில் இன்றைய புதுக்கோட்டைக்கு அருகில் அரிமளம் எனும் ஊராகத் திகழ்கிறது. நீடூரின் தலைவனான எவ்வி தனது பகைவர்களுடன் போரிட்டு வென்ற இடம் அரிமணவாயில். இங்குத் தன் வீரர்களுக்குக் கள்ளுடன் பெருஞ்சோற்றைப் பகல் பொழுதில் அளித்தான். அச்சமயத்தில் எழுந்த ஆரவாரம் வானை முட்டியது எனப் பரணர் கூறுவதை,

"நீடூர் கிழவோன்
வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பெருந்தலர்
அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண்
கள்ளுடைப் பெருஞ்சோற்று எல்லுமிழ்"[9]

என்னும் பாடல் காட்டுகிறது.

**அழும்பில்**

அழும்பில் புதுக்கோட்டை மாவட்டத்தில் அம்புக்கோயில் என வழங்குகிறது. "இவ்வூரில் எழுந்த சிவன் கோயில் அழும்பிற்கோயில் என வழங்கலாயிற்று. அழும்பிற்கோயில் அம்புக்கோயில் என மருவிற்று. நாளடைவில் கோயில் பெயரே ஊர்ப்பெயராயிற்று"[10] என்பார் ரா.பி.

சேதுப்பிள்ளை. இங்குள்ள கல்வெட்டு "இராஜராஜ வளநாட்டுப் பன்றியூர் நாட்டு அழும்பில்" (P.S. INS. 458) எனக் குறிக்கிறது. அழும்பில் எனும் ஊர் மானவிறல்வேள் என்ற குறுநில மன்னனுக்குரியதாக விளங்கியதை மதுரைக்காஞ்சி (343 – 345) கூறுகிறது. அவனுக்குப் பிறகு பெரும்பூண் சென்னிக்கு உரித்தாயிற்று. இதனை, "பிணையலங் கண்ணி பெரும்பூட் சென்னி அழும்பில்" (அகம். 44) என வரும் பரிபாடலடியால் அறியலாம். மானவிறல் வேளிடமிருந்து பெரும்பூண் சென்னி கைப்பற்றினான் எனவும் கருதலாம். இந்த ஊர் செல்வ வளமுடையதாகவும் நீங்காத புது வருவாயினை உடையதாகவும் விளங்கியது.

இவ்வூர் குளிர்ந்த நீர்நிலையைக் கொண்டிருந்தது. இதில் செங்குரலிக் கொடி நிறைந்து இருக்கும். இங்கு நீர்நாய் வாளைமீனை உண்ணும். ஆனால் முதலைகளோ உணவு பெறாது அங்குள்ள பாம்புகளை வாளைமீன் என மயங்கி உண்ணும் தன்மையதாய் இருக்கும்"[11].

**அள்ளூர்**

அள்ளூர் சிவகங்கைப் பகுதியில் அமைந்துள்ளது. நெற்குவியல்களுடன் விளங்கும் ஊராக விளங்கியது. இதனை "செழியன் பிண்ட நெல்லின் அள்ளூர்" என அகம். 46 பாடுகிறது. இவ்வூர் செழியனுக்கு உரியதாக இருந்தது. தஞ்சையிலுள்ள திருவாலங்காட்டிற்கு அள்ளூர் என்னும் பெயரும் உண்டு என அவ்வூர்க் கல்வெட்டு (A.R. NO. 79 of 1926) கூறுகிறது. இது மட்டுமல்லாது திருநெல்வேலிக் கோயில் கல்வெட்டிலும் அள்ளூர் எனும் ஊர்ப்பெயர் இடம்பெற்றுள்ளது. எனவே சங்க காலத்தில் அள்ளூர் எனும் பெயரில் பல ஊர்கள் இருந்திருப்பதை ஊகிக்க முடிகிறது. இவ்வூரில் பிறந்த புலவராதலால் அள்ளூர் நன்முல்லையார் எனப் பெயர் பெற்றார்.

**ஆமூர்**

சங்க இலக்கியங்கள் வாயிலாக மூன்று ஆமூர் இருந்ததை அறிய முடிகிறது. இம்மூன்று ஆமூர்களில் ஒன்று ஒய்மாநாட்டில் நகரமாகத் திகழ்ந்தது. சோழ நாட்டில் ஒரு ஆமூர் உள்ளது. இது முக்காவல் நாட்டு ஆமூர் என வழங்கி வந்தது. இவ்வூரில் இனிய கள் மிகுதியாகக்

கிடைத்தது. இங்குப் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி தங்கியிருந்தார். இரவுக் காலங்களிலும் விளக்கின் ஒளியால் இருளை அறியாததாக ஆமூர் இருந்ததை "வெல்போர்ச் சோழ ராமூரன்ன" என வரும் ஐங்குறுநூறு ( 56) பாடலடி காட்டுகிறது. இவ்வூர் திருச்சி – நாமக்கல் சாலையில் அமைந்துள்ளது.

மற்றொரு ஆமூர் கொங்கு நாட்டகத்தே குறும்பொறை எனும் மலைக்குக் கிழக்கில் அமைந்திருந்தது. இதனைக் கொடுமுடி என்பான் காத்து வந்தான். இவ்வூர் நெடிய மதில் சூழ்ந்து நெடுந்தூரம்வரை தெரியும் தன்மையது என ஆமூர்க் கவுதமன் சாதேவனார் குறிப்பிடுவதை,

"கொடுமுடி காக்கும் குரூஉக்கண் நெடுமதில்
சேண் விளங்கு சிறப்பின் ஆமூர்"[12]

எனும் பாடலால் அறியலாம்.

**ஆய்குடி**

ஆய் குலத் தலைவனான ஆய் அண்டிரனின் ஊர் ஆய்குடியாகும். இவ்வூர் பொதிய மலைப்பகுதியில் அமைந்திருந்தது. இன்றும் அப்பகுதியில் ஆய்குடி எனும் பெயரில் ஊர் உண்டு. இந்த ஆய்குடி இமயத்திற்கு ஒப்பானது என்றும் தெற்கில் இவ்வூர் இல்லையெனில் உலகம் பிறழ்ந்து விடும் என்றும் ஏணிச்சேரி முடமோசியார் புகழ்ந்துரைக்கிறார்.

"தென்திசை ஆய்குடி இன்றாயின்
பிறழ்வது மன்னோ இம்மலர்தலை உலகே"[13]

என்னும் இப்பாடல் இதனை உணர்த்துகிறது. "ஆயர்குடி என்பதே ஆய்குடி என மருவியிருக்கலாம் என்பர்"[14].

**ஆர்க்காடு**

சங்க காலத்தில் ஆர்க்காடாக விளங்கிய பகுதி பாலாற்றங்கரையருகே அமைந்துள்ளது. இதனைத் தாலமி 'ஆர்கடா' என்று வழங்கினார். "சோழ மன்னனுக்குரிய ஆத்தியைக் குறிக்கும் ஆர் என்ற மரத்தால் பெயர் பெற்ற

ஊர் என்றும் ஆத்தி மரம் நிறைந்த பகுதி ஆர்க்காடு எனப் பெயர் பெற்றது"[15] என்றும் ஆர். ஆளவந்தார் கூறுகிறார். சங்க காலத்தில் ஆர்க்காட்டின் தலைவனாக அழிசியும் பின்னர் அவன் மகன் சேந்தனும் விளங்கினர். (குறுந். 258, நற். 190). சேந்தனிடமிருந்து சோழர்கள் (தித்தன்) கைப்பற்றினர். இவ்வூரைச் சோழர் வென்ற பிறகும் ஆர்க்காடு அழிசியம் பெருங்காடு என்றே அழைக்கப்பட்டது. இதனை, "வெல்வோர்ச் சோழர் அழிசியம் பெருங்காட்டு" (நற். 87) எனும் பாடலடியால் அறியலாம். ஆர்க்காட்டு அழிசியின் அழிவிலே சோழப் பேரரசு தோற்றம் பெற்றது என்பார் சிவராசப்பிள்ளை.

இங்கு நெற்கதிரின் இடையே வண்டுகள் மொய்க்கும்படி நெய்தல் மலர்கள் மலர்ந்திருக்கும். இவ்வூரைச் சுற்றி நெல்வயல்கள் சூழ்ந்திருக்கும் (நற். 190). இவ்வூரை ஒட்டியமைந்த காடுகளில் நெல்லி மரங்கள் நிறைந்து காணப்பட்டன. ஆர்க்காடு சோழர் கீழ் வந்த பின்னர் சோழர் கொடியுடன் எந்நேரமும் தேர்கள் செல்லும் தெருக்களைக் கொண்டதாக வளர்ச்சி அடைந்தது.

**ஆரேறு**

"சிறுகோல் சென்னி ஆரேற்று அன்ன" (நற். 265) எனும் பாடலில் இளஞ்சேட்சென்னியின் ஊராக ஆரேற்றைக் குறிப்பிடுகிறார் பரணர். இவ்வூர் தலைவியின் அழகுக்கு உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது. இன்றைய சூழலில் இவ்வூர் எப்பகுதியில் அமைந்துள்ளது என்பதை அறிய முடியவில்லை.

**ஆலங்கானம்**

இவ்வூர் தற்போதைய திருவாரூர் மாவட்டத்தில் திருவாரூர்க்கு வடக்கே எட்டுக்கல் தொலைவில் தலையாலங்காடு எனும் பெயரில் அமைந்துள்ளது. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரை தலையாலங்கானம் என்றே வழங்கி வந்துள்ளது. பாண்டியன் நெடுஞ்செழியன் தன்னை இளையன் என எண்ணிப் போர் தொடுத்த இருபெரு வேந்தர் மற்றும் வேளிர் ஐவர் ஆகியோரை இவ்வூரில் ஒரு பகலில் வென்றான். இதன் பொருட்டாகத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என

அழைக்கப்பட்டான். ஆலங்கானமும் தலையாலங்கானம் என்று வழங்கப்பட்டது. குடபுலவியனார் எனும் புலவர் இப்போரைக் குறிப்பிடும்போது "தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து" (புறம். 19) எனக் கூறியுள்ளதைக் காணமுடிகிறது. மேலும் இப்போரைக் குறித்து ஆலம்பேரி சாத்தனார்[16], கல்லாடர்[17], பொதும்பில் கிழார் மகனார்[18] போன்ற புலவர்களும் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். தலையாலங்கானத்தே போரிட்ட வேந்தரையும் வேளிரையும் மதுரை நக்கீரர் குறிப்பிடுவதை,

"கொய்சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங் கானத் தகன்றலை சிவப்பச்
சேரல் செம்பியன் சினங்கெழு திதியன்
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி
நாரறி நரவின் எருமை யூரன்
தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான் இயல்தேர்ப் பொருநன்"[19]

என்னும் அகப்பாடலில் காணமுடிகிறது. பாண்டியன் நெடுஞ்செழியன் அனைவரையும் வென்ற பிறகு எரிபரந்தெடுத்தல் மூலம் அவ்வூரைத் தீக்கு இரையாக்கினான் என மதுரைக்காஞ்சி (126 – 127) கூறுகிறது.

### ஆலமுற்றம்

ஆலமுற்றம் சோழநாட்டில் புகாருக்கு அருகில் அமைந்திருந்தது. இவ்வூர் சிவபெருமான் எழுந்தருளிய தலமாகும். புதுவருவாய்களை உடையதாகவும் எழில் மிக்கதாகவும் சிவபெருமானுக்கு உரியதாகவும் விளங்கியது. இதனை, "நான்மறை முதுநூல் முக்கட் செல்வன் ஆலமுற்றம்" (அகம். 181) என்னும் பாடலடி புலப்படுத்துகிறது.

### ஆவூர்மூலம்

ஆவூர் மூலங்கிழார் எனும் புலவர் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் செய்த வேள்விக்குச் சென்று பரிசிலைப் பெறுகையில் நீ தந்த பரிசிலைக் காவிரிக் கரையிலுள்ள எம்மூரான ஆவூர்

மூலத்தில் நின் புகழைப் பாடி உண்டும் தின்றும் ஊர்ந்தும் மகிழ்ந்தாடுவோம் எனக் கூறும்போது எம் ஊர் என ஆவூர் மூலத்தைக் குறிப்பிடுகிறார்[20]. இவ்வூர் கும்பகோணம் - மன்னார்குடி சாலையில் அமைந்துள்ளது.

**இடும்பில்**

கடல்பிறக்கோட்டிய செல்கெழுகுட்டுவன் கண்ணகித் தெய்வத்திற்குச் சிலையெடுக்கும் பொருட்டு இமயமலையில் கல் எடுக்கச் செல்லும்போது கைப்பற்றிய ஊர்களில் இடும்பிலும் ஒன்று. இது இடும்பாத வனம் என்றும் வழங்கப்பட்டது. நல்ல இனத்தைச் சேர்ந்த பசுக்களை அதன் கன்றுகளோடு கைப்பற்றி வில் வீரர்களோடு இடும்பிலில் தங்கினான். இதனை,

> "இனம்தெரி பல்ஆன் கன்றொடு கொண்டு
> மாறா வல்வில் இடும்பில் புறத்திறுத்து"[21]

எனும் பதிக வரிகள் குறிப்பிடுகின்றன.

**இடையாறு**

இவ்வூர் தற்போதைய விழுப்புரம் மாவட்டத்தில் திருக்கோயிலூர் வட்டத்தில் இடையார் என்ற பெயரில் வழங்கப்படுகிறது. "இடையென்னும் அடைமொழியைக் கொண்ட ஊர்களில் மிகப் பழமை வாய்ந்தன திருவிடைமருதூர், திருவிடைச்சுரம், இடையாறு முதலியவையாகும்"[22]. இவ்வூர் நீர்வளமும் நிலவளமும் நிறைந்ததாக விளங்கியது. எனினும் இவ்வூர் மக்கள் ஊரைவிட்டுச் செல்ல நினைத்தனர். அதனைக் கரிகாலன் தடுத்து நிறுத்தினான் என்பதை,

> "நெடுங்கால் மாஅத்துக் குறும்பறை பயிற்றுஞ்
> செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்
> வெல்போர்ச் சோழன் இடையாற் றன்ன
> நல்லிசை வெறுக்கை தருமார்"[23]

என்னும் பாடல் வாயிலாக நக்கீரர் குறிப்பிடுகிறார். செல்வம் மிகுந்த ஊரைவிட்டு மக்கள் சென்றதன் காரணம் இடையாறு திருக்கோயிலூருக்கு

அருகில் உள்ள ஊராதலால் மலையமானுக்கு உரியதாக இருந்தது. மலையமானை வென்று தன்கீழ் கரிகாற்சோழன் கொண்டு வந்ததால் மக்கள் வெளியேற நினைத்திருக்கக் கூடும். இக்கருத்தை அரண் செய்வதாக "வெல்போர்ச் சோழன்", "இடையாற்றன்ன நல்லிசை வெறுக்கை தருமார்" எனும் அடிகள் திகழ்கின்றன.

**இருங்குன்றம்**

திருமால் விரும்பி உறையும் மலை ஆதாலலும் சோலைகள் நிறைந்திருந்த காரணத்தாலும் இருங்குன்றம் "திருமாலிருஞ்சோலை" என அழைக்கப்பெற்றது. இதனை, "சீர்கெழு திருவின் சோலையோடு தொடர்மொழி மாலிருங் குன்றம்" (பரி. 5) எனும் அடியால் குறிப்பிடுகிறார் இளம்பெருவழுதியார். சக்கரவாளம் எனும் மலை உள்ளிட்ட பல மலைகளிலும் சிறந்ததாக இருங்குன்றம் விளங்கியது. இங்குள்ள சுனைகளில் நீலம் மலர்தலும் அசோக மரங்களில் பூக்கள் மலர்தலும் மாயோன் பொன்னாடை போர்த்திருந்ததைப் போல இருந்தது. இம்மலையில் சிலம்பாறு எனும் ஆறு ஓடியது. இது பாண்டிய நாட்டில் இருந்தது தெளிவாகிறது. இன்றைய அழகர் மலையே சங்க கால இருங்குன்றமாகும்.

**இருந்தையூர்**

மதுரையில் இன்று கூடலழகர் கோயில் உள்ள இடமே சங்க கால இருந்தையூராக விளங்கியது. சங்க காலத்தே கூடலுக்கு அப்பால் வைகைக் கரையில் அமைந்திருந்தது. "இங்கு திருமால் இருந்த கோலத்தில் காட்சி தருகிறார். அதனால் இத்தலம் இருந்த ஊர் என்று பெயர் பெற்றது. அப்பெயர் காலப்போக்கில் இருந்தையூர் என மாறி வழங்கலாயிற்று"[24] என மா. இராசமாணிக்கனார் கூறுகிறார். இவ்வூர் மலர்கள் பூத்துக் குலுங்கும் மரங்களுடனும் சுனைகள் மருதநில வயல்கள் ஆகியவற்றைப் பெற்றிருந்தது. இவ்வூரில் எழுந்தருளிய இறைவனை,

"மருந்தாகும் தீநீர் மலிதுறை மேய
இருந்தையூர் அமர்ந்த செல்வ"[25]

எனப் பரிபாடல் திரட்டு கூறுகிறது.

**இருப்பை**

புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள விராலிமலை அருகேயுள்ள இலுப்பூரே சங்ககால இருப்பையாகும். இருப்பை என்பது இலுப்பூர் என மாறியிருக்கிறது. "இலுப்பை மரங்கள் அடர்ந்த பகுதியில் அமைந்த குடியிருப்பு ஊராகி இருப்பை எனப் பெயர் பெற்றிருக்கும்"[26] என்பர். இதன் தலைவன் வேற்படையையுடைய விராஅன் என்பவன். இவன் சிறந்த வள்ளலாக விளங்கினான். நற்றிணைப் பாடல் "தேர்வண் விராஅன் இருப்பை" (350) எனக் குறிப்பிடுகிறது. இங்கு நெற்கதிரை அறுக்கும் மள்ளர்கள் பறவையை விரட்டத் தண்ணுமையை ஒலிக்கச் செய்வர். மலைபோன்று நெற்போர்கள் உயர்ந்திருக்கும். இதனை,

"வெண்ணெற் போர்விற்
கைவண் விராஅ னிருப்பை"[27]

எனும் அடிகள் இதனை உணர்த்துகின்றன.

**ஈர்ந்தை**

ஈர்ந்தை ஈர்ந்தூர் எனவும் வழங்கப்பட்டது. இக்காலத்தே கொங்கு நாட்டில் ஈஞ்சூர் என வழங்குகிறது. இரந்தூர் எனச் சுவடிகளில் காணப்படுவதாக உ.வே.சா. கூறுகிறார். இவ்வூர் தோயன் மாறன் எனும் வள்ளலுக்குரியதாக இருந்தது. இவனை ஈர்ந்தூர் கிழான் கோயமான் என்றும் அழைத்தனர். இவன் பாணர்களின் பசிநோய்க்குப் பகைவனாக விளங்கியதை "ஈர்ந்தை யோனே பாண்பசிப் பகைஞன்" (புறம். 180) எனும் இவ்வடி காட்டுகிறது.

**உம்பர்**

உம்பல் எனும் சொல் யானையைக் குறிக்கும். இன்றைய ஆனைமலைக் காட்டுப்பகுதியே சங்ககால உம்பற்காடு ஆகும். இக்காட்டுப் பகுதியில் யானைகள் மிகுதியாக இருந்தன. இங்கு இனிய சுளைகளையுடைய பலா மரங்கள் தோப்புகளாக இருந்தன என அகம் (307) பாடுகிறது. இதனை, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் தன் ஆட்சியின்கீழ் கொண்டு வந்தான். இதனை,

"உம்பற் காட்டைத் தன்கோல் நிறீஇ"[28]

எனப் பதிகம் வாயிலாக அறியமுடிகிறது.

**உறத்தூர்**

தஞ்சைக்கருகிலுள்ள ஒரத்தநாடே சங்க கால உறத்தூர் என்பர். இது அரிமணவாயில் உறத்தூர் என்றே வழங்கப்பட்டது. எனவே இரண்டும் ஒரே ஊர் என்ற மயக்கமும் உள்ளது. இந்த ஊர் கள்ளின் மணம் செறிந்த ஊராதலால் உறத்தூர் எனப்பட்டது. எவ்வி என்பவன் தன் பகைவர்களுடன் போரிட்டு வென்ற பிறகு இங்கு வீரர்களுக்குக் கள்ளும் பெருஞ்சோறும் அளித்தான் எனப் பரணர்[29] குறிப்பிடுகிறார்.

**ஊணூர்**

ஊணூர் இக்காலத்துக் கோடியக்கரைப் பகுதியில் உள்ள ஓரூர் ஆகும். சங்க காலத்தில் மருங்கூர் பட்டினத்திற்குக் கிழக்கில் அமைந்திருந்தது. இதனைத் தழும்பன் என்னும் வள்ளல் ஆட்சி செய்தான். போரில் பெற்ற புண்களால் (தழும்புகள்) இப்பெயர் பெற்றான் (நற். 300) என்றும் வலிய பிடி மிதித்ததால் வழுதுணங்காய் போன்ற தழும்பை உடையவனாதலால் இப்பெயர் பெற்றான் எனவும் (அகம். 227) சங்கப் பாடல்கள் குறிப்புத் தருகின்றன. ஊணூர் கடற்கரைப் பக்கத்தே அமைந்திருந்தது. இது காவல் மிகுந்த மதிலைக் கொண்டிருந்தது. மிகுதியான பழைய நெற்தொகுதிகளை உடையதாக இருந்ததைப் "பழம்பல் நெல்லின் ஊணூர்" (அகம். 220) இவ்வடி உணர்த்துகிறது. மேலும் நெல்லறுக்கும்முன் உழவர் தண்ணுமையை இசைத்துப் பறவைகளை விரட்டுவர். இந்த இசைகேட்டு அஞ்சித் தேன் கூட்டிலிருந்த தேனீக்கள் நீங்கும். எனவே தேனை வடித்துக் கொள்வர். சிறுவலையைக் கொண்டு மீன்பிடித்து உண்ணும் தொழிலிலும் இவ்வூர் மக்கள் ஈடுபட்டதை,

"மீன்சீவும் பாண்சேரி
வாய்மொழித் தழும்ப னூணூ ரன்ன"[30]

என்னும் இப்பாடல் வாயிலாகப் பரணர் வெளிப்படுத்துகிறார். தழும்பன் 'வாய்மொழித் தழும்பன்' எனவும் சிறப்பிக்கப்படுவதைக் காணமுடிகிறது.

### எயில்

பூதப்பாண்டியன் இவ்வூரை நிலைபெற்ற ஊர் எனும் பொருளில் 'மன்னெயில்' எனக் குறிப்பிடுகிறான். இவ்வூரின் தலைவனாக ஆந்தை என்பவன் திகழ்ந்தான். இவன் பூதப்பாண்டியனின் நண்பர்களுள் ஒருவன். இப்பாண்டியன் பாடிய வஞ்சினப் பாடலில் 'மன்னெயில் ஆந்தை" (புறம். 71) இவ்வூரைப் பற்றிய பதிவு இடம்பெற்றுள்ளது. எனவே இது பாண்டிய நாட்டிலிருந்த ஊர் என்பது தெளிவாகிறது.

### ஏரகம்

ஏரகம் முருகன் உறையும் பதியாகத் திருமுருகாற்றுப்படை கூறுகிறது. இது தென்கன்னட மாவட்டத்தில் புத்தூர் வட்டத்தே இருக்கும் சஹ்யாத்திரி மலைத் தொடர்களில் ஒன்றான குமார பர்வதத்திலுள்ள குமாரஷேத்திரம் எனும் சிற்றூர் என இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார்[31]. ஏர் - அழகு; அகம் - இடம்; அழகிய சோலைகள் நிறைந்த பகுதி எனும் பொருளில் ஏரகம் என அமைந்திருந்தது என்பர். இத்தலத்தில் உறையும் முருகனுக்குப் பல பூசைகள் நடைபெறும். ஒவ்வொரு பூசையின்போதும் அர்ச்சகர் நீராடி ஈர ஆடையுடனே பூசை செய்தல் வழக்கம். மேலும் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறு தொழிலிலும் வழுவாதவரும் நற்குடியில் பிறந்து 48 ஆண்டுகள் பிரமச்சரிய விரதம் காத்தவரே இம்முருகனுக்குப் பூசை செய்யத் தகுதியுடையவர் எனத் திருமுருகாற்றுப்படை (177 – 189) கூறுகிறது. இங்கு உறையும் முருகனைப் "பெரிது உவந்து, ஏரகத்து உறைதலும் உரியன்" (முருகு, 188 - 189) என நக்கீரர் குறிப்பிடுகிறார்.

### ஏழெயில்

சிவகங்கை மாவட்டத்தில் காளையார்கோயிலுக்கு அருகேயுள்ள ஏழுபொன் கோட்டை என்ற ஊரே சங்ககால ஏழெயில் ஆகும். இது பாண்டியர்களுக்கு உரியதாக இருந்தது. இவ்வூர் ஏழு அரண்களில் சூழப்பட்டிருந்தது. எனவே 'ஏழெயில் கதவம்' எனும் பெயரைப் பெற்றுள்ளது. இங்கு நெல் மிகுதியாக விளையும். எனவே இங்குள்ள மகளிர் வேட்டுவர் கொடுத்த மான்கறிக்குப் பண்டமாற்றாக அக்கறி கொண்டுவந்த கலம்

நிறையும்படியும் ஆய்ச்சியர் கொடுத்த தயிருக்கு மாற்றாகத் தயிர் கொண்டுவந்த கலம் நிறையும்படியும் வெண்ணெல் கொடுப்பர். இவ்வூரைச் சோழன் நலங்கிள்ளி வென்று கதவில் புலிக்கொடி பதித்தான். இதனை,

"தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளும்
ஏழையிற் கதற மெறிந்துகைக் கொண்டுநின்
பேழ்வா யுழுவை பொறிக்கு மாற்றல்"[32]

எனும் பாடலில் கோவூர்கிழார் சோழன் நலங்கிள்ளியைப் பாராட்டுகிறார்.

**ஒடுங்காடு**

இது குடநாட்டை ஒட்டி அமைந்திருந்த முல்லை நிலத்து ஊராகும். இக்காடு பரல்கற்கள் குவியலாகக் கிடக்கும் வழிகளையுடையதாக இருந்தது. இங்குள்ள மறவர்கள் வந்த வழிகளில் சென்ற ஆநிரைகளைக் கவர்ந்து வருவர். வளமான நீண்ட அடிப்பாகத்தை உடைய ஆசினிப் பலா மரங்கள் நிறைந்ததாக ஒடுங்காடு விளங்கியதை "நெடுங்கால் ஆசினி ஒடுங்காடு" (அகம். 91) எனும் இவ்வடியால் உணர முடிகிறது.

**ஓகந்தூர்**

ஓகந்தூர் செல்வக்கடுங்கேவுக்கு உரிய ஊராகும். இது ஓத்திரம் எனும் நெல் மிகுதியாக விளையும் ஊராகும். ஆற்றுநீர் "ஓ" என்னும் மதகின் வழி பாய்ந்ததால் விளையும் நெல் ஓத்திரம் எனப் பெயர் பெற்றதென்பர். இவ்வாறு நெல் மிகுதியாகக் கொண்ட இவ்வூரைத் திருமாலுக்குத் தேவதானமாகக் கொடுத்தான். இதனை,

"மாய வண்ணனை மனனுறப் பெற்று அவற்கு
ஓத்திர நெல்லின் ஓகந்தூர் ஈத்து"[33]

என்னும் இப்பதிக வரிகள் உணர்த்துகின்றன. மாயவண்ணன் எனும் புரோகிதனுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டது இவ்வூர் என மயிலை சீனி. வேங்கடசாமி கருதுகிறார். இக்கருத்து ஆய்வதற்குரியது.

## கரும்பனூர்

கரும்பு எனும் தாவரத்தால் பெயர் பெற்ற ஊராகக் கரும்பனூர் விளங்கியது. இவ்வூர் வேங்கட நாட்டுப் பகுதியில் அமைந்திருந்தது. இதன் தலைவனாகக் கரும்பனூர்க் கிழான் விளங்கினான். "கரும்ப னூரான் காதன் மகனே" (புறம். 381) எனப் பாடும்படி வள்ளலாக விளங்கினான். இவ்வூர் மருதம் மற்றும் முல்லை நிலங்களைக் கொண்டிருந்தது. இவ்வூர் மருத நிலத்து வயல்களில் நாரைகள் வஞ்சி மரத்தில் உறங்கும். பின் முற்றிய கரும்பின் பூவைக் கொய்தபடிப் பறக்கும். முல்லை நிலங்களில் வரகின் அரிகாலில் வாழும் எலியைப் பிடிக்கக் குறும்பூழ்ப் பறவை ஆரவாரிக்கும் தன்மையதாய் இருந்ததைப் புறநானூறு (384) காட்டுகிறது.

## கழார்

கழார் கழுமலம், மயிலாடுதுறை, புகாரையும் ஒட்டி அமைந்திருந்தது. இன்று கழுதகாரன் துறை என வழங்கப்படுகிறது. இது கழார் முன்துறை என்பதன் மரூஉ. இவ்வூர் சோழநாட்டில் அமைந்திருந்தது. சோழர்களின்கீழ் மத்தி எனும் பரதவர் கோமான் ஆட்சி செய்தான். இவனை "பல்வேல் மத்தி கழார்"[34] எனப் புகழ்வர். இவன் கரிகாலன் ஆணையிட எழின் என்பவனின் பல்லைப் பிடுங்கினான் என மாமூலனார் (அகம். 211) குறிப்பிடுகிறார்.

கழார் முன்துறையில் ஆதிமந்தி, ஆட்டனத்தி எனும் ஆடல் தம்பதியர் காவிரி நீரில் நடனமாடினர். இதனைக் காண்பதற்காகக் கரிகாலனும் தம் பரிவாரங்களோடு வருகை தந்திருந்தான். இந்த விழாவில் ஆட்டனத்தியைக் காவிரியாறு அடித்துச் சென்றது. இதனைக் காவிரி எனும் பெண் ஆட்டனத்தியின் அழகால் மயங்கி இழுத்துச் சென்றாள் எனக் கூறுவர் புலவர்கள். ஆதிமந்தியோ கணவனைக் காணாது ஆற்றின் கரையோரமாகவே தேடிச் சென்று அலைந்தாள். இந்நிலையில் ஆட்டனத்தியை மருதி எனும் பெண் காப்பாற்றினாள். கணவனைத் தேடியலைந்த ஆதிமந்தியிடம் ஆட்டனத்தியைக் காட்டிவிட்டுக் கடலில் மாய்ந்தாள்.

"கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்
ஆட்டன் அத்தி நலன்நயந்து உரைஇ

தாழிருங் கதுப்பின் காவிரி வவ்வலின்
மாதிரம் துழைஇ மதிமருண்டு அலந்த
ஆதி மந்தி காதலற் காட்டிப்
படுகல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி"[35]

எனும் இப்பாடலில் பரணர் குறிப்பிடுகிறர். மேலும் இவ்வரலாற்று நிகழ்வை அகம். 135, 236, 376 பாடல்களும் பதிவு செய்துள்ளன.

கழார் நீர்வளம் மிகுந்த மருத வயல்களை உடையதாக விளங்கியது. காவிரியில் ஒருமுறை பெருவெள்ளம் வந்து கழாரிலிருந்த பெரும் பெரும் மருத மரங்களையும் வஞ்சி மரங்களையும் சாய்த்துச் சென்றது. இங்கு முதிர்ந்து விழும் மாம்பழங்கள் காவிரி நீரில் திடும் எனும் ஒலியுடன் விழும் என ஐங்குறுநூறு (61) கூறுகிறது.

**கழுமலம்**

கழுமலம் இன்று சீர்காழி என வழங்கப்படுகிறது. கழுமலம் தேவார காலத்தில் காழி என்னும் பெயரில் அழைக்கப்பட்டது. இந்தக் காழி என்னும் பெயரே பதிகம் பாடிய சிறப்பால் சீர்காழி என வளர்ச்சியடைந்தது. கரிகாலனை அரசனாகத் தேர்ந்தெடுத்த யானையைக் கழுமலத்திலிருந்து அனுப்பினர் (பழமொழி. 230) என்பதாலும் புகாருக்கு அருகில் இருப்பதாலும் இது சோழநாட்டு ஊர் என்பது தெளிவாகும். இதனைச் சேரர் கைப்பற்றித் தன்கீழ் கொண்டு வந்தனர். எனவே குட்டுவனின் கழுமலம் என அழைக்கப்பட்டதை "நல்தேர்க் குட்டுவன் கழுமலத் தன்ன" (அகம். 270) காணமுடிகிறது.

தன் ஊரான கழுமலத்தை மீட்க பெரும்பூண் சென்னி முயன்றான். எனவே குட்டுவன் தன் கீழுள்ள மன்னர்களைப் படைகொண்டு வருமாறு ஆணையிட நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுரை ஆகியோர் வந்தனர். இந்த அறுவர்க்கும் தலைவனாகக் கணையன் விளங்கினான். இக்கூட்டணியைச் சோழர் படைத்தலைவன் பழையன் போரிட்டு அழித்ததோடு

தானும் இறந்துவிட்டான். பின்னர் பெரும்பூண் சென்னி தானே முன்னின்று போர் நடத்திக் கழுமலத்தை மீட்டான். இதனை,

"நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி
துன்னருங் கடுந்திறல் கங்கன் கட்டி
பொன்அணி வல்வில் புன்றுறை என்றாங்கு
அன்றுஅவர் குழீஇய அளப்பருங் கட்டூர்
பருந்துபடப் பண்ணி பழையன் பட்டுடன்
கண்டது நோனான் ஆகி திண்தேர்க்
கணையன் அகப்படக் கழுமலம் தந்த
பிணையலங் கண்ணிப் பெரும்பூட் சென்னி"[36]

எனும் அகப்பாடல் வாயிலாகக் குடவாயிற் கீரத்தனார் விளக்குகிறார்.

**கள்ளில்**

இது தொண்டை நாட்டு ஊராகும். இவ்வூர்க் கல்வெட்டு "தொண்டை நாட்டுப் புழற் கோட்டத்துக் குன்றிகை நாட்டுத் திருக்கள்ளில்"[37] எனக் குறிக்கிறது. இது களிப்பைத் தரும் மதுவினையுடைய ஊராகவும் மூங்கில் செழித்து வளர்ந்த மலைப்பகுதியை உடையதாகவும் விளங்கியது. இவ்வூரின் தலைவன் அவியன் என்பவனாவான். "களிமலி கள்ளில் நற்றே ரவியன்" (அகம். 271) எனும் பாடலடி இதனை உணர்த்துகிறது. கள்ளில் ஆத்திரையனார் எனும் புலவர் இவ்வூரினர்.

**கள்ளூர்**

"மது கிடைக்கும் இடம் அல்லது விற்கும் இடம் நாளடைவில் குடியிருப்பாகி ஊராக அமைந்து கள்ளூர் என்ற பெயரைப் பெற்றிருக்கலாம்"[38] என்பர். தொன்மைப் புகழ் நிறைந்த அழகு விளங்கும் பல்வகைப் பூக்கள் நிரம்பிய வயல்களையும் கரும்பு நிறைந்த தோட்டங்களையும் உடைய சிறப்புடனும் கள்ளூர் விளங்கியது. இதனை,

"பல்பூங் கழனிக்

கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்"[39]

எனும் பாடலடி காட்டுகிறது. கள்ளில், கள்ளூர் இரண்டும் ஒன்றே எனக் கருதுவர். இரண்டும் வேறுவேறு ஊர்கள் என்பது கள்ளில் முல்லை, குறிஞ்சி நிலப்பகுதியையும் கள்ளூர் மருத நிலப்பகுதியையும் கொண்டிருந்தது என்பது இப்பாடல்களால் அறியமுடிகிறது.

**காண்டவாயில்**

மரக்காணத்தை அடுத்த மாண்டவாயில் எனும் ஊரே சங்ககாலக் காண்டவாயில் ஆகும். காண்டம் - நீர்; நீர்த்துறை அல்லது நீர்க்கரை என்ற பொருளில் காண்டவாயில் எனும் பெயர் அமைந்திருக்கக் கூடும் என்பர். "கழிசூழ் படப்பைக் காண்டவாயில்" (நற். 38) எனும் தொடரின் வாயிலாக நெய்தல் நிலத்து ஊராக விளங்கியதை உணர முடிகிறது. இது கலங்கிய நீரையுடைய கடற்கழி சூழ்ந்த தோட்டங்களைக் கொண்டிருந்தது. இவ்வூரில் வாழும் மக்கள் முற்றிய பனையோலையில் முட்களைச் சேர்த்துக்கட்டி வேலியமைப்பர். இப்பகுதியில் இன்றும் பனைமரங்கள் உயர்ந்த மணல்மேடு காணப்படுகிறது.

**காமூர்**

சங்ககாலக் காமூர் இன்று எப்பகுதியில் உள்ளது என்பதில் அறிஞர்களிடையே மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. திருப்பூர் மாவட்டத்திலுள்ள காங்கேயம் எனத் தொல்லியலாளரும் முசிறிப் பகுதியில் உள்ள திருக்காம்பூர் என ஔவை துரைசாமிப்பிள்ளையும் மயிலை சீனி. வேங்கடசாமி தோட்டிமலைப் பகுதி என்றும் கருதுகின்றனர். இவற்றில் காங்கேயம் எனும் ஊரே காமூராக இருத்தல் கூடும். இன்றளவும் ஆநிரை வளம் மிகுந்த பகுதியாக இவ்வூர் திகழ்கிறது.

சங்ககாலத்தில் காமூரின் தலைவன் கழுவுள் என்பவன். இவன் இடையர்களின் தலைவனாக விளங்கியதை "ஆன்பயம் வாழ்நர் கழுவுள்" எனப் பதிற்றுப்பத்து (71) கூறும். இவ்வூரில் பூதம் தந்த வேங்கை மரம்

இருந்தது என மருதனிள நாகனார்[40] பாடுகிறார். காமூர் மீது பதினான்கு வேளிர் ஒன்றுகூடித் தாக்கினர். இதனை,

"ஈரெழு வேளிர் இயைந்தொருங் கெறிந்த
கழுவுள் காமூர் போலக்
கலங்கின்று"[41]

என்னும் அகப்பாடல் வாயிலாக அறியமுடிகிறது. ஆனால் போரின் முடிவு கூறப்படவில்லை.

காமூரை ஆட்சி செய்த கழுவுள்மீது பெருஞ்சேரல் இரும்பொறை போர்தொடுத்தான். காமூரை நெருப்பு மூட்டி, கழுவுளின் கோட்டையைக் கைப்பற்றினான். பசு, கன்றுகளைச் சேரர்படை மடக்கிவிட்டதால் பால், தயிர் விற்றுப் பிழைக்கும் இடையர் குல மக்கள் பிழைப்பின்றி வாடினர். எனவே வேறுவழியின்றி கழுவுள் சேரனுக்குப் பணிந்தான்[42]. இவ்வாறு சேரர்கீழ் காமூர் சென்றது.

**கானப்பேர்**

இது கானப்பேரெயில் எனவும் அழைக்கப்பட்டது. சிவகங்கைக்கு அருகில் அமைந்துள்ள காளையார் கோயில்தான் சங்ககாலக் கானப்பேர் ஆகும். "கானப்பேர் உறை காளை" என சுந்தரர் தான் பாடிய தேவாரப் பாடலில் இறைவனை அழைத்தார். இதனால் காளையார் எழுந்தருளும் கோயில் காளையார் கோயிலாயிற்று. கோயிற்பெயரே நாளடைவில் ஊர்ப்பெயராகவும் கொள்ளப்பட்டது"[43].

கானப்பேர் வேங்கை மார்பன் எனும் குறுநில மன்னனின் ஊராகும். இவ்வூர் பாதாளத்தைத் தொடுமளவு ஆழ்ந்த அகழியையும் வானைப் போன்ற உயர்ந்த மதிலையும் வானத்து மீன்கள் போன்ற சூட்டினையும் வெயில் நுழைய இயலாத அடர்ந்த காவற்காட்டையும் கொண்டிருந்தது. சிறந்த எயிலைப் பெற்றிருந்ததால் கானப்பேரெயில் எனப் புகழப்பட்டது. இதனைப் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி வென்று தன் எல்லையுடன் சேர்த்து

விரிவாக்கிக் கொண்டான். (புறம். 21) இதனால் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி எனப் பெயர் பெற்றான்.

## குடந்தை

இவ்வூர் குடந்தை, குடந்தைவாயில், குடவாயில் எனும் பெயர்களால் அழைக்கப்பட்டது. இது தஞ்சை மாவட்டத்தில் நன்னிலம் வட்டத்தில் உள்ள குடவாசல் என்னும் ஊராகும். இவ்வூர் சோழர்களுக்கு உரியது என்பதை, "தேர்வண் சோழர் குடந்தை வாயில்" (நற். 379) என்பதை உணர்த்துகிறது, மேலும் இவ்வூர் ஆழ்ந்த அகழியைக் கொண்டிருந்தது. பழைய நெற்குவியல்களை உடையதாகவும் யானை படியும் குளங்களை உடையதாகவும் திகழ்ந்தது (அகம். 44). சங்க காலத்தே இவ்வூர் சோழர்களின் கருவூலமாக விளங்கியது. இங்கு தன் செல்வங்களையும் பகைவர் திறையாகக் கொடுத்த நிதிகளையும் பாதுகாத்து வைத்தனர். இதனை,

"கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடுதரு நிதியினும்"[44]

என்னும் பாடலில் குடவாயில் கீரத்தனார் தன் ஊரைப் பற்றிப் பதிவு செய்கிறார்.

"இக்குடவாயிலின் சிதைவுகள் இன்றும் அங்குள்ளன. சங்க கால நாணயங்களும் இடைக்கால நாணயங்களும் மழைக்காலத்தில் வெளிப்படுகின்றன. இடைக்காலக் கோயிற் சிதைவுகள் காணப்படுகின்றன"[45] எனக் குடவாயில் பாலசுப்பிரமணியம் கூறுகிறார்.

## குழுமூர்

குழுமூர் "உதியன் அட்டில்" என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் இந்த ஊரில் இருந்துகொண்டு நாட்டை விரிவுபடுத்தும் முயற்சியில் ஈடுபட்டான். (அகம். 65) இவ்வூரில் உள்ள மக்களுக்கும் மகாபாரதம் நாடகம் நடித்த மக்களுக்கும் உணவு வழங்கியதை முரஞ்சியூர் முடிநாகராயர் மிகைப்பட பாரதப்போருக்கு உணவளித்தான் எனக் கூறுவார். இவ்வூரில் இரவலர்க்கு உணவளித்ததால்

எந்நேரமும் ஆரவாரத்தோடே இருக்கும். இவ்வூருக்கு அருகில் பல்லான்குன்று என்னும் மலை இருந்தது. இம்மலையிலுள்ள அருவியானது குழுமூர் அட்டில் சாலை போல ஆரவாரித்தபடி வீழ்வதை அகம் (168) காட்டுகிறது. இவ்வூரில் வாழும் மக்கள் ஆடுமாடு மேய்த்து வாழும் ஆயர் குடியினர். இவர்கள் பல்லான்குன்றில் உள்ள மரநிழலில் தங்கியபடி ஆநிரை மேய்ப்பர்.

**குறிஞ்சி நல்லூர்**

இது மலை அடுக்கத்தே இருந்த ஊராகும். இங்கு வெயில் நுழைய இயலாத அளவு அடர்ந்திருக்கும் மரங்களால் இருளாகக் காட்சியளிக்கும் என கந்தரத்தனார் (நற். 116) எனும் புலவர் கூறுகிறார்.

**குறுக்கை**

குறுக்கை எனும் பெயருடன் நாகப்பட்டினம், மயிலாடுதுறை வட்டத்தில் ஒன்றும் திருச்சி, லால்குடி வட்டத்தில் ஒன்றும் தஞ்சை, மாயவரம் வட்டத்தில் ஒன்றும் என மூன்று ஊர்கள் உள்ளன. இவற்றில் சங்ககாலக் குறுக்கை மயிலாடுதுறைக்கு அருகிலுள்ள ஊராகும். இது அட்ட வீரட்டானத் தலங்களுள் ஒன்றாகும். அன்னி மற்றும் திதியனுக்கு இடையில் நடைபெற்ற போர் இவ்வூரிடத்தே நடந்ததால் குறுக்கைப் பறந்தலை எனப்பட்டது. அன்னிக்கும் திதியனுக்கும் இடையில் போர் மூண்டது. நீடூர் தலைவன் எவ்வி அறிவுரை கூறியும் கேளாது இருவரும் போரிட்டனர். அன்னி திதியனின் காவல் மரமான புன்னை மரத்தை வெட்டினான். எனவே திதியன் கடுங்கோபம் கொண்டு அன்னியை அழித்தான்.

> "எவ்வி
> நயம்புரி நன்மொழி அடக்கவும் அடங்கான்
> பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெ∴கித்
> திதியனொடு பொருத அன்னி போல"[46]

எனும் பாடலில் நக்கீரர் பதிவு செய்கிறார். இந்த நிகழ்வினை நற்றிணை[47], அகநானூறு[48] ஆகிய இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன.

### குறும்பூர்

இது கொங்குநாட்டின் விச்சி மலைப்பக்கத்தே உள்ள ஊராகும். இன்றைய சேலம், திருச்சிப் பகுதிகளில் அமைந்திருந்தது. விச்சிக்கோ இதனை ஆட்சிபுரிந்தான். விச்சியர்கோமான் பகைவர்களுடன் பொருதபோது குறும்பூரில் ஆரவாரம் எழுந்தது.

"வில்கெழு தானை விச்சியர் பெருமகன்

வேந்தரொடு பொருத ஞான்றைப்

கலிகெழு குறும்பூர் ஆர்ப்பினும்"[49]

எனும் இப்பாடலில் பரணர் குறிப்பிடுகிறார். விச்சிக்கோவோடு போரிட்ட பகைவர் யாரென்பது பதிற்றுப்பத்தின் வாயிலாக அறிய முடிகிறது. இப்போர் இளஞ்சேரல் இரும்பொறைக்கும் விச்சிக்கோவுக்கும் இடையே நடைபெற்றது. இப்போரில் இளஞ்சேரல் விச்சியரை வென்று குறும்பூர் மட்டுமல்லாது ஐந்தெயிலையும் கைக்கொண்டான். (பதிற். பதிகம். 9).

### குன்றூர்

தற்போதைய கீழ்க்கரையை அடுத்துள்ள குன்றூரே சங்க காலத்துக் குன்றூர் ஆகும். இது தொன்மையான வேளிர்களுக்கு உரியதாகத் திகழ்ந்தது. இவ்வூரின் வயலிலுள்ள ஆமை முதுகில் உள்ள நத்தையை உடைத்துத் தின்பர் (நற். 280). இங்கு சூலுடைய வாளை மீனானது மாம்பழங்களை உண்ணும். இவ்வூருக்குக் கிழக்கே கடல் இருந்ததை,

"தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்க் குணாது

தண்பெரும் பவ்வம்"[50]

எனும் பாடலில் மாங்குடி மருதனார் குறிப்பிடுகிறார்.

### கொடுகூர்

கொடுகூர் துளுநாட்டு ஊராகும். ஆற்றின் தென்கரையில் வியலூரும் வடகரையில் கொடுகூரும் இருந்தன. இதனைக் கடல்பிறக்கோட்டிய செல்கெழு குட்டுவன் தாக்கினான். முதலில் வியலூரைத் தாக்கி வென்றான். பின் ஆற்றின் மறுகரைக்குச் சென்று கொடுகூரையும் தாக்கி அழித்தான்.

இதனை “வியலூர் நூறி, அக்கரை நண்ணிக் கொடுகூர் எறிந்து” (பதிற். பதிகம். 5) எனும் பதிக வரிகள் வாயிலாக அறியமுடிகிறது.

**கொடுங்கால்**

இன்றும் தன் பழைமை குன்றாது இப்பெயருடனே விளங்குகிறது. இது திருக்கோயிலூர் வட்டத்தில் அமைந்துள்ளது. இவ்வூரைப் பற்றிப் பாடிய அம்மூவனாரும் கோவலூர் மன்னன் காரிக்கு உரியது என்கிறார்.

“துஞ்சா முழவின் கோவற் கோமான்
நெடுந்தேர்க் காரி கொடுங்கோன் முன்றுறைப்
பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கும்”[51]

என்னும் இவ்வகப் பாடலால் கொடுங்கால் பெண்ணை ஆற்றின் கரையில் உள்ள ஊர் என்பது தெளிவாகிறது. புலவர் இந்த ஆற்று மணலைப் போன்று தலைவியின் கூந்தல் உள்ளது என உவமைப்படுத்துமிடத்தில் இவ்வூர் பெயர் இடம்பெற்றுள்ளது.

**கோடி**

இன்றைய இராமேசுவரத்திற்கு அருகில் உள்ள தனுஷ்கோடிப் பகுதியே சங்க காலத்தில் கோடி என்று அழைக்கப்பட்டது. இது ‘தொன்முது கோடி’ எனக் குறிக்கப்படுவதால் சங்க காலத்திலேயே தொன்மைச் சிறப்புகள் வாய்ந்ததாக இருந்தது. கடலுள் செல்லும் தரைமுனை எனப் பொருள்படும் ‘கோடி’ என்னும் சொல்லானது இன்றளவும் பொருந்துவதாக உள்ளது. இவ்வூர் திருவணைக்கரை எனவும் அழைக்கப்படுகிறது.

சங்க காலத்தில் இவ்வூர் பாண்டியர்களுக்கு உரியதாக இருந்தது. இது கடற்கரைச் சோலைகளையுடைய பெருந்துறைகளைக் கொண்டிருந்தது. இங்குப் புன்னை மலர்கள் உதிர்ந்து ஓவியம் வரைந்தாற்போன்று காட்சியளிக்கும். நெய்தல் மலர்கள் பெண்களின் கூந்தலுக்கு மட்டுமல்லாது தழையுடையுடன் அணி செய்தன. இங்குப் பறவைகளின் தொகுதிகள் அதிகமாக இருந்தன. இப்பறவைகளின் ஆரவார ஒலியைத் தன்

அருமறையினைக் கூறி இராமன் அடக்கினான் என்ற புராணச் செய்தியைக் கடுவன் மள்ளனார் பதிவு செய்துள்ளார்.

"வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்துறை
வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம்"[52]

என்னும் பாடல் வாயிலாக இச்செய்தி பெறப்படுகிறது. முற்காலத்தில் தமிழகத்திற்கும் இலங்கைக்கும் செல்ல இருந்த குறுக்கு வழி தனுஷ்கோடிப் பகுதியாகும். இதற்கிடையேயிருந்த தொலைவு 40 மைல் தூரமாகும். எனவே இந்த வழி எளியதாக அமைந்தது.

**சாய்க்காடு**

சாய்க்காடு தேவார காலத்தில் பதிகம் இயற்றப் பெற்ற தலமாதலால் திருச்சாய்க்காடு, திருச்சாய்கானம் என வழங்கப்பட்டுத் தற்போது சாயாவனம் எனும் பெயரில் அழைக்கப்படுகிறது. இவ்வூர் பூம்புகார் அருகே உள்ளது. எனவே 'பூம்புகார்ச் சாய்க்காடு' எனவும் அழைக்கப் பெற்றது. சங்கப் புலவர்களான மூலங்கீரனார்[53], மருதளினநாகனார்[54] ஆகியோர் இவ்வூரைத் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். சாய்க்காடு செவ்வியதும் திரட்சியானதுமான நீண்ட நெற்கதிர்களையுடைய வயல்களைக் கொண்டிருந்தது. இங்கு அன்னப் பறவைகள் உறங்கியபடி இருக்கும். இவ்வூரில் மூங்கில் செழித்து வளரும். இவ்வூர் மக்கள் மீன் பிடிப்பர். அவ்வலையில் இறால் மீனுடன் ஏனைய மீன் இனங்களும் குவியலாக மாட்டிக்கொள்ளும் வளமுடையதாக விளங்கியது. எனவே இது "பூக்கெழு படப்பைச் சாய்க்காடு" (நற். 73) எனப் புகழப்பட்டது.

**சிறுகுடி**

சங்க இலக்கியங்களில் பயின்று வருகின்ற ஊர்ப்பெயர்களில் சிறுகுடி என்னும் ஊர் பற்றியதான பதிவுகள் அதிகமாக இடம்பெற்றுள்ளன. சிறுகுடிக்குரிய தலைவர்களாகப் பண்ணன், வாணன், ஆதி அருமன்

போன்றோர் கூறப்பட்டுள்ளனர். இக்குறிப்புகள் கொண்ட பாடல்களை நோக்குகையில் மூன்று சிறுகுடி இருந்தமை புலப்படுகிறது. ஒன்று பண்ணன் சிறுகுடி. இது காவிரியின் வடகரையில் அமைந்திருந்தது. இன்றைய தஞ்சை மாவட்டத்திலுள்ள பேரளத்திற்கு அருகேயுள்ள சிறுகுடி ஆகும். மற்றொன்று வாணனுடைய சிறுகுடி. இது பாண்டிய நாட்டில் அமைந்திருந்தது. இவ்வூர் மதுரை மாவட்டத்தில் நத்தத்துக்கு அருகே அமைந்துள்ளது. ஆதி அருமனுக்கு உரியதாகக் கூறப்படும் சிறுகுடி இன்று எப்பகுதியில் இருக்கிறது என அறியமுடியவில்லை.

"குடி என்னும் சொல் ஊர்ப்பெயர்களில் அமைந்தது குடியிருப்பை உணர்த்துவதாகும். உறவு முறையுடைய பல குடும்பத்தார் ஒரு குடியினராகக் கருதப்படுவர். இத்தகைய குடியினர் சேர்ந்த வாழுமிடம் குடியிருப்பு என்றும் குடி என்றும் சொல்லப்படும்"[55] இவ்வகையில் சிறிய அளவிலான குடியிருப்பு சிறுகுடி என்ற பெயர் பெற்றிருக்கக் கூடும்.

சோழ நாட்டில் காவிரியின் வடகரையில் அமைந்திருந்த சிறுகுடி பண்ணனுக்குரியது. இது "கைவள் ஈகைப் பண்ணன் சிறுகுடி"[56] எனப் பாராட்டப் படுகிறது. இப்பண்ணன் வள்ளலாகத் திகழ்ந்ததால் 'பசிப்பிணி மருத்துவன்', 'பாண்பசிப் பகைஞன்', 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்' எனப் பாராட்டப்படுகிறான். இவ்வூரில் உள்ள நெல்லிக்கனி சுவையுடையது (அகம். 57). இங்கு மரங்கள் அதிகமாக இருந்தன (அகம். 177). இவன் கோவூர் கிழாருக்குப் பெருஞ்சிறப்புச் செய்தவன்.

பாண்டிய நாட்டில் அமைந்திருந்த சிறுகுடி வாணன் என்பவனுக்கு உரியதாகும். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் கட்டப்பட்ட குளத்தின் ஒரு மடைநீர் இவ்வூருக்கு வந்ததென நக்கீரர்[57] கூறுகிறார். இச்சிறுகுடியில் பொய்கைகள், சோலைகள் இருந்தன. இவ்வூருக்கு வடக்கே காட்டாறு ஓடியது என்பதை,

"வாணன் சிறுகுடி வடாஅது
தீநீர் கான்யாறு"[58]

என்னும் பாடல் காட்டுகிறது. இவ்வூர் கடற்கரைச் சோலை சூழ்ந்ததாக இருந்தது. இங்கு நெல் வயல்கள் மிகுந்திருந்தன. இந்த வயல்கள் செங்கழுநீர் பூத்திருக்கும். நெல்லறுக்கும் முன் தண்ணுமைப் பறையை அடிப்பர். இவ்வோசைக்கு அஞ்சிப் பறவைகள் பொய்கைகளுக்கும் சோலைகளுக்கும் மாறி மாறிச் செல்லும்.

இவ்விரு சிறுகுடி தவிர மற்றொரு ஊரை ஆதிஅருமன் என்பவன் ஆட்சி புரிந்துள்ளான். நக்கீரர் "மூதில் அருமன் பேரிசைச் சிறுகுடி" (நற். 367) எனக் கூறுவதிலிருந்து இதனை அறிய முடிகிறது. இங்குப் பனை மரங்கள் மிகுதியாக இருந்தன. இம்மரங்களிலிருந்து இறக்கப்படும் கள்ளைக் குடித்தவர்கள் திரும்ப வரும்போது பனைமரத்தின் நுங்குகளோடு திரும்புவர்.

எனவே சிறுகுடி என்னும் பெயரில் அமைந்த மூன்று ஊர்களும் வேறுவேறு பகுதிகளில் அமைந்திருந்தன என்பதையும் இவற்றை ஆட்சி புரிந்த தலைவர்கள் வேறுவேறானவர் என்பதும் அறியமுடிகிறது.

**செல்லூர்**

சங்க காலத்தில் இவ்வூர் செல்லூர், செல்லி என்னும் பெயர்களால் அழைக்கப்பட்டது. இதன் தலைவன் ஆதன் எழினி என்பவன். இவன் 'செல்லிக்கோமான்' என அழைக்கப்பட்டான். செல்லூருக்குக் கிழக்கே கோசர்கள் வாழ்ந்த நியமம் எனும் ஊரும் அதற்கப்பால் கடலும் இருந்தது என மருதனிளநாகனார் (அகம். 90) பாடியுள்ளார். செல்லூரில் அருந்திறல் கடவுள் உள்ளதாகவும் இவ்வூர் நீங்காத வேள்வித் தீ உடையது என்றும் மன்னர்களின் குடியை அழித்த பரசுராமன் அரிதாக முயன்று மிகவும் காவலுடைய அழகிய வேள்வித் தூணை நிறுவினான் என்றும் கூறுவதை,

> "கெடாத் தீயின் உருகெழு செல்லூர்க்
> கடாஅ யானைக் குழூஉச்சமந் ததைய
> மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்
> முன்முயன் றரிதின் முடித்த வேள்வி"[59]

என்னும் பாடல்வழி அறியலாம்.

செல்லூர் துளு நாட்டு ஊர் என மயிலை சீனி. வேங்கடசாமி[60] கூறுவார். இந்த ஊரைக் குறிப்பிடும்போது மலைவளம் கூறாததால் இது சோணாட்டைச் சேர்ந்தது என்கிறார் ரா. ராகவையங்கார்[61]. இந்த ஊர் சோழநாட்டில் இருந்தது என்னும் கருத்தே ஏற்புடையதாக உள்ளது. செல்லூர் கடற்கரை அருகே உள்ளதால் துளு நாட்டு ஊர் என்பது பொருந்தாததாக உள்ளது. ஏனெனில் செல்லூருக்குக் கிழக்கே கடல் உள்ளதென அகம் (90, 216) கூறுகிறது. எனவே வங்கக் கடற்கரையோரமே இருத்தல் வேண்டும். சோழநாட்டில் கோசர் வாழ்ந்த நியமம் என்னும் ஊருக்குக் கிழக்கில் இச்செல்லூர் அமைந்திருக்க வேண்டும். எனவே இன்றைய நாகப்பட்டினம் மாவட்டத்தில் செல்லூர் இருக்கக்கூடும்.

**தலையாறு**

தலையாறு பொதியில் மலைச் சாரலில் அமைந்த ஊராகும். இதன் தலைவனாகக் கடையெழு வள்ளல்களில் ஒருவனான ஆய் அண்டிரன் விளங்கினான். இவன் பரிசில் கருதி வந்த இரவலர்க்கு அவர் கல்வியில் வல்லாராயினும் அல்லாராயினும் கலம் நிறைய உணவளிப்பான். இவ்வூர் அமைந்திருந்த மலைப்பகுதியில் மூங்கில் செழித்து வளர்ந்திருக்கும். இம்மூங்கில் கணுக்களுக்கு இடையேயுள்ள பகுதி தலைவியின் தோள்களுக்கு உவமையாகச் சொல்லப்படுகின்ற இடத்தில் புலவர் இவ்வூரைக் குறிப்பிடுகிறார்.

> "ஆஅய் கானத்துத்
> தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
> வேயமைக் கண்கடை புரைஇ"[62]

எனும் பாடலில் பரணர் பாடியுள்ளார்.

**திருவெஃகா**

காஞ்சிபுரத்திலிருந்து இரண்டு கல் தொலைவில் அமைந்துள்ளது. சங்க காலம் முதல் இப்பெயருடனே திகழ்கிறது. இது திருமால் கிடந்த கோலத்தில் எழுந்தருளிய தலமாகும். பாம்பணையாகிய பள்ளியில் துயில் கொண்ட திருமாலின் திருவெஃகா எனப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

“வெ.்.கல் என்றால் விருப்பம் என்றும் வெ.்.குதல் என்றால் விரும்புதல் என்றும் பொருள் இருப்பதால் பெருமகிழ் இருக்கையாகிய அவ்விடம் விருப்பம் தருவது. விரும்பி உறைவதற்கேற்ற இடம் என்ற கருத்தில் வெ.்.கா எனப் பெயர் பெற்று திரு என்னும் முன்ஒட்டுடன் இணைந்து திருவெ.்.கா என நாளடைவில் வழங்கி இருக்கலாம்”[63] என ஆர். ஆளவந்தார் கூறுகிறார்.

திருவெ.்.கா சூரிய ஒளிபுகமுடியாத அளவு நெருங்கி இளமரச்சோலைகளைக் கொண்டிருந்தது. இங்குக் குயில்கள் பறந்தபடி இருக்கும். இங்குள்ள நீர்த்துறைகளில் நீர் தேங்கியிருக்கும். இச்சோலைகளுக்கு வந்து மக்கள் தன் பொழுதைக் கழிப்பர். இங்கு இயற்கை எழில் கொஞ்சுவதைக் காணமுடியும். மேலுலகத்தைப் போன்ற பூக்கள் மலிந்த பெருந்துறையாக இருந்ததால் ‘பூமலி பெருந்துறை’ எனப்பட்டது.

“நாளும்

பெருமகிழ் இருக்கை மரீஇ .....

பொய்யா மரபின் பூமலி பெருந்துறை”[64]

எனவரும் பெரும்பாணாற்றுப்படை வரிகள் இந்நீர்த்துறையையும் இங்கு உறையும் பெருமாளையும் விதந்தோதுகின்றன. இந்த வெ.்.கா தலத்தில் பாயும் ஆறு வெ.்.கா என வழங்கப்பட்டு தற்போது வேகவதியாறு என்றழைக்கப்படுகிறது. இத்தலம் தற்போது யதோத்தகாரி எனப்படுகிறது. பிரமன் செய்த தவத்தைக் கெடுக்க அவன் மனைவியான கலைமகள் வெ.்.கா என்னும் ஆற்று வடிவில் வந்ததாகவும் ஆற்று வெள்ளத்தைத் தடுக்கத் திருமாலைப் பிரமன் வேண்டிக் கொண்டதாகவும் திருமால் ஆடையற்ற கோலத்தில் தோன்றி அணையைப்போலப் பள்ளி கொள்ள, மாமனார் செயல் கண்ட கலைமகள் நாணித் தன் போக்கை மாற்றிக் கொண்டாள் எனவும் காஞ்சித் தல வரலாறு கூறுகிறது.

சங்க காலத்தில் இந்த ஆறு பாய்ந்த போக்கு வேறு, தற்போது வேகவதியாறு பாய்ந்து வரும் போக்கு வேறு என இராசமாணிக்கனார்[65] விரிவாக விளக்குகிறார்.

**தேனூர்**

மதுரை மாவட்டத்தில் திருவேடகத்துக்கு அருகில் உள்ள ஊரே தேனூர் என உ.வே.சாவும், இத்தேனூரே சங்க காலத் தேனூர் என ஔவை சு. துரைசாமிப்பிள்ளையும் தன் உரைகளில் கூறுகின்றனர். இத்தேனூர் 'ஜனநாத சதுர்வேதி மங்கலம்' என்று அழைக்கப்பட்டதென ரா.பி. சேதுப்பிள்ளை[66] கூறுகிறார். இன்றைய குற்றாலம் என்னும் கருத்தும் உள்ளது. எனினும் மதுரைக்கருகிலுள்ள தேனூரே சங்க காலத் தேனூராக இருத்தல் வேண்டும். இது பாண்டியர்களின் ஊர் என ஐங்குறுநூறு கூறுகிறது. கோடை காலத்திலும் குளிர்ந்த நீர்வளம் பொருந்தியதாக இருந்தது. (ஐங். 54). ஆம்பல் மலர்களால் அழகு பெற்று விளங்கும் கழனிகளை உடையது இவ்வூர் (ஐங். 57). இங்குக் கரும்பாட்டும் ஆலையானது களிறின் பிளிற்றொலிக்கு இணையாக ஒலிக்கும்.

> "கரும்பி னேந்திரங் களிற்றெதிர் பிளிற்றுங்
> தேர்வண் கோமான் றேனூ ரன்ன"[67]

என ஐங்குறுநூற்றுப் பாடல் புலப்படுத்துகிறது.

**நல்லூர்**

"நல்லூர் எனும் ஊர்ப்பெயர் நன்மை என்ற பண்பை உணர்த்தும் சொல்லை அடிப்படையாகக் கொண்டு பெயர் பெற்றிருக்க வேண்டும். சூழ்ந்துள்ள ஊர்களைவிட நீர்வளம், நிலவளம், மக்கள் மனவளம் போன்றவற்றில் நல்ல ஊர் என்ற குறிப்பில் நல்லூர் என்ற பெயர் அமைந்திருக்கலாம்"[68] என ஆர். ஆளவந்தார் குறிப்பிடுகிறார். சங்க காலத்தில் இரண்டு நல்லூர்களைக் காணமுடிகிறது. பேகனுக்குரிய ஊர் நல்லூர் எனப் பரணர் (புறம். 144) குறிப்பிடுகிறார். இந்த ஊர் முல்லைக் கொடிகளால் சூழப்பட்ட வேலியை உடையதாக இருந்தது. முல்லை கற்புக்குரிய மலர் என்பதால் பேகனும் இல்லறத்தில் நேர்மையுடன் ஈடுபட வேண்டும் என அறிவுறுத்துமிடத்தில் இவ்வூர் பெயர் எடுத்தாளப்படுகிறது.

சிறுபாணாற்றுப்படை பாடிய நத்தத்தனாரின் ஊர் நல்லூர் ஆகும். இது இடைக்கழி நாட்டில் (செங்கல்பட்டு மாவட்டம்) அமைந்திருந்தது. இந்த ஊர்

சங்கப் பாடல்களில் இடம்பெறவில்லை. புலவர் பெயரால் அறியப்படும் ஊர்களில் ஒன்றாக இடைக்கழிநாட்டு நல்லூரும் ஒன்று. பின்னாட்களில் நல்லூர் என்னும் பெயரை முன்ஒட்டாகவும் பின்ஒட்டாகவும் வைக்கும் போக்கு பெருகியது.

**நாலூர்**

நாலூர் என்னும் ஊரில் கோசர்கள் வாழ்ந்தனர். இவர்கள் வாய்மை தவறாதவர்களாகக் கருதப்பட்டனர். இதனை, 'நாலூர்க் கோசர் நன்மொழி' எனக் குறுந்தொகை (15) கூறுகிறது. ஔவை துரைசாமிப்பிள்ளையவர்கள் நாலை என்னும் ஊரே நாலூர் என மருவிற்று (புறம். 179) என்கிறார். இந்த நாலை என்னும் ஊருக்கு நாலைக்கிழவன் நாகன் என்பவன் தலைவனாகத் திகழ்ந்தான். இவன் படை வேண்டுமிடத்து வாட்போரையும் வினை வேண்டுமிடத்து நடுநிலையோடுள்ள அறிவுரையையும் நல்குபவனாகத் திகழ்ந்தான் என வடநெடுந்தத்தனார் குறிக்கிறார். இந்த ஊர் தற்போதைய விருதுநகர் மாவட்டம் அருப்புக்கோட்டைக்கு அருகில் அமைந்துள்ளது.

**நியமம்**

சங்க காலத்தில் நியமம் என்னும் ஊர் கோசர்களுக்கு உரியதாகப் பேசப்படுகிறது. இது செல்லூருக்குக் கிழக்கில் இருந்தது. இவ்வூரில் வாழும் கோசர்கள் அஞ்சாமை உடையவர்கள் என்பதை "வடுவுடை முகத்தர், கடுங்கண் கோசர் நியமம்" (அகம். 90) என்னும் இவ்வரிகள் உணர்த்துகின்றன. இவ்வூரில் கொடிகள் காற்றில் அசைகின்ற கடைத்தெருக்களை உடையது (நற். 145: அகம். 83)) நியமம் என்பதற்கு நகரம் அல்லது இடம் என்பது பொருளாகும். எனவே பின்னாளில் பல இடங்களுக்கு இப்பெயர் அமைந்தது.

**நீடூர் (நீழல்)**

நாகப்பட்டினம் மாவட்டம் மயிலாடுதுறைக்கு அருகே நீடாமங்கலம் எனும் பெயரில் இன்று அழைக்கப்படுகிறது. சங்க காலத்தில் இதன் தலைவனாக வேள் எவ்வி விளங்கினான். இவன் "யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்" (அகம். 266) என அழைக்கப்பட்டான். பசும்பூண் பாண்டியனின் படைத்தளபதியாகப் பணியாற்றினான். எவ்வி குடி தொல்குடி எனக் கபிலர்

(புறம். 202) கூறுவார். இது வளமான ஊராகும். இங்கு நரைத்த முதியோர் சண்டையிடும் மக்களை விலக்கித் தேறலை பருகக் கொடுப்பர் (அகம். 366).

### நீர்கூர்

பண்டைக் காலத்தில் கொல்லிமலைப் பகுதியில் நீர்கூர் எனும் ஊர் இருந்தது. பெருஞ்சேரல் இரும்பொறை தகடூர் அதியமானை நீர்கூர் என்னுமிடத்தில் தாக்கினான். அதியனுக்குச் சோழ பாண்டியர் உதவினர். எனினும் பெருஞ்சேரல் வெற்றி பெற்றான். சோழ, பாண்டியரின் முரசு, குடை போன்றவற்றைக் கைப்பற்றிக் கொண்டான். தன் வெற்றிக்கு அறிகுறியாகப் போர்க்களத்தில் களவேள்வி செய்தான். அதியமானின் மகளிர் வருந்தும்படி அவன் வலிமையைக் கெடுத்து அழித்தான். இதனை,

"கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்
பல்வேற் றானை யதிக மானோ
டிருபெரு வேந்தரையும் முடனிலை வென்று"[69]

என்னும் பதிக வரிகள் புலப்படுத்துகின்றன.

### நெடுந்தெரு

இது சோழநாட்டு ஊராகும். இந்த ஊர் அழகு பொருந்திய நெடிய வழியினை உள்ளடக்கியதாக இருந்ததை, "நெடுந்தெரு அன்ன நேர்கொள் நெடுவழி" (நற். 161) என்னும் பாடலடி காட்டுகிறது. இவ்வூரைப் பற்றிய வேறு குறிப்புகள் இல்லை.

### நெய்தலங்கானல்

சோழன் இளஞ்சேட் சென்னிக்குரிய ஊராக நெய்தலங்கானல் திகழ்ந்தது. இது புகாருக்கு ஐந்து கல் தொலைவில் நெய்தல்வாசல் (நெய்வாசல்) என்னும் பெயரில் உள்ளது. இவ்வூர் மக்கள் ஒரு தொழிலைச் செய்தவிடத்து பின் அது பிழையாயிற்று எனக் கருதாத நன்மையான செயல்களையே செய்யும் திறனுடையவர் என்பதை

"செய்திரங்கா காவினைச் சேண்விளங்கும் புகழ்
நெய்தலங் கான னெடியோய்"[70]

என்னும் இப்பாடல் வாயிலாக ஊன்பொதி பசுங்குடையார் பாராட்டுகிறார்.

## நேரி

நேரி மலைப்பகுதியாக இருந்தது. இது சேரர்களுக்குரியது. இன்றைய சபரிமலையே சங்க கால நேரி மலை என்பர். இங்கு கள் மிகுதியாகக் கிடைக்கும். பக்க மலைகளுடன் விளங்கிய இந்நேரி மலையில் அருவி ஒலித்துக் கொண்டிருப்பதை "நீர் இமிழ் சிலம்பின் நேரி" (பதிற். 40) என்னும் பாடலடி உணர்த்தும். இம்மலையில் தெய்வம் விரும்பி உறையும். இங்குக் காந்தள் மலர்கள் மிகுதியாக இருக்கும். நெடிய உயரமான கற்களைக் கொண்டதாக விளங்கியது இம்மலை.

## நேரிவாயில்

இன்றைய உறையூருக்குத் தெற்கேயுள்ள தென்னூரே சங்க கால நேரிவாயிலாகும். சோழர் குடியிலுள்ள தாயாதி அரசர்களிடையே தொடர்ந்து போரும் பூசலும் ஏற்பட்ட வண்ணம் இருந்தது. இந்நிலையில் கிள்ளி வளவன் சோழ நாட்டின் வேந்தனாக முடிசூட விரும்பினான். இதனைச் சோழர்குடித் தாயாதிகள் ஒன்பது பேரும் கிள்ளிவளவனுக்கு எதிராகப் போருக்கு எழுந்தனர். இப்போரில் கிள்ளிவளவனுக்கு உதவும்பொருட்டுக் கடல்பிறக்கோட்டிய செல்கெழுகுட்டுவன் நேரிவாயிலில் வந்து படையொடு தங்கினான். இப்போரில் ஒன்பது தாயாதிகளையும் அழித்துக் கிள்ளிவளவனை வேந்தனாக முடிசூட்டினான் செல்கெழுகுட்டுவன் (பதிற். பதிகம். 3) எனப் பதிற்றுப்பத்து நேரிவாயிலை 'வாயிற் புறம்' எனக் குறிக்கிறது.

## பருவூர்ப் பறந்தலை

பருவூர் சோழநாட்டு ஊராகும். இது விருத்தாசலம் பகுதியில் அமைந்த ஊராகலாம். இதனை அஃதை தந்தை ஆட்சி செய்தான். இவ்வூர் வெண்ணெல் விளையும் கழனிகளைக் கொண்டிருந்தது. இவ்வூரின்மீது சேர, பாண்டியர் போர்தொடுத்து வந்தனர். இவ்வேந்தர்களை அழித்து, அவர்களின் யானைகளைக் கவர்ந்து கொண்டான் அஃதை தந்தை. இச்சோழன் பெயர்

குறிப்பிடப்படவில்லை. அஃதை என்ற பெண்ணின் தந்தை என்றே குறிக்கப்படுகிறான்.

"யஃதை தந்தை
அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்
வெண்ணெல் வைப்பிற் பருவூர்ப் பறந்தலை
இருபெரு வேந்தரும் பொருதுகளத் தொழிய"[71]

என்னும் அகப்பாடல் இந்நிகழ்ச்சிகளைப் பதிவு செய்துள்ளது.

பவத்திரி

ஆந்திர மாநிலத்தில் நெல்லூர் மாவட்டத்துக் கூடூர் வட்டத்தில் கடலுக்கருகில் அமைந்துள்ள ரெட்டி பாளையம் என்னும் சிற்றூரே சங்ககாலப் பவத்திரி ஆகும். இது பல சோலைகளைக் கொண்டு எழிலுடன் விளங்கியது. பவத்திரி திரையர்களுக்குரியதாக இருந்தது. "பொலம்பூட் டிரையன் பல்பூங் கானற் பவத்திரி" (அகம். 340) என்னும் பாடலடி இவ்வூர் தொண்டை நாட்டில் அமைந்திருந்ததைப் புலப்படுத்துகிறது. பழங்காலத்தில் பவத்திரி கோட்டமாகத் திகழ்ந்தது.

"பவத்திரி கோட்டத்துப் பேரூர் நாட்டுப் பண்டரங்கம் உடைய நாயனார்", "கடல் கொண்ட பவத்திரி கோட்டத்துக் காகந்தி மாநகரில் உள்ள பாண்டரங்கீசுவரம்", "இராசேந்திர சோழமண்டலத்து பவ்வத்திரி"[72] என்னும் இவை ரெட்டிபாளையம் அருகேயுள்ள பாண்டரங்கம் என்னும் ஊர்க்கோயிலில் உள்ள கல்வெட்டு வாசகங்கள். இக்கல்வெட்டுகளின் வாயிலாகப் பவத்திரி சங்ககாலத்தில் 'பவ்வத்திரி' என வழங்கியதும் இவ்வூர் பெரிய கோட்டமாக விளங்கியதும் உணரமுடிகின்றது. இன்று தன் பழமையை இழந்து சிற்றூராகத் திகழ்கிறது.

பாரம்

சங்க காலத்தில் பாரம் துளு நாட்டில் அமைந்திருந்தது. எனவே இவ்வூர் நன்னனுக்கு உரியதாக இருந்தது (அகம். 152) இதனை நன்னனின் படைத்தளபதியான மிஞிலி ஆட்சி செய்தான். "பூந்தோள் யாப்பின் மிஞிலி

காக்கும் பாரத்து" (நற். 265) எனும் இவ்வடியானது மிஞிலியால் இவ்வூர் காக்கப்பட்டதை உணர்த்துகிறது. இது இன்றைய கண்ணனூருக்கு வடக்கே 15 கல் தொலைவில் பாரம் என்ற பெயருடனேயே விளங்குகிறது.

### பிசிர்

இது பாண்டிய நாட்டு ஊராகும். இராமநாதபுரம் மாவட்டத்தில் பிசிர்குடி என்னும் பெயரில் வழங்கப்படுகிறது. பிசிர் என்பது கடலலையால் வீசப்படும் நீர்த்திவலைகளைக் குறிக்கும். எனவே நீர்நிலையால் பெயர் பெற்ற ஊர் இது. கோப்பெருஞ்சோழனின் நண்பரான ஆந்தையார் ஊர்ப்பெயரையும் சேர்த்துப் பிசிராந்தையார் என அழைக்கப்பட்டார் (புறம். 67). இவ்வூர் மக்கள் வரகரிசிச் சோற்றில் தயிர் ஊற்றி உண்ணும்போது வேளைக் கீரைப் பொரியலைச் சேர்த்துண்பர். வரகரிசிப் புளிக்கட்டுக் சோற்றுக்கு அவரைக்காய்ப் பொரியலையும் உண்பர். கோப்பெருஞ்சோழன் பிசிரோன் எனப் பிசிராந்தையாரை அழைத்ததை,

"தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளும்
பிசிரோ னென்பவன்"[73]

என்னும் பாடிலடிகள் உணர்த்துகின்றன.

### பிடவூர்

சங்க காலத்தில் பிடவூர் என இரண்டு ஊர்கள் இருந்தன. ஒன்று சோழநாட்டிலும் மற்றொன்று தொண்டை நாட்டிலும் அமைந்திருந்தன. இவ்விரு ஊர்களும் "மணவிற் கோட்டத்துப் புரிசை நாட்டுப் பிடவூர்"[74], "பிடவூர் நாட்டுப் பிடவூர்"[75] எனக் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றன. இவற்றில் புறநானூறு சோழ நாட்டுப் பிடவூரையே குறிக்கிறது. இது உறையூருக்குக் கிழக்கே அமைந்திருந்தது. இதனை நெடுங்கை வேண்மான் என்னும் வேளிர்த்தலைவனும் அவன் மகன் பெருஞ்சாத்தனும் ஆண்டனர். இவ்வூர் மிகுந்த காவலுடையதாக விளங்கியதை, "நெடுங்கை வேண்மா னருங்கடிப் பிடவூர்" (புறம். 395) என்னும் அடி காட்டுகிறது. இன்று திருப்பட்டூர் என மருவி வழங்குகிறது. இவ்வூர் பிடவ மரத்தால் பெயர் பெற்றிருக்கலாம் என ஆளவந்தார் கருதுகிறார்.

**பொறையாறு**

பொறையாறு புறந்தை என்னும் அழைக்கப்பட்டது. தற்போதும் பொறையாறு என்றே வழங்கப்படுகிறது. நாகப்பட்டின மாவட்டம் தரங்கம்பாடி அருகே கடற்கரையோரமாக அமைந்துள்ளது. இவ்வூரைப் பற்றியும் இவ்வூரின் தலைவனான பெரியன் என்பவனையும் உலோச்சனார்[76] தம் பாடல்களில் குறிப்பிடுகிறார். பெரியன் வள்ளலாகவும் வலிமையானவனாகவும் திகழ்ந்தான். இங்குப் புன்னை மரங்கள் மிகுதி. சோலைகளும் இருந்தன. இச்சோலைகளிலுள்ள தாழை முறிந்து விழும்படி நாரைக் கூட்டங்கள் இருந்தன. வேங்கட நாட்டுப் பகுதியில் வற்கடம் ஏற்பட்டதன் காரணமாகக் கல்லாடனார் என்னும் புலவரும் அவர் உறவினர்களும் இடம்பெயர்ந்து வந்து பொறையாற்றில் தங்கினர். இச்செய்தியைக் கல்லாடனாரே தருகிறார். இப்புலவர் பெரியனைப் பொறையாற்றுக் கிழான் (புறம். 391) எனக் குறிப்பிடுகிறார்.

**போஒர்**

திருச்சி – கரூர் சாலையிலுள்ள திருப்போர்ப்புறம் என்ற ஊரே சங்க காலப் போஒர் ஆகும். இவ்வூர் சோழநாட்டில் அமைந்திருந்தது. இதனைப் பழையன் ஆட்சி செய்தான். இவன் 'போஒர் கிழவோன்' என அழைக்கப்பட்டான். சோழர்களின் படைத்தளபதியான இப்பழையன் வேற்படையில் சிறந்தவனாக விளங்கினான். இவ்வூர் காவிரியாற்றின் கரையில் அமைந்த தோட்டங்களையும் நீர் நிறைந்தோடும் மதகுகளையும் உடையதாகத் திகழ்ந்தது. பெரும்பூட்சென்னி கொங்கரைப் பணிய வைக்க முயன்றபோது பழையனே சோழர் படைக்குத் தலைமை தாங்கிச் சென்று வெற்றி பெற்றான். இதனை,

> "கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
> வெண்கோட் டியானைப் போஒர் கிழவோன்
> பழையன் வேல்வாய்த் தன்ன"[77]

என்னும் பாடல் காட்டுகிறது. ஆனால் இவன் நன்னனுடன் செய்த போரில் இறந்தான்.

நெடுஞ்சேரலாதனுக்கும் வேல்ப∴றடக்கை பெருநற்கிள்ளிக்கும் இடையில் நடந்த போர் இவ்வூரிடத்தே நடைபெற்றது. இப்போரில் இருதிறத்தார் படையிலும் ஒருவர்கூட மிஞ்சாது அழிந்தனர். இத்தகைய வரலாற்று நிகழ்வு நடைபெற்ற இடம் போஒர் ஆகும்.

**போந்தை**

போந்தை என்னும் பெயரில் தமிழகத்தில் பல ஊர்கள் உள்ளன. இங்குக் குறிப்பிடப்படும் போந்தை மிளைக் கூற்றத்துப் போந்தை எனக் கல்வெட்டுகளில் (A.R. 5 of 1920) கூறப்படுகிறது என ஔவை துரைசாமிப்பிள்ளை குறிப்பிடுகிறர். சங்க காலத்தில் இதனை நெடுவேள் ஆதன் ஆட்சி செய்தான். இவ்வூர் சோழநாட்டில் இருந்தது. இவ்வூர் ஏர் உழுத வயல்களையும் நெல் நிரம்பிய வீடுகளையும் பொன் நிறைந்த தெருக்களையும் கொண்டிருந்தது. இங்குப் பல மலர்களையும் கொண்ட சோலைகளும் இருந்தன. இதனைப்,

"படுவண் டார்க்கும் பன்மலர்க் காவின்
நெடுவே ளாதன் போந்தை"[78]

எனும் புறப்பாடல் உணர்த்துகின்றது.

**மணற்குன்றம்**

இது சோழநாட்டு ஊராகும். ஆலமுற்றத்திற்கும் புகாருக்கும் அருகில் அமைந்திருந்தது. இவ்வூரில் தலைவி இருந்தாள் எனப் பரணர் பாடுகிறார். "அரிவை இருந்த மணங்கமழ் மறுகின் மணற்பெருங் குன்றே" (அகம். 181) எனும் பாடலால் தலைவியைக் கூறுமிடத்து இவ்வூரைப் பற்றிய குறிப்பு வந்துள்ளது.

**மாங்காடு**

"மாங்காடு என்பது குடகுமலைப் பக்கத்து ஊர் என்பர்"[79]. மாங்காடு என்னும் பெயரில் இன்று சென்னைக்கு அருகில் அம்மன் தலம் உள்ளது. சங்ககால மாங்காடு நெருங்கிய பெரிய பக்க மலைகளையும் அருவிகளையும் கொண்டு பார்ப்போருக்கு அச்சத்தைத் தோற்றுவிக்கும் வகையில் இருந்தது. இங்குக் கன்னித் தெய்வம் காவலிருந்தது. குட்டி ஈன்ற மந்தியின் பசியினை

நீக்கும் பொருட்டுக் கடுவன் பலாப்பழச் சுளையைத் தோண்டினாலும் கன்னித் தெய்வம் துன்பம் தரும். இத்தகைய தெய்வக் காவல் நிறைந்த இடமாக மாங்காடு விளங்கியது.

முதுகுன்றம்

விருத்தாசலம் சங்க காலத்தில் முதுகுன்றம் என்று வழங்கப்பட்டது. இவ்வூரைப் பழமலை எனும் பெயரிலும் அழைத்திருக்கக்கூடும். இங்குக் கோயில் கொண்டுள்ள இறைவன் பழமலைநாதன் என்னும் பெயரில் வணங்கப்படுகிறான். விருத்தாசலம் எனும் வடசொல் தமிழில் பழமலை எனும் பொருளைத் தருகிறது. எனவே பழமலை, முதுகுன்றம் என்னும் பெயர்களில் வழங்கப்பட்டிருக்கக்கூடும். "பழமலை பழங்கள் நிறைந்த மலைப்பகுதி என்ற நிலையில் முதலில் பெயர் பெற்றதாகவும் பின்னர் அது விருத்தாசலம் எனப் பழமை, முதுமை என்ற பொருளில் முதுகுன்றம் என்று வழங்கத் தொடங்கியதாகவும் கூறப்படுகிறது"[80] என்று கே. பகவதி கூறுகிறார். இவ்வூர் தேன் மிக்கதாகவும் கண்ணன் எழினிக்கு உரியதாகவும் விளங்கியதைக் 'கண்ணன் எழினி தேமுது குன்றம்' (அகம். 197) என்னும் இவ்வகப்பாடலில் மாமூலனார் குறிப்பிடுகிறார்.

முள்ளூர்

முள் நிறைந்த மலையை உடைய ஊராதலின் இது முள்ளூர் எனப் பெயர் பெற்றது. இவ்வூர் திருக்கோயிலூர் வட்டத்தில் பெண்ணையாற்றிற்குத் தென்மேற்கே அமைந்துள்ளது. சங்க காலத்தில் மலையமான் திருமுடிக்காரிக்கு உரியதாக இருந்தது இம்முள்ளூர்க்காடு. இருள் செறிந்த காட்டையும் ஒலியுடைய அருவியையும் மணம் வீசும்படியும் இருந்தது. இவ்வூரில் ஆரியருக்கும் மலையமானுக்கும் போர் நடந்தது. இப்போரில் ஆரியர் படை தோற்றோடியது. இதனை,

"ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலரும் கழித்த ஒள்வாள் மலையினது
ஒருவேற்கு ஓடி யாங்கு"[81]

என்னும் நற்றிணைப் பாடல் விளக்குகிறது. காரியின் மகனான சோழிய ஏனாதி திருக்கண்ணன் முள்ளூர் மலையில் ஒளிந்துகொண்ட சோழனை மீண்டும் அரியணை ஏறச் செய்தான். (புறம். 174).

**மையல்**

சங்க காலத்தில் இவ்வூர் வையை ஆற்றுக்கருகில் அமைந்திருந்தது. இதன் தலைவனாக மாவன் என்பவன் விளங்கினான். இவன் பூதப்பாண்டியன் நண்பர்களுள் ஒருவன். வையையாற்றின் கரையில் இருந்ததால் வளமான ஊராக விளங்கியது. இதனை,

"வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவன்"[82]

எனப் பூதப்பாண்டியன் புகழ்கிறான். இது பின்னாளில் பாண்டிய நாட்டோடு இணைக்கப்பட்டது.

**வல்லம்**

வல்லம் என்பது வளமையான கோட்டையைக் குறித்துப் பின் ஊருக்குப் பெயராக அமைந்தது. வேலூர் மாவட்டத்தில் ஆற்காடு வட்டத்தில் திருவல்லம் எனும் ஊரும் தஞ்சைக்கருகே ஏழு கல் தொலைவில் வல்லம் என்னும் ஊரும் என இரண்டு ஊர்கள் காணப்படுகின்றன. இதனை ரா.பி. சேதுப்பிள்ளை "வட ஆற்காட்டிலும் திருவல்லம் பாண மன்னர்களுக்குரிய கோட்டையாக விளங்கியது. இது சிறந்த படைவீடாகப் பத்தாம் நூற்றாண்டில் விளங்கியதைச் சாசனங்களால் அறியலாம் என்றும் தஞ்சைக்கருகே உள்ள வல்லம் அழிந்த அகழிகளேயன்றி அதன் பழமையை அறிவதற்குரிய அடையாளம் ஒன்றும் இல்லை என்றும் தஞ்சையைச் சோழர் தலைநகரமாகக் கொள்வதற்கு முன்னே கள்ளரில் ஒரு வகுப்பாருடைய கோட்டையாக இருந்தது"[83] என்றும் கூறுகிறார். எனவே சங்க இலக்கியம் குறிப்பிடும் வல்லம் தஞ்சைக்கருகேயுள்ள ஊராகும். இங்கு நெற்கதிர் நெடியதாக வளர்ந்து விளையுளைத் தரும். இவ்வூரினைச் சோழரின்கீழ் வல்லம் கிழவோன் என்பவன் ஆண்டான். இதனைச் "சோழர் மருகன் நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்" (அகம். 356) எனும் பாடலடி காட்டுகிறது. விற்படை நெருங்கிய அரணுடையதாக இவ்வூர் விளங்கியது. இங்குள்ள

காவற்காட்டின்மீது ஆரியர் படையெடுத்து வந்து தோற்றோடினர் என பாவைக் கொட்டிலார்[84] எனும் புலவர் பாடுகிறார்.

**வல்லார்**

வல்லார் என்பது பண்ணனின் ஊராகும். இவன் சிறுகுடிக் கிழான் பண்ணனின் வேறானவன். இவ்வூர் அரண் சூழ்ந்து, புலால் நாறுகின்ற அம்புடைய மறவர்களையும் கொண்டு அரிய காவற்காட்டுடன் திகழ்ந்தது. இதனை,

"பெருங்குறும் புடுத்த வன்புல விருக்கை
புலாஅ வம்பிற் போரருங் கடிமிளை
வலாஅ ரோனே வாய்வாட் பண்ணன்"[85]

என்னும் இப்புறப்பாடல் வாயிலாக அறியமுடிகிறது. இவ்வூர் சோழ நாட்டு ஊராகலாம்.

**வாட்டாறு**

வாட்டாறு வாட்டாத்திக் கோட்டை என வழங்கிப் பின்னர் வாட்டாத்திக் கோட்டை, வட்டக்கோட்டை என மருவி வழங்கப்படுகிறது. இது கன்னியாகுமரி மாவட்டத்தில் அமைந்துள்ளது. இதன் தலைவனாக எழினி ஆதன் விளங்கினான். இவன் அறிவு வேண்டுவோர்க்கு அறிவுத்துணையும் வினை வேண்டுவோருக்குப் படையும் கொடுக்கும் இயல்பினனாக இருந்தான். வாட்டாறு என்பது நீர்வளம் சிறந்த ஊராக இருந்தது. நீரின் கீழே மீன்களும் மேலே குவளை, தாமரை மலர்களும் காட்சியளிக்கும். வயல்களில் நெல் விளைந்திருக்கும். இந்நெல்லைக் கவர கிளி முதலிய பறவைகள் வரும். இவை பறையொலி கேட்டு அஞ்சியோடும். இப்பறவைகளும் இவ்வூரின் கடற்கரையருகே நாரைக் கூட்டங்களும் பறந்தபடி இருப்பதால் ஊரே கவின்மிகு காட்சியுடன் திகழும். இதனை,

"கழிமுற்றிய விளைகழனி
அரிபறையாற் புள்ளோப்புந்து
........ ...........

வளநீர் வாட்பிற் றெழினி யாதன்”[86]

எனும் பாடலால் காணமுடிகிறது.

**வியலூர்**

வியலூர் துளு நாட்டில் இருந்த ஊராகும். “மிளகு வளர்வதும் யானை மிகுதியுள்ளதும் ஒருங்கேயிருப்பது மேல் கரையிலேயாகும். எனவே இது பாலி அல்லது குடகு நாட்டகத்தது”[87] என கா. அப்பாதுரையார் கூறுகிறார். இது நன்னனுக்குரிய ஊர் எனக் கூறுவதால் இது துளுநாட்டு ஊர் என்பது தெளிவாகும். சேரநாட்டை ஒட்டி அமைந்திருந்தது எனக் கருதலாம். இது ‘சிறுகுரல் நெய்தல் வியலூர்’, ‘வயலை வேலி வியலூர்’, ‘விரிநீர் வியலூர்’, எனப் புகழ்ந்துரைக்கப்படுகிறது. வயலைக்கொடி படர்ந்திருந்த பகுதி வியலூர் எனப் பெயர்பெற்றது. சேரநாட்டை ஒட்டி அமைந்திருந்ததால் இதனைக் கடல்பிறக்கோட்டிய செல்கெழு குட்டுவன் அழித்தான்.

“உறுபுலி அன்ன வாயவ் வீழச்
சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி”[88]

என்னும் இப்பதிக வரிகள் வாயிலாகச் சேரனால் வியலூர் அழிக்கப்பட்டது அறிய முடிகிறது.

**விளங்கில்**

திருவாங்கூர்ப் பகுதியில் நெய்யாற்றங்கரையருகே உள்ள ஊரே விளங்கில் ஆகும். இது விளப்பில் என மருவி வழங்குகிறது. இந்த ஊர் மிக்க வண்மையுடைய கடலன் என்பவனுக்குரியதாக இருந்தது. “மாவண் கடலன் விளங்கில்” (அகம். 81). இதனை மாந்தரஞ்சேரல் கைப்பற்றிக் கொண்டான். இவ்வெற்றியைப் பொருந்தில் இளங்கீரனார் புகழ்ந்து பாடினார். எனினும் கபிலர் இல்லையே என இச்சேரன் வருந்தினான். சிலகாலம் கழித்துப் பகைவர் இவ்வூரைக் கைப்பற்ற முயன்றனர். மாந்தரஞ்சேரல் அம்முயற்சியைக் கெடுத்தான். இந்த ஊர் உயர்ந்த மாடங்களைக் கொண்டதாகவும் இருந்தது (புறம். 53).

**வீரை**

புதுச்சேரி அருகேயுள்ள வீராம்பட்டினமே சங்க கால வீரை ஆகும். இது தித்தனுக்குரிய ஊராக இருந்தது. உறையூரைக் கைப்பற்றிய தித்தன் இவனேயாவான். இவன் வேளிர்த் தலைவனாவான். இவ்வூர் கடற்கரை அருகே அமைந்திருந்தது. இங்குக் கடல்நீர் படிந்து இருந்தது. இக்குவியல்கள் பெருமழை பெய்வதால் கரைந்தோடும். இதனை,

"அடுபோர் வேளிர் வீரை முன்துறை
நெடுவேள் நெப்பின் நிரம்பாக் குப்பை
பெரும்பெயற்கு உருகி யாங்கு"[89]

என்னும் பாடல் புலப்படுத்துகிறது. இவ்வூரில் பிறந்த புலவர் வீரை வெளியனார் எனப்பட்டார்.

**வெண்குடை**

பாலக்காடு அருகே வெங்கொடி என்னும் சிற்றூரே சங்ககாலத்து வெண்குடை ஆகும். இதனை ஏனாதி திருக்குட்டுவன் ஆட்சி செய்தான். இவன் சிறந்த வில் வீரன். இவன் வழியினர் இன்றும் குட்டுவன் வீட்டார் என்றே அழைக்கப்படுகின்றனர். தழைத்த கதிர்கள் பொருந்திய வயல்கள் நிறைந்த ஊராக வெண்குடை விளங்கியதை, "ஒலிகதிரீக் கழனி வெண்குடை" (புறம். 394) என்னும் பாடலடி காட்டுகிறது.

**வெண்ணி**

இவ்வூர் தற்போது திருவாரூர் மாவட்டத்தில் கோயில்வெண்ணி என வழங்கப்படுகிறது. "வெறுந்தரை அல்லது மணற்பாங்கான தரை என்று பொருள்படும் வெண்ணி எனும் வகையான நிலப்பகுதியில் அமைந்த ஊருக்குப் பெயராயிற்று"[90]. இவ்வூரின் வாயிலையடுத்த வெளியில் போர் நடந்ததால் வெண்ணி வாயில் எனவும், போர் நடைபெற்ற இடமாதலால் வெண்ணிப் பறந்தலை எனவும் வழங்கப்பட்டது. சங்க காலத்தில் நடைபெற்ற போர்களில் முக்கியத்துவம் வாய்ந்த போராக இவ்வெண்ணிப்போர் இருந்தது.

இங்குக் கரிகாலன் தன் பகைவர்களோடு போரிட்டு வென்றதைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம்.

முதல் வெண்ணிப் போரில் முதலாம் கரிகாலன் இருபெரு வேந்தரையும் பதினோரு வேளிரையும் முறியடித்தான். பகையரசர்கள் போர்க்களத்திலேயே தம் முரசுகளை விட்டோடினர். இப்போர்க் காட்சியை,

“காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழிசை முரசம் பொருகளத் தொழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி யறுத்த ஞான்றைத்
தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும்”[91]

எனப் பரணர் இவ்வெற்றிக்கு அழுந்தூரே ஆர்ப்பரித்தது எனக் கூறுகிறார். எனவே அழுந்தூர் வெண்ணிக்கு அருகேயிருந்த சோழர் தலைநகரமாகும். முதலாம் கரிகாலன் வலிமை பெற்று வளரத் தொடங்கிய காலத்தில் இப்போர் நடைபெற்றிருக்க வேண்டும். இவ்வெற்றியைப் பொருநராற்றுப்படையும் (144 – 148) புகழ்கிறது.

இரண்டாம் கரிகாலன் காலத்திலும் இங்குப் போர் மூண்டது. சேரன் பெருஞ்சேரலாதன் சோழ நாட்டின்மீது போர்தொடுத்து வந்தான். இப்போர் வெண்ணிப் பறந்தலையில் நடைபெற்றது. கரிகால் வளவனின் வாள் பெருஞ்சேரலாதனின் மார்பைத் துளைத்து முதுகுவரை சென்றது. இது புறப்புண் ஆகும் என நாணி இச்சேரன் போரை நிறுத்தி வடக்கிருந்தான். சேரனின் வீரமும் மானத்தின் பொருட்டு மாளத் துணிந்த விவேகமும் தமிழகமெங்கும் பரவியது. இப்பெருஞ்சேரலாதனைக் காணும் பொருட்டு சான்றோர்கள் விரைந்து வந்தனர். மன்னனுடன் தாங்களும் வடக்கிருந்து உயிர்விட்டனர். இச்செயலால் தமிழகமே செய்வதறியாது திகைத்தது. இதனை மாமூலனார்[92], வெண்ணிக் குயத்தியார்[93] முதலான புலவர்கள் பாடியுள்ளனர்.

### வெண்மணி

முத்து என்னும் பொருளுடையது வெண்மணி என்னும் சொல். இது மத்திக்குரியதாக இருந்தது. கழாரும் மத்திக்கு உரியது என்பதால் இவ்விரு ஊர்களும் அருகருகே இருந்திருக்கக்கூடும். இது கடற்கரையருகே சிறிய துறைமுகத்தைக் கொண்டிருந்தது. சோழனின் ஆணைக்கிணங்க மத்தி, எழினி என்பவனின் பல்லைப் பிடுங்கி வெண்மணியின் கோட்டை வாயிற் கதவில் பதித்தான். இவ்வெற்றியின் காரணமாகக் கடற்கரையில் ஒரு கல்லையும் நட்டான்.

"கல்லா எழினி பல்லெறித் தழுத்திய
வன்கண் கதவின் வெண்மணி வாயில்
மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை
நீரொலித் தன்ன"[94]

என்னும் பாடல் இதனை விளக்குகிறது.

### வெளியம்

இந்த ஊர் புன்னாட்டில் அமைந்திருந்தது. இதனைச் சேரர்களின்கீழ் ஆஅய் எயினன் ஆட்சி செய்தான். இவன் சேரரின் படைத்தளபதியாகவும் விளங்கினான். இவ்வூர் அழகுடன் விளங்கியதால் தலைவியில் அழகுக்கு உவமைப்படுத்தப்பட்டுள்ளது[95]. "வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்" (அகம். 208) எனும் பாடலடி எயினனுக்குரிய வெளியம் எனக் கூறுகிறது.

### வேம்பி

வேப்ப மரத்தின் பெயரால் அமைந்த ஊராகும். இது வேம்பற்றூர் என வழங்கித் தற்போது வேப்பத்தூர் என அழைக்கப்படுகிறது. இதன் தலைவனாக முசுண்டை விளங்கினான். இவன் இரவலர்க்கு மிக்க உணவும் நீண்ட தேரினை யானையுடன் அளிக்கும் வள்ளலாக விளங்கினான். இவ்வூர் தலைவியின் அழகுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. "பல்வேல் முசுண்டை வேம்பி யன்னவென் நல்லெழில்" (அகம். 249) பாடலடியால் அறியலாம்.

### வேளூர்

நாகப்பட்டின மாவட்டத்தில் உள்ள கீழ்வேளூரே சங்க கால வேளூர் ஆகும். இது கீவளூர் எனவும் வழங்குகிறது. இவ்வூர் கள் வளமும் நெல்வளமும் நிறைந்தது. நல்ல மரங்கள் குழுமியிருக்கும் இடத்திலுள்ள பல நாளும் வடிக்கப்பெற்ற புளித்த கள்ளுள்ள சாடியைக் கள் விற்போர் முகக்கும்போது கலம்பட்டு சாடி உடைந்துபோகும். அப்போது விரவிய மழைத்துளிபோலத் தெருவெல்லாம் கள்ளின் துளிகள் துளிர்க்கும் கல்வளமும் பழமையான பலவகை நெல்வளமும் கொண்டதாக வேளூர் விளங்கியதை,

"மயங்கு மழைத் துவளையின் மறுகுடன் பனிக்கும்
பழம்பல் நெல்லின் வேளூர் வாயில்"[96]

எனும் பாடல் விளக்குகிறது.

மேற்கூறிய ஊர்ப்பெயர்கள் மட்டுமல்லாது வேந்தர்கள் தொடர்பான ஊர்களும் புலவர்களுக்குத் தொடர்புடைய ஊர்களும் தெரிய வருகின்றன. இவை சங்கப் பாடல்களில் பயின்று வரவில்லை எனினும் பெயரின் முன்னால் வருகின்றன. வேந்தர்கள் வெற்றி பெற்ற இடங்களும் இறந்த ஊர்களும் அவர்களின் பெயரின்முன் வருகின்றன. அவ்வாறு இலவந்திகைப் பள்ளி, காரியாறு, குராப்பள்ளி, குளமுற்றம், கோட்டம்பலம், சிக்கற்பள்ளி, சித்திரமாடம், பாமுளூர், பூஞ்சாத்தூர், வெள்ளியம்பலம் முதலான ஊர்கள் இடம்பெற்றுள்ளன.

புலவர்கள் தாம்பிறந்த ஊர்ப்பெயரோடு இணைத்தே அழைக்கப்பட்டனர். இதனால் சில ஊர்ப்பெயர்களை அறிய முடிகிறது. அவ்வாறு அஞ்சில், ஆடுதுறை, ஆலங்குடி, ஆலத்தூர், ஆலம்பேரி, இளம்புல்லூர், உரோடகம், உவர்க்கண்ணனூர், எருக்காட்டூர், எருக்காம்பூர், எறிச்சலூர், ஏணிச்சேரி, ஏறை, ஐயாதி, ஐயூர், ஒக்கூர், கச்சிப்பேடு, கடியலூர், கடையம், கயத்தூர், கம்பூர், கருங்குளம், கல்லாடம், கழாத்தலை, கள்ளக்குடி, காப்பியாறு, கிள்ளிமங்கலம், குண்டுகட்பாலி, குமட்டூர், குளம்பம், குறுங்கடி, குறுங்கோழியூர், கொடிமங்கலம், கொடியூர், கோட்டியூர், கோளியூர், சிறைக்குடி, செயலூர், தங்கால், நல்லாவூர், நல்விளக்கு, நன்பலூர்,

நெடுங்களம், படுமரம், புதுக்கயம், புல்லாற்றூர், பூங்குன்றம், பூஞ்சாற்றூர், பெருங்குன்றூர், பெருங்கோழி, பெரும்பாக்கம், பேராலவாய், பேரெயில், பொதும்பில், பொருந்தில், மல்லி, மாங்குடி, மாடலூர், மாற்றூர், முக்கல், முகையலூர், முப்பேர், முரிஞ்சியூர், முள்ளியூர், முனையூர், மோசி, விரிச்சியூர், விரியூர், விற்றூரு, வெள்ளூர், வெள்ளைக்குடி போன்றவை புலவர்கள் பெயரால் அறியப்படுகின்றன.

# தொகுப்புரை

பழங்காலத் தமிழர்கள் தமது ஊர்களுக்கு நில அடிப்படையிலும் இயற்கை, குடியிருப்பு சார்ந்தும் பெயரிட்டுள்ளனர். இவை பொதுக்கூறு, சிறப்புக்கூறுகளைப் பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

ஊர்ப்பெயர்கள் தலைவியின் அழகுக்கு உவமையாகச் சொல்லப்படும் வகையில் இடம்பெறுகின்றன. சில ஊர்கள் வேந்தர், குறுநில மன்னர்கள், போர் தொடர்புடையவையாக அமைகின்றன.

மூவேந்தர்களின்கீழ் படைத்தளபதிகளாகப் பணியாற்றுபவரே ஊரை ஆளும் தலைவர்களாக உள்ளதைச் சங்க இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

ஊர்ப்பெயர்களில் சில தன் பழமையைத் தக்க வைத்துள்ளன. இவை பழம்பெயராலேயே வழங்கப்படுகின்றன. சில ஊர்ப்பெயர்கள் மருவியும் சற்றே திரிந்தும் வழங்கப்படுகின்றன. சில ஊர்கள் முற்றிலும் வேறு வடிவம் பெற்றுள்ளதையும் காணமுடிகிறது.

## குறிப்புகள்

1. கி. நாச்சிமுத்து, தமிழ் இடப்பெயராய்வு, ப. 123
2. மேலது, ப. 113
3. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 51
4. பதிற். பதிகம், 3
5. நற். 14
6. மயிலை சீனி. வேங்கடசாமி, சங்க காலத் தமிழக வரலாறு I, ப. 118
7. அகம். 326
8. குறுந். 59
9. அகம். 266
10. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 235
11. புறம். 283
12. அகம். 159
13. புறம். 132
14. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 69
15. மேலது. ப. 70
16. அகம். 175
17. மேலது. 209
18. நற். 387
19. அகம். 36
20. புறம். 166
21. பதிற். பதிகம், 5
22. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 70
23. அகம். 141
24. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 180
25. பரி. திரட்டு, 1
26. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 77
27. ஐங். 58
28. பதிற். பதிகம், 3

29. அகம். 266

30. புறம். 348

31. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 398

32. புறம். 33

33. பதிற். பதிகம், 7

34. அகம். 6, 226

35. மேலது.222

36. மேலது.44

37. A.R.486 of 1926

38. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 103

39. அகம். 256

40. மேலது. 365

41. மேலது. 135

42. பதிற். 71

43. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 301

44. அகம். 60

45. குடவாயில் பாலசுப்பிரமணியம், குடவாயில் கோட்டம், ப. 17 – 30

46. அகம். 126

47. நற். 180

48. அகம். 45, 145

49. குறுந். 328

50. மேலது. ப. 164

51. அகம். 35

52. மேலது. 70

53. நற். 73

54. அகம். 220

55. ரா.பி.சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 63

56. புறம். 90

57. நற். 340

58. அகம். 117

59. மேலது. 220

60. மயிலை சீனி. வேங்கடசாமி, துளுநாட்டு வரலாறு, ப. 5

61. ரா. ராகவையங்கார், தித்தன் - கோசர், ப. 64

62. அகம். 152

63. ஆர்.ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 142

64. பெரும்பாண். 384 – 389

65. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, பக். 329, 335, 338

66. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப. 123

67. ஐங். 55

68. ஆர். அளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 147

69. பதிற். பதிகம், 8

70. புறம். 10

71. அகம். 96

72. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 448

73. புறம். 215

74. A.R.486 of 1923

75. A.R.486 of 1930 - 31

76. நற். 131; அகம். 100

77. நற். 10

78. புறம். 338

79. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 164

80. கே. பகவதி, இலக்கியத்தில் ஊர்ப் பெயர்கள் II, ப.

81. நற். 170

82. புறம். 71

83. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், பக். 82 – 83

84. அகம். 336

85. புறம். 180

86. மேலது. 396

87. கா. அப்பாதுரையார், தென்னாட்டுப் போர்க்களங்கள், ப. 94

88. பதிற். பதிகம், 5

89. அகம். 206

90. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 181

91. அகம். 246

92. மேலது. 55

93. புறம். 66

94. அகம். 211

95. மேலது. 359

96. மேலது. 166

# இயல் நான்கு

# அயலக நாடுகளும் ஊர்களும்

சங்க இலக்கியங்கள் வரலாற்றைப் பதிவு செய்யும் நோக்கில் இயற்றப்படவில்லை எனினும் பண்டைய தமிழகத்தோடு தொடர்பு கொண்ட அயலக மக்களைக் கூறுவதன் வாயிலாக அயலக நாடுகளைப் பற்றிய குறிப்புகளையும் பழந்தமிழர் அயலகத்தோடு கொண்ட தொடர்புகளையும் பதிவு செய்துள்ளனர் சங்கப் புலவர்கள். தமிழகம் மற்றும் கங்கைச் சமவெளிகள், பாட்னா, எகிப்து, ரோம் மற்றும் தென்கிழக்காசிய நாடுகளான இந்தோனேசியா, ஜாவா, சுமத்ரா, பிலிப்பைன்ஸ் முதலான நாடுகளில் அகழ்வாராய்ச்சியில் கிடைத்த பொருள்களுக்கிடையே உள்ள ஒற்றுமை, பழங்கால நாணயங்கள், கல்வெட்டுகள் ஆகியவை சங்க இலக்கியம் குறிப்பிடும் செய்திகளை உறுதிபடுத்துகின்றன. பழந்தமிழர்கள் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உலகின் பல நாடுகளையும் அறிந்திருந்தனர். அவ்வாறு அறிந்து பதிவு செய்யப்பட்டுள்ள அயலக நாடுகள், நகரங்களையும் அந்நாடுகளுடன் கொண்ட தொடர்புக்கான காரணங்கள், அந்நாடுகளின் நிலை ஆகியவற்றை இவ்வியல் விரிவாக ஆராய்கிறது.

### அயலகத் தொடர்புக்கான காரணங்கள்

'தேவையே உற்பத்தியின் தாய்' என்பது பழமொழி. அதுபோல உற்பத்தியின் மிகுதியே ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு மாற்றாக வேறு பொருள்களைப் பெறும் பண்டமாற்று முறை தோன்றக் காரணமானது. இம்முறையே பின்னாளில் வணிகமாகவும் வளர்ந்தது. வணிகமானது முதலில் தமிழக அளவில் நிலவியது. பின்னர் பழந்தமிழர்கள் தமிழகத்திற்கு அப்பால் வடநாடுகளுடன் வணிகம் செய்தனர். பின்னர் ரோம், எகிப்து, கிரேக்கம், பாபிலோனியா, பாரசீகம், அரபு நாடுகள், சீனம், சாவகம், இலங்கை முதலான நாடுகளுடன் வணிகம் காரணமாகத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டனர்.

முத்து, மிளகு, ஏலம், இலவங்கப்பட்டை, இஞ்சி, இரும்பு, விலங்குகளின் தோல்கள், ஆட்டுமயிர், மயில்தோகை, வைரம், யானைத்தந்தம், குரங்குகள், நாய், வெள்ளி, அகில், சந்தனம்,

தேக்குமரங்கள், நெய், நெல்லெண்ணெய், மீன்எண்ணெய், தேங்காய், வாழை, சோளம் முதலான தானிய வகைகள், கரும்பு, வெல்லம் சேர்க்கப்பட்ட புளி, வெற்றிலை, பாக்கு, மூலிகை மருந்துகள், மெல்லிய துணி வகைகள் (மஸ்லின் ஆடை) பலவிதக் கற்கள், ஆபரணங்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. பொன் மற்றும் வெள்ளி நாணயங்கள், மது வகைகள், பவளம், ஈயம், தகரம், கலம் (கப்பல்), மதுக்கிண்ணங்கள், எந்திரப் பொறிகள், குதிரை, சந்தனம் அரைக்கும் கல், பட்டாடை போன்றவை இறக்குமதி செய்யப்பட்டன.

யூதர்களின் ஆதி சமயத் தலைவர் மோசஸ் என்பவர் தாம் நிகழ்த்தி வந்த இறைவழிபாட்டில் ஏலக்காயைப் பயன்படுத்தினார் எனப் பழைய ஏற்பாடு கூறுகிறது. இவர் வழிபாடு செய்தது ஏறத்தாழ கி.மு. 1490 ஆகும். தென் அரேபியா நாட்டு அரசி ஸீபோ, இஸ்ரேல் நாட்டு மன்னன் சாலமன் என்பவனைக் காணச் சென்றபோது ஏலக்காய், இலவங்கம் போன்ற நறுமணப் பொருட்களைப் பரிசாகக் கொண்டு சென்றாள் எனப் பழைய ஏற்பாடு குறிப்புத் தருகிறது. சாலமன் ஆண்ட காலம் கி.மு. 1000 என்பர். இம்மன்னனுக்கு மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை சேரநாட்டுத் துறைமுகத்திலிருந்து கப்பல் மூலமாக மயில்தோகை, அகில் மரங்கள், யானைத்தந்தம், குரங்குகள், வெள்ளி போன்ற பொருள்கள் கொண்டு செல்லப்பட்டன.

தென் கிழக்காசிய நாடான தாய்லாந்தில் இந்திய மணியான கர்னீலியன் கற்கள், முத்திரைகள், முற்காலச் சோழர்களின் செப்பு நாணயங்கள் போன்றவை அகழ்வாராய்ச்சியில் கிடைத்துள்ளன. பிலிப்பைன்ஸ் தீவுகளில் நடைபெற்ற தொல்பொருள் அகழ்வாராய்ச்சியில் கத்தி, கோடாரிகள், ஈட்டிகள் போன்றவை கிடைத்துள்ளன. இவை கி.மு. முதல் நூற்றாண்டுத் தமிழ் மக்கள் பயன்படுத்திய கருவிகளைப் பெரிதும் ஒத்துள்ளன.

பாபிலோனியாவில் நிப்பூர் என்னுமிடத்தில் காசு வாணிபத்தில் கணக்குப் பதியப்பட்ட களிமண் தகடுகள் கண்டெடுக்கப்பட்டன. இக்களிமண் தகடுகள் சிலவற்றில் பாபிலோனியர் தமிழக வணிகர்களுடன் கொண்டிருந்த வரவு செலவுகள் குறிப்பிடப்பட்டிருந்தன. பழங்காலத்தில் தமிழக வணிகர்கள் பாபிலோனிய நகரத்தில் தங்கி வணிகம் செய்ததை இத்தகடுகள்

தெரிவிக்கின்றன. "பாபிலோனியாவின் உடைப் பட்டியலில் பட்டாடை காணப்படுகிறது என்றும் இது தமிழகத்திலிருந்து சென்றது என்றும் பி.டி.சீனிவாச ஐயங்கார் கூறுகிறார்"[1].

சீனாவுடன் தமிழகம் பழங்காலத்திலிருந்தே வணிகத் தொடர்பு கொண்டிருந்தது. தமிழகத்தில் தஞ்சையிலும் பட்டுக்கோட்டைப் பகுதிகளிலும் கி.மு. 2 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சீன நாணயங்கள் கிடைத்துள்ளன. இது வாணிபத் தொடர்பை உறுதிப்படுத்துகிறது. சீனாவிலிருந்து இறக்குமதி செய்ததால் சீனப்பட்டு என்றும் சர்க்கரை சீனி என்றும் அழைக்கப்படுகிறது.

வணிகம் மட்டுமன்றிப் போர் காரணமாகவும் அயல்நாடுகளுடன் தொடர்பு கொண்டிருந்தது தமிழகம். பண்டைய காலத்திலேயே தமிழகத்தின்மீது வடநாட்டு மௌரியர், கலிங்கர், ஆரியர் போன்றோர் போர் தொடுத்து வந்துள்ளனர். இதனைச் சங்கப் பாடல்கள் மோரியர், வடுகர் படையெடுப்பு எனக் கூறுகின்றன. சங்கத் தமிழகத்து வேந்தர்கள் கடல் கடந்து படையெடுத்துச் சென்று வென்றதைச் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் கடற்படை கொண்டு குறும்பு செய்த கடற்கொள்ளையினரான கடம்பர்களை அழித்ததைப் பதிற்றுப்பத்து கூறுகிறது. சோழன் கரிகால் வளவனின் முன்னோன் ஒருவன் கடற்காற்றின் உதவியினால் நாவாய் ஓட்டிச் சென்றான். இதனை,

"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி
வளிதொழில் ஆண்ட உரவோன் மருக"[2]

என்னும் புறப்பாடலும்

"முந்நீர் விழவின் நெடியோன்"[3]

என்னும் புறப்பாடலும் பாண்டியன் நெடியோன் என்பவன் முந்நீர் விழாவெடுத்துக் கடற் தெய்வத்தை வணங்கினான் என்பதையும் காண முடிகிறது. பழந்தமிழ் வேந்தர்கள் கடலை வெற்றி கொண்டவர்களாகத் திகழ்ந்தனர். கடல் கடந்து சென்று நாடுகளைக் கைப்பற்றினர்.

ஆரியர்

இன்றளவும் ஆய்வுலகில் சர்ச்சையை ஏற்படுத்திக் கொண்டிருக்கக்கூடிய ஒரு கருத்தாக ஆரியர் குறித்த கருதுகோள் இருக்கிறது. ஆரிய எனும் சொல்லானது பெருமை வாய்ந்த எனும் பொருளுடையது. எனவே பெருமை வாய்ந்த மக்கள் எனத் தம்மைக் கூறிக்கொண்ட இனத்தவர் ஆரியர் ஆவர். “தெற்கு ஆசியாவின் மேற்கில் தான்யூப் நதிக்கும் கிழக்கில் காஸ்பியன் கடலுக்கும் இடையில் வாழ்ந்த வெண்ணிற மக்கள் ஆரியர் எனப்படுவர்”[4] என்று ந.சி. கந்தையா குறிப்பிடுகிறார். இவர்கள் ஆசியா மைனர் பகுதியைத் தாயகமாகக் கொண்டவர்கள். மந்தை மேய்க்கும் வாழ்க்கை முறையை மேற்கொண்டவர்கள்.

ஆசியாமைனர் பகுதியிலிருந்த .. ஆரியர்கள் ஸ்ரெப்பீஸ் புல்வெளியினூடாக மெசபடோமியா கடந்து வந்து பின் ஆப்கானிஸ்தான் வந்தனர். பின்னர் கைபர் போலன் கணவாய் வழியாக இந்தியாவின் வடமேற்கு மூலையில் தங்கி பஞ்சாப் பகுதிக்கு வந்தனர். இவ்வாறு ஆரியர் வந்த காலம் கி.மு. 2000 ஆகும். இவர்கள் கி.மு. 1400 வாக்கில் பஞ்சாப் பகுதி முழுவதையும் கைப்பற்றிக் கொண்டனர். இதற்குப் பின்னரே ஒரு பிரிவினர் கிழக்கிலும் ஒரு பிரிவினர் தெற்கிலும் பரவுகின்றனர்.

“ரிக் வேதத்தின் மிகப் பழமையான பகுதிகளில் அக்கால ஆரியர்கள் வாழ்ந்து கடந்து வந்த நாடுகளின் நிலவியலைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. ரிக் வேதப் பாடல்களில் வங்காளத்திற்கும் தென்னிந்தியாவிற்குமே பெரும்பாலும் உரித்தான புலி, யானை, குரங்கு, அரிசி முதலிய பொருட்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை. கங்கை, யமுனை ஆகிய ஆறுகளைப் பற்றிய குறிப்பும் இல்லை. இவற்றை நோக்கும்போது ஆரியர் இந்தியாவிற்குப் புறம்பேயிருந்து வடமேற்கு வழியே இந்நாட்டினுள் சிறிது சிறிதாக வந்தார்கள் என்பது தவிர்க்க முடியாத கோட்பாடாகிறது”[5]. என ந. சுப்பிரமணியன் கூறுகிறார். இதனையே பி.டி. சீனிவாச ஐயங்காரும் தனது மந்திர காலம் எனும் நூலில் குறிப்பிடுகிறார். இக்கருத்துக்கள் ஆரியரின் தாயகம் ஆசியா மைனர் என்பதையும் கைபர்

கணவாய் வழியாக இந்தியாவிற்கு வந்தேறியவர்கள் என்பதையும் நிறுவும் ஆதாரங்களாகத் திகழ்கின்றன.

இவ்வாறு வந்த ஆரியர்கள் இமயமலைப் பகுதிகளில் நிறைந்து வாழ்ந்தனர் என்பதை “ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்” (பதிற். 11) என்னும் பாடலடி வாயிலாகக் குமட்டூர் கண்ணனார் பதிவு செய்கிறார். இந்தியாவில் இமயமலைக்கும் விந்திய மலைக்கும் இடைப்பட்டு கிழக்கு, மேற்கில் கடல்களை எல்லையாகக் கொண்ட பகுதி ஆரியர் தாயகமாக விளங்கியது என மனுநூல் கூறுகிறது.

பஞ்சாப் பகுதியைக் கைப்பற்றிக் குடியேறிய ஆரியர் தென்னிந்தியாவை நோக்கி வந்தது கி.மு. 6 ஆம் நூற்றாண்டு[6] எனக் கூறுவர். தென்னிந்தியாவில் முதலில் பரவத் தொடங்கிய ஆரியர் சிறுசிறு கூட்டங்களாகவே வந்தனர். இவர்கள் பஞ்சாப் பகுதியைக் கைப்பற்றித் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்ததைப் போல் அல்லாது தமிழக மக்களோடு இயல்பாகக் கலந்து வாழ்ந்தனர். இவர்களில் ஒருசிலர் கயிற்றின்மேல் ஆடும் கழைக்கூத்தாடிகளாக விளங்கினர். இதனை,

“ஆரியர்
கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்நெற் றொலிக்கும்” [7]

எனவரும் குறுந்தொகைப் பாடல் விளக்குகிறது.

ஆரியர் பசுவைக் கடவுளாக வழிபட்டனர். குதிரையேறி வேட்டையாடுவதிலும் போர் புரிவதிலும் வல்லவர்களாக விளங்கினர். எனினும் தமிழகத்திற்கு வந்த ஒரு பிரிவினர் பெண் யானைகளைப் பழக்கப்படுத்தி வைத்துக் கொள்வர். இப்பிடி யானைகள் மூலம் ஆண் யானைகளைப் பிடித்துப் பழக்கப்படுத்திப் போர்ப் பயிற்சி அளித்து மன்னர்களிடத்தில் கொடுப்பர்.

“ஆரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்”[8]

என அகநானூற்றில் பரணர் குறிப்பிடுகிறார்.

தமிழகத்தில் குடியேறிச் சமூகமாக வாழ்க்கை நடத்தி வந்த ஆரியக் குழுக்கள் ஒருபுறமிருக்க, ஒருசில குழுக்கள் படைகொண்டு வந்து தமிழகத்தைத் தாக்கினர். வல்லம் என்னும் ஊரிடத்தே நடந்த போரில் ஆரியர் படையும் சோழர் படையும் மோதிக் கொண்டன. இப்போரில் ஆரியர் படை உடைந்து ஓடியது. இதனை,

"மாரி யம்பின் மழைத்தோற் சோழர்
வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை
ஆரியர் படையின் உடைக"[9]

என்னும் அகப்பாடலில் பாவைக் கொட்டிலார் ஆரியரின் தோல்வியைப் பாடியுள்ளார்.

மலையமானுடைய முள்ளூர்மீது ஆரியர் வாட்படையுடன் தாக்கினர். இப்போரில் மலையமான் திருமுடிக்காரி வில்லெய்து அவர்களை எதிர்கொண்டு தாக்கினான். ஆரியர் பலர் நெருங்கிப் போர் செய்தனர் எனினும் காரி முன் நிற்கமாட்டாது ஓடிவிட்டனர். இதனை,

"ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்
பலருடன் கழிந்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடியாங்கு"[10]

என்னும் பாடல் வாயிலாக அறிய முடிகிறது. மேலும் சேரமான் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆரியரை அடக்கித் தன்னை வணங்கும்படிச் செய்ததைப் பதிற்றுப்பத்து (பதிகம் 2, 11), அகம் (396) ஆகிய பாடல்கள் கூறுகின்றன.

போர் தொடுத்துத் தோற்றோடிய ஆரியர் ஒருபுறமும் மக்களோடு (தமிழரோடு) கலந்து வாழ்ந்த ஆரியர்கள் ஒருபுறமுமிருக்க, ஒருசிலர் தமிழக மன்னர்களிடத்தே நன்மதிப்பையும் நட்புறவையும் ஏற்படுத்திக் கொண்டனர். இதனைத் தம் குடிநலத்திற்கும் தனது கலாச்சாரத்தை உட்புகுத்திக் கொள்ளவும் ஏதுவாகப் பயன்படுத்திக் கொண்டனர். தமிழர்களின் சமயம், சமூக வாழ்க்கை, பண்பாடு, பழக்கவழக்கங்கள், மொழி, இலக்கியம் முதலான துறைகளில் தமது கலாச்சாரத்தைப் புகுத்த முனைந்தனர். இதன் காரணமாக வேள்வி அந்தணர், முத்தீ, இதிகாசக் கதைகள், இந்திரன்,

பிரமன், பலராமன் வழிபாடுகள் ஆகியவை தமிழகத்தில் நுழைந்தன. வேள்வி, யாகம் செய்ததாலே இராசசூய யாகம் வேட்ட பெருநற்கிள்ளி, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி போன்ற பெயர்களால் தமிழக வேந்தர்கள் அழைக்கப்பட்டனர். இதுபோல மக்கள், கடவுள் பெயர்களுக்கும் ஆறுகள், மலைகள், ஊர்ப் பெயர்களுக்கும் ஆரிய வடிவம் ஏற்பட்டது. பின்னாளில் முழுக்க ஆரியக் கலாச்சாரம் கலந்து பிரித்தறிய இயலாதவாறு கலந்தது. தற்போதும் இந்நிலையே தொடர்ந்து வருகிறது என்பது வருந்தத்தக்க ஒரு செய்தியாகும்.

**இலங்கை (ஈழம்)**

தமிழகத்திலிருந்து முப்பது கல் தொலைவில் அமைந்துள்ள நாடு இலங்கை. இது பழங்காலத்திலிருந்தே தமிழகத்துடன் நெருக்கமான தொடர்பு கொண்டிருந்தது. சங்ககாலத் தமிழகத்துடன் ஈழமானது அரசியல், கலாச்சார, வாணிகத் துறைகளில் தொடர்பு கொண்டிருந்தது. “ஏறத்தாழ கி.மு. 6 அல்லது 5 ஆம் நூற்றாண்டில் விசயன் என்பவன் வட இந்தியாவிலிருந்து வந்து இலங்கை அரசனாக முடிசூட்டிக் கொண்டான்”[11]. அசோகர் கல்வெட்டுகளில் இலங்கை ‘தம்பபண்ணி’ எனக் குறிக்கப்பட்டுள்ளது. யவன அறிஞரான தாலமி இலங்கையை ‘தாம்ரபர்னே’ என்று குறிப்பிட்டுள்ளார். அசோகர் பௌத்த சமயத்தைப் பரப்பும் பொருட்டு மகன் மகேந்திரனையும் மகள் சங்கமித்திரையையும் இலங்கைக்கு அனுப்பினார் என மெகஸ்தனிஸ் தனது இண்டிகா நூலில் குறிப்பிடுகிறார்.

கி.மு. 2 ஆம் நூற்றாண்டில் இலங்கையை ஆட்சி செய்த சூரதிஸ்ஸன் என்பவனை அழித்து சேனன், குத்தகன் என்னும் இரண்டு தமிழகக் குதிரை வியாபாரிகள் ஆட்சி செலுத்தினர் என மகாவமிசமும் தீபவமிசமும் கூறுகின்றன. இவை சங்கத் தமிழர் இலங்கை அரசியலில் ஏற்படுத்திய தாக்கத்தைக் கூறுகின்றன. இவர்களை முறியடித்துத் திஸ்ஸனின் தம்பி அசேலன் ஆட்சிக்கு வந்தான். அவனுக்குப்பின் தமிழரசர்கள் கைப்பற்றி 44 ஆண்டுகள் ஆட்சி செய்தனர் எனவும் இந்நூல்கள் கூறுகின்றன.

பழங்காலந்தொட்டே இலங்கை தமிழகத்துடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தது. இதனை,

"ஈழத்துணவும் காழகத் தாக்கமும்"[12]

எனும் பாடலடி வாயிலாக உருத்திரங்கண்ணனார் பட்டினப்பாலையில் பதிவு செய்கிறார். மேலும் ஈழத்துப் பூதந்தேவனார் எனும் புலவர் மதுரையில் தங்கியதால் மதுரை ஈழத்துப் பூதந்தேவனார் என அழைக்கப்பட்டார். இவரது பாடல்கள் அகநானூறு (88, 231, 307), குறுந்தொகை (189, 343, 360), நற்றிணை (366) ஆகியவற்றில் இடம்பெற்றுள்ளன. "மதுரையை அடுத்த திருப்பரங்குன்றத்தில் காணப்படும் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டு ஈழத்தைக் குறிப்பிடுகிறது. ஈழக் குடும்பிகளான போலாலையன் சமணத் துறவிக்கு அமைத்துக்கொடுத்த பள்ளி"[13] என்பது அக்கல்வெட்டின் வாசகம் ஆகும். பண்டைய இலங்கைத் தலைநகரங்களில் ஒன்றான அநுராதபுரத்தில் உள்ள ஒரு மண்டபத்தில் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டு உள்ளது. இது தமிழக வணிகர் குழு தலைநகரில் வாழ்ந்து தமது வாணிக நடவடிக்கைகளுக்குப் பயன்படுத்திய மண்டபம் ஆகும். இங்குள்ள பாறைகளிலும் கற்களிலும் தமிழக வணிகர் பெயர் பொறிக்கப்பட்டிருந்தன. இவ்வணிகர் அமர்ந்திருந்த இடங்களில் அவரவர் பெயர் பொறிக்கப்பட்டதை இக்கல்வெட்டு உணர்த்துகிறது. திருப்பரங்குன்றம் மற்றும் அநுராதபுரத்தில் காணப்படும் கல்வெட்டுகள் தமிழக வணிகர்கள் இலங்கையிலும் இலங்கை வணிகர்கள் தமிழகத்திலும் தங்கி வணிகம் செய்ததை உணர்த்துகின்றன. மேலும் வவுனியா, சேருவில, குடுவில் ஆகிய இடங்களிலும் உள்ள கல்வெட்டுகள் இவ்விரு நாடுகளுக்கிடையே வணிகம் நடைபெற்றதை உறுதி செய்கின்றன.

ஈழநாட்டின் கந்தரோடை, பூநகரி, ஈழவூர், கல்முனை, மண்ணித்தலை போன்ற இடங்களில் சங்க காலப் பாண்டிய மன்னனான பெருவழுதியின் செப்பு நாணயங்கள் கிடைத்துள்ளன. இவையும் ஈழ, தமிழக வணிக உறவுகளை உறுதிப்படுத்துகின்றன.

**கலிங்க நாடு**

பண்டைய கலிங்க நாடு இன்றைய ஒரிஸ்ஸா, ஆந்திர மாநிலத்தின் வடகிழக்கு எல்லைப் பகுதிகளை உள்ளடக்கியதாக விளங்கியது. இந்நாட்டைப் பற்றிய குறிப்பு சங்கப் பாடல்களில் இடம்பெறவில்லை. எனினும் இந்நாட்டிலிருந்து இறக்குமதியான ஒருவகையான ஆடைக்குக்

கலிங்கம் என்றே வழங்கப்பட்டு வந்தது. பின்னர் ஆடையைக் குறிக்கும் சொல்லாகவும் மாறியது.

கலிங்க நாட்டை மௌரிய அரசர் அசோகருக்குப்பின் காரவேலன் என்னும் மன்னன் ஆட்சி செய்து வந்தான். இம்மன்னன் கி.மு. 176இல் ஆட்சிக்கு வந்தான். இம்மன்னன் மகத நாட்டை வென்றான். மேற்கில் சதகர்ணிகளைத் தாக்கி வெற்றி பெற்றான். கலிங்கப் பேரரசனான காரவேலன் மிகுந்த வலியவனாக விளங்கினான். இம்மன்னனின் பதினோராம் ஆட்சி ஆண்டில் செதுக்கப்பட்டது ஹத்திக்கும்பா கல்வெட்டாகும். இதில் காரவேலன் 113 வருடங்களாக நீடித்த தமிழரசர்களின் வலிமை மிகுந்த கூட்டணியை உடைத்ததாகத் தன்னைப் பெருமைப்படுத்திக் கொள்கிறான். தமிழகத்தைக் கைப்பற்றியது பற்றிய குறிப்புகள் ஏதும் இல்லை. ஆனால் பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் பாண்டிய மன்னன் காரவேலனுக்கு முத்துக்களையும் யானைகளையும் பரிசாக வழங்கினான் என இக்கல்வெட்டின் பதின்மூன்றாவது வரி குறிப்பிடுகிறது[14]. காரவேலன் தமிழர்களை வெற்றிகொள்ளவில்லை எனினும் தமிழக அரசர்களின் கூட்டணிக்கும் காரவேலனுக்கும் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டிருக்க வேண்டும். இதன் காரணமாகவே பாண்டியன் பரிசளித்திருக்க வேண்டும்.

**காழகம்**

காழகம் - கடாரம் என்பது நச்சினார்க்கினியர் கூற்று. இது மலேசியா நாட்டில் மேல்கரையோரமாக உள்ள கெடா என்னும் பகுதியைக் குறித்தது. இந்நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட செல்வங்கள் ஆக்கப்பொருள்கள் பூம்புகார் அங்காடிகளில் நிறைந்திருந்தன என உருத்திரங்கண்ணனார் பாடுகிறார். இதனை,

> "ஈழத்துணவும் காழகத் தாக்கமும்
> அரியவும் பெரியவும் நெடிய ஈண்டி
> வளம்தலை மயங்கிய நனந்தலை மறுகு"[15]

என்னும் பட்டினப்பாலை அடிகள் விளக்குகின்றன. அதனால் அங்கிருந்து கொண்டு வந்த பொருள்கள் எவையெனக் குறிப்பிடப்படவில்லை. இரு நாடுகளுக்குமிடையே வர்த்தகம் நடைபெற்றதை மட்டும் அறிய முடிகிறது.

பிற்காலத்தில் முதலாம் இராசேந்திர சோழன் வென்றதால் கடாரம் வென்றான் என அழைக்கப்பட்டான்.

**கோசர்கள்**

கோசர்கள் பண்டைய தமிழகத்தின் பல இடங்களிலும் வாழ்ந்தனர். எனினும் இவர்கள் தமிழர் அல்லர். இவர்கள் பல வகையினர். பல ஊர்களிலும் வேறுவேறு தலைவர்களின்கீழ் வாழ்ந்துள்ளனர். இவர்களைச் சங்கப் புலவர்கள் வாய்மொழிக் கோசர், முதுகோசர், இளங்கோசர், நன்மொழிக்கோசர், செம்மேற்கோசர், ஒன்றுமொழிக்கோசர், வலம்புரிகோசர் என்னும் சிறப்பு அடைமொழியிட்டு அழைத்துள்ளதை இலக்கியங்களில் காணமுடிகிறது. இவர்கள் வாய்மை தவறாதவர்களாகவும் சிறந்த மறவர்களாகவும் விளங்கினர்.

**கோசர் வாழ்ந்த இடங்கள்**

கோசர்கள் பல்வேறு இடங்களில் வசித்தனர். மயில்கள் நிறைந்த சோலைகளையுடைய துளுநாட்டில் கோசர் வாழ்ந்தனர். இந்நாட்டிடத்தே பொருளின்றி வருகின்ற புதியவர்களைப் புரக்கும் பண்பு கொண்ட கோசர் வாழும் ஊர்கள் இருந்தன (அகம். 15) செல்லூருக்குக் கிழக்கிலுள்ள நியமம் என்னும் கடற்கரையோர ஊரில் இருந்தனர் (அகம். 90). நெய்தலஞ்செறு எனும் ஊரைக்கொண்ட நல்ல வளம் பொருந்திய இடத்தில் வாழ்ந்து வந்தனர் (அகம். 113) எழினி ஆதனுக்குரிய வாட்டாறு என்னும் ஊரில் வசித்தனர் (புறம். 396). நாலூர் என்னும் ஊரில் வாழ்ந்தனர் (குறுந். 15) எனவும் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. மோகூர் அவையகத்தும் பாண்டியன் அவையகத்தும் சிறந்து விளங்கினர்.

**கோசரின் செயல்பாடுகள்**

இளைய கோசர்கள் அகன்ற இலைகளையுடைய முருக்க மரத்தினைத் தூணாக நட்டு இத்தூணை இலக்காக வைத்து வேலெறிந்து போர்ப் பயிற்சியை மேற்கொண்டனர். இதனை,

"வென்வேல்

இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்

இகலின் றெறிந்த வகலிலை முருக்கின்

பெருமரக் கம்பம் போல"[16]

என்னும் புறப்பாடலால் அறியலாம். இவர்கள் கள் நிறைந்த மனைகளையுடையவர்கள். இனிமையான கள் தெளிவை உண்டு களிப்பேறிக் குரவைக் கூத்தாடுவர்.

கோசர் அஞ்சாமையுடையவர்கள். போர்க் கருவிகள் பட்டதால் வடுக்களையுடைய முகத்தினராய் இருந்தனர். (அகம். 90), இவர்கள் நண்பன் வறுமையுற்ற காலத்தும் மாறாத அன்புடையவராய் விளங்கினர். கூத்தர்களுக்குப் போர்க்களத்தில் யானைகளைப் பரிசாக வழங்குபவன் அகுதை. இம்மன்னனைத் தக்க நேரத்தில் காத்தனர் எனக் கல்லாடனார் கூறுவதை,

"புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன்

அமர்வீசு வண்மகிழ் அ.்.குதை போற்றிக்

காட்டிக் கைநிறுத்த பல்வேல் கோசர்"[17]

என்னும் பாடலடிகள் காட்டுகின்றன.

கொடுத்த வாக்குறுதி தவறாத நிலையான மொழியை உடையவர்கள் கோசர்கள். இதனால் நெடுந்தூரம் இவர் புகழ் பரவியிருந்தது. ஒருமுறை கிள்ளிவளவன் கோசர் படையினை அழித்து வெற்றி கொண்டான் (அகம். 205). இவர்கள் வாய்மொழி தவறாதவர் போல சூழ்ச்சி நிறைந்தவர்களாகவும் இருந்தனர். துளுநாட்டு நன்னனுக்குரிய மாமரத்தின் பழம் ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டு வர, அதனை எடுத்து உண்ட பெண்ணைக் கர்ப்பிணி என்றும் பாராமல் கொலைத் தண்டனை விதித்தான். அப்பெண்ணின் தந்தை பெண்ணின் எடைக்கு நிகரான பொன்னும் 90 யானைகளையும் கொடுக்கவும் கொள்ளாது கொன்றான். இதனால் ஆத்திரமடைந்த கோசர்கள் பரிசாகப் பெற்ற யானையை அம்மாமரத்தில் கட்டிவைத்து நன்னனை அவமானப்படுத்தினர். யானை அம்மரத்தை வேரோடு சாய்த்தது (குறுந். 93).

ஒருமுறை உண்மையே பேசும் இயல்பினனான அன்னி மிஞிலியின் தந்தையின் பசு கோசர்களின் விளைநிலத்தில் மேய்ந்தது. இதற்காக அன்னி மிஞிலியின் தந்தையின் கண்களைப் பிடுங்கிவிட்டனர். இதனால் கோபம்

கொண்ட அன்னிமிஞிலி கலத்தில் உண்ணாமலும் தூய ஆடை உடுத்தாமலும் திரிந்தாள். பின்னர் அழுந்தூர் திதியனிடம் முறையிட்டு உதவி வேண்டினாள். திதியன் கோசர்களை அழித்தான் என்ற வரலாற்றைப் பரணர் அகநானூற்றில் (262) பதிவு செய்துள்ளார்.

கோசர்களில் ஒரு வகையினர் பாண்டியன் நெடுஞ்செழியனின் படைவீரர்களாகப் பணிபுரிந்தனர். பழையன் மாறனின் மோகூர் அவையகத்திலும் சிறந்து விளங்கினர். இவர்கள் நான்மொழிக் கோசர் எனப்பட்டனர். இதனை,

"பழையன் மோகூர் அவையம் விளங்க
நான்மொழிக் கோசர் தோன்றியன்ன"[18]

என மாங்குடி மருதனார் மதுரைக்காஞ்சியில் குறிப்பிடுகிறார். இவர்களில் மற்றொரு வகையினர் மௌரியர் தமிழகத்தின்மீது படைகொண்டு வந்தபோது அவர்களுக்குத் துணையாக வந்தனர் என மாமூலனார் (அகம். 251) கூறுகிறார்.

"மகாவித்துவான் ரா. ராகவையங்கார் கோசர்கள் காஷ்மீர நாட்டினர் என்று கூறுகிறார். இவர் காஷ்மீர தேச சரித்திரமாகிய இராஜதரங்கினியில் நட்பிற் பிழையாமைக்கு அந்நாட்டு மக்கள் கோசம் என்னும் சூள்முறை மேற்கொள்கின்றனர் என்ற குறிப்பையும் காஷ்மீர மக்கள் இன்றும் தம்மைக் கோசர் எனக் கூறிக்கொள்வதையும் காட்டி சங்க காலக் கோசர்களின் நட்பிற் பிழையாமை, சொல் தவறாமைக் குணங்களையும் ஒப்பிட்டுக் கோசர் காஷ்மீர தேசத்தினர்"[19] எனக் கருதுகிறார்.

கோசர்கள் கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்தவரென கிருஷ்ணசாமி ஐயங்காரும் மேற்குமலைத் தொடர்ச்சிக்கும் மைசூர் மலபார் குடகு ஆகியவற்றின் எல்லைப்புறத்திற்கு இடைப்பட்ட நாடு என வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதரும் அசோகர் குறிப்பிட்ட சத்யபுத்திரர் என சுப்பிரமணியனும் துளுநாடே கோசர்களின் தாயகமாகலாம் என கே.கே. பிள்ளையும் கூறுகின்றனர். ஆனால் கோசர்களைப் பற்றி முழுமையாகக் கூறும் வரலாற்று மூலங்கள் எதுவும் இல்லை. கோசர்கள் துளு நாட்டில் வசித்தனர். தமிழகம் முழுவதும் பரவி ஆங்காங்கே படை வீரர்களாய்ப்

பணிபுரிந்தனர். இவர்களின் வீரத்தாலும் வாய்மைப் பண்பாலும் புகழ்பெற்று விளங்கினர்.

**மகதநாடு**

இன்றைய பீகார், உத்திரப் பிரதேசம் முதல் மேற்கு வங்காளம் வரை மகதப் பேரரசு பரவியிருந்தது. இதன் தலைநகரமாக இராசகிருகம் (இராஜ்கீர்), பின்னர் பாடலிபுத்திரமும் (பாட்னா) திகழ்ந்தன. கி.மு. 5 – 6 ஆம் நூற்றாண்டுகளில் மகத ஆட்சி தொடங்கியது. நந்த அரசு மரபினரே மகதப் பேரரசை உருவாக்கியதாகக் கூறுவர். "மகதமே இந்தியாவின் முதல் உலகளாவியதோர் முடியரசாகவும் பேரரசாகவும் வளர்ச்சி பெற்று விளங்கியிருந்தது"[20] என டி.டி. கோசாம்பி குறிப்பிடுகிறார். சிசுங்க மரபைச் சேர்ந்த மன்னனானன மகாநந்தி என்பவனுக்கு முறையற்ற விதத்தில் பிறந்த மகனே நந்த அரச மரபைத் தோற்றுவித்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனால் ந. சுப்பிரமணியன் "சைசு நாககுலம் முடிவுற்றதும் மன்னராக வந்த நந்திவர்த்தனரே நந்த வம்சத்தின் முதல்வர்"[21] எனக் கூறுகிறார்.

மகதப் பேரரசர்களில் நந்திவர்த்தனர், மகாநந்தி, மகாபத்மநந்தர் போன்றோர் புகழ் பெற்று விளங்கினர். நந்தர்கள் மக்களை வருத்திக் கொடுங்கோலராகவும் அளவில்லாத செல்வத்தை உடையவர்களாகவும் விளங்கினர். இவர்களில் மகாபத்ம நந்தன் பெருஞ் செல்வத்தைப் பெற்றிருந்தான். இம்மன்னன் கங்கையாற்றின் அடியில் பெருஞ்செல்வத்தைப் புதைத்து வைத்திருந்தான். இதனை,

"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதல் கரந்த நிதியங் கொல்லோ"[22]

என்னும் அகநானூற்றுப் பாடலில் மாமூலனார் பதிவு செய்துள்ளார். இச்செல்வம் பின்னாளில் ஒழிந்தது என்பதையும்

"நந்தன் வெறுக்கை எய்தினும்"[23]

என்னும் இவ்வடியின் வாயிலாக மாமூலனார் பதிவு செய்கிறார்.

நந்தர்களின் காலம் கி.மு. 6 – 4 ஆம் நூற்றாண்டு என வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். அக்கால வரலாற்றுச் செய்திகளான நந்தர்களைப் பற்றியும் அவர்களின் செல்வம் கங்கை ஆற்றின் அடியில் புதைத்து வைத்தது, பின் அச்செல்வம் மறைந்தது போன்றவற்றைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்வதால் சங்க காலமும் கி.மு. 5 ஆம் நூற்றாண்டு வரையிலும் முன்னெடுத்துச் செல்லும் வாய்ப்புள்ளது.

நந்தர்களின் இறுதி மன்னன் தனநந்தன். நந்தர்கள் படையில் இரண்டு லட்சம் காலாட் படையும் இரண்டாயிரம் குதிரைகளும் இரண்டாயிரம் தேர்களும் ஆறாயிரம் யானைகளும் இருந்தன. எனினும் கி.மு. 325 இல் நந்த வம்சத்தின் ஆட்சி முடிவுற்றது. நந்தர் குலத்தை அழித்து சந்திரகுப்தர் மௌரியப் பேரரசை நிறுவினார்.

**மௌரியப் பேரரசு (மோரியம்)**

சங்கப் புலவர்கள் மோரியர்கள் என மௌரியப் பேரரசைக் குறிப்பிட்டனர். மௌரியப் பேரரசு சந்திரகுப்த மௌரியரால் நிறுவப்பட்டது. கி.மு. 325இல் நந்த வம்சத்தினரை அழித்து மகத நாட்டைக் கைப்பற்றினார் சந்திரகுப்த மௌரியர். இவர் பிறப்பால் நந்த வம்சத்துடன் தொடர்பு கொண்டவர் என்பர். சந்திரகுப்தரின் பாட்டியின் பெயர் முரா என்பதே மௌரிய, மோரிய எனும் குலப்பெயராயிற்று என்பர். மௌரியரும் பாடலிபுத்திரத்தைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்தனர். சந்திரகுப்தர் அரசவையில் செல்யூகஸ் நிகேட்டர் விடுத்த கிரேக்கத் தூதுவர் மெகஸ்தனிஸ் இடம்பெற்றிருந்தார். இவர் சந்திரகுப்தரை 'சந்திரகோட்டா' என வழங்கினார். மேலும் "சந்திர கோட்டா அரசவைக்கே யான் அயல்நாட்டு நல்லெண்ணத் தூதுக் குழுவினருள் முதல்வனாக அனுப்பப்பட்டேன்"[24] எனத் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்கிறார் மெகஸ்தனிஸ்.

பண்டைய உலகப் பேரரசுகளில் ஒன்றாக விளங்கிய மௌரியப் பேரரசை சாணக்கியரின் உதவியுடன் 50 லட்சம் சதுர கிலோமீட்டர் பரப்பளவு வரை விரிவுபடுத்தினார் சந்திரகுப்தர். இவர் கிழக்கே அஸ்ஸாம் வரையிலும் மேற்கில் ஆப்கானிஸ்தான், ஈரான் வரையிலும் விரிவுபடுத்தினர். சந்திரகுப்தர் 24 ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். பின்னர் சமணத் துறவியான

பத்ரபாகு என்பவருடன் மைசூர்ப் பகுதியில் தங்கி உண்ணாவிரதமிருந்து உயிர் நீத்தார் எனச் சமணர் குறிப்பிடுவர்.

சந்திரகுப்தருக்கும் பின்னர் அவர் மகன் பிந்துசாரன் கி.மு. 301 முடிசூட்டிக் கொண்டார். இவர் இருபத்தெட்டு ஆண்டுகள் ஆட்சிபுரிந்தார். திபெத்தைச் சேர்ந்த பௌத்த வரலாற்றாசிரியரான தாரநாத் பிந்துசாரரைப் பெரிய வெற்றி வீரர் என்று குறிப்பிடுகிறார். தந்தையார் விட்டுச் சென்ற பேரரசுப் பகுதிகளை இவர் கைப்பற்ற முயன்றார். பிந்துசாரர் 16 அரசர்களை வென்றார் எனத் தாரநாத் குறிப்பிடுகிறார். எனவே பிந்துசாரர் படையெடுத்துச் சென்ற பகுதிகளில் தமிழகமும் அடங்கும்.

பிந்துசாரர் தமிழகத்தின்மீது படையெடுத்து வந்ததைச் சங்கப் பாடல்கள் பதிவு செய்துள்ளன. சங்கப் புலவர்கள் மோரியர்களைப் புதியதாகப் படையெடுத்து வந்தவர் எனும் பொருளில் 'வம்ப மோரியர்' எனக் குறிப்பிடுகின்றனர். மௌரியர் படையெடுத்து வந்தபோது மலைகள் குறுக்கிட்டதால் பாதை இல்லாது போகவே மலையை வெட்டிப் பாறைகளைக் குடைந்து பெரிய தேர்கள் செல்லும்படியான பாதையை உண்டாக்கினர். இதனை,

"வென்வேல்
விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிர் திரிதரக் குறைத்த"[25]

என்னும் புறப்பாடலில் கள்ளில் ஆத்திரையனாரும்

"விண்பொரு நெடுவரை இயல்தேர் மோரியர்
பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த
அறையிறந்"[26]

என்னும் அகப்பாடலில் உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனாரும் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு மலையைப் பிளந்து வழி செய்தது மங்களூர் மலையிடைக் கணவாய் ஆகும்.

தமிழகத்தை வெற்றி கொள்ளும் பொருட்டுப் படைகொண்டு வந்த மோரியர் வெற்றிபெற முடியவில்லை. எனவே மௌரியர்கள்

தெலுங்கர்களையும் வடுகர்களையும் கோசர்களில் ஒரு பிரிவினரையும் துணையாகக் கொண்டு போருக்கு வந்தனர்.

“வெல்கொடித்
துணைகா லன்ன புனைதேர்க் கோசர்
பகைதலை வந்த
மாகெழு தானை வம்ப மோரியர்
புனைதேர் நேமி யுருளிய குறைத்த”[27]

“முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்றிசை மாதிரம் முன்னிய வரவிற்கு
விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத்து
ஒண்கதிர்த் திகிரி யுருளிய குறைத்த
அறையிறந்”[28]

என்னும் இவ்விரு பாடல்களில் மாமூலனார் பாடியுள்ளார்.

மௌரியர்களின் இப்படையெடுப்புகளை எதிர்கொள்ள தமிழகப் பேரரசுகள் தமக்குள் கூட்டணி ஏற்படுத்திக் கொண்டன. சேர, சோழ, பாண்டியப் பேரரசுகள் இணைந்து மௌரியரைப் புறங்கொண்டு விரட்டியடித்தது. இதனைக் கலிங்க அரசன் காரவேலனின் அத்திக்கும்பாக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டின் காலம் கி.மு. 165 ஆகும். இக்கல்வெட்டு செதுக்கப்பட்ட நாளுக்கு 113 ஆண்டுகளுக்கு முற்பட்ட கூட்டணி என்பதால் கி.மு. 278 இல் பிந்துசாரன் தமிழகத்தன்மீது படையெடுத்திருக்கக்கூடும்.

“சந்திரகுப்தர், பிந்துசாரர் படைகள் நாடு முழுதும் போர்க்கொடி உயர்த்தின. மௌரியர் கைப்பற்றலுக்குப் பிறகும் மைசூரில் உள்ள பிரம்மகிரியில் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்துக்குரிய பெருங்கற் படைகளை எழுப்பும் வழக்கம் இருந்துள்ளது. ஆகவே தென்கோடிப் பகுதிகளை வெல்வதால் மௌரியர்களுக்கு ஒரு பயனும் இல்லை எனக்கூறித் தமிழகத்தின் மீதான மோரியர் படையெடுப்பை மறுக்கிறார்”[29]. டி.டி. கோசாம்பி. ஆனால் இவரது கூற்றுக்கு மாற்றான தரவுகளாகச் சங்கப்

பாடல்களும் அத்திக்கும்பாக் கல்வெட்டும் திகழ்கின்றன. எனவே தமிழகத்தின்மீது மௌரியர் படையெடுத்தது உண்மையே ஆகும். பெருஞ்செல்வமும் நல்ல வளங்களையும் வணிகத்தையும் கொண்டதாகத் திகழ்ந்த தமிழகத்தைக் கைப்பற்ற மௌரியப் பேரரசு தனது முழு ஆற்றலையும் வடுகர், கோசர் துணைகளையும் பயன்படுத்தியதைச் சங்க இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன.

பிந்துசாரருக்குப்பின் அவர் மகன் அசோகர் கி.மு. 273இல் மௌரியப் பேரரசரானார். அசோகரின் கல்வெட்டுகளில் இரண்டு கல்வெட்டுகள் (2, 13) அவரது அரசுக்குக்கீழ் இல்லாத சுதந்திர அரசுகளாகத் தமிழக அரசுகளைக் குறிப்பிடுகின்றார். அசோகரின் ஆட்சிக்குப் பிறகு மௌரியர் பேரரசு வீழ்ச்சியடைந்தது.

**யவனர்**

கிரேக்கம், ரோமாபுரி ஆகிய நாடுகளிலிருந்து தமிழகத்திற்கு வந்த வணிகர், தொழிலாளர் முதலானோரே யவனர், மிலேச்சர், சோனகர் எனப் பலவாறாக அழைக்கப்பட்டனர். எகிப்து, பாரசீகம், அரபு நாட்டு மக்களையும் யவனர் என்றே அழைத்தனர். கிரேக்கர் முதலானோர் தங்கள் நாட்டையும் மொழியையும் அயோனெஸ் என்று கூறிக்கொள்வராம். இச்சொல்லே தமிழில் யவனர் எனத் திரிந்தது என்பர். யவனர்களில் சிலர் கப்பல் தலைவனுக்குப் பாதுகாவலராகவும் தமிழ் அரசர்களுக்கு மெய்க்காப்பாளராகவும் விளங்கினர். இவ்வாறு படைவீரர்களாகப் பணியாற்றிய யவனர் மிலேச்சர் என்னும் சொல்லால் அழைக்கப்பட்டனர். சோனகர் எனும் சொல்லும் யவனர்களையே குறித்தது.

வரலாற்றுக்கு முற்பட்ட காலந்தொட்டு இந்தியாவுக்கும் குறிப்பாகத் தமிழகத்திற்கும் மேற்கத்திய நாடுகளுக்கும் இடையில் வணிகம் சிறப்பாக நடைபெற்றது. "இந்நாடுகளுக்கிடையில் மூன்று பெரும் வணிகப் பாதைகள் இருந்தன. இவற்றுள் மிக இலகுவானது சிந்துநதி முகத்துவாரத்திலிருந்து அராபிக் குடாக்கடல் வழியாக யூபிராதஸ் முகத்துவாரத்தை அடையும் கடற்பாதை. மற்றொன்று பாரசீகத்தின் ஊடாகத் தரைவழியே செல்வது. செங்கடல் வழியாக செல்வது மற்றொன்று"[30]. என ந.சி. கந்தையாபிள்ளை குறிப்பிடுகிறார். சிந்துநதி வழியாகக் கடற்கரையோரமாகவே செல்லும்

வழியில் வந்ததால் பல மாதங்கள் ஆயின. பின்னர் கி.பி. முதல் நூற்றாண்டில் ஹிப்பாலஸ் எனும் கிரேக்க மாலுமி தென்மேற்குப் பருவக்காற்றின் உதவியால் முசிறித் துறைமுகத்திற்கு நேரே நடுக்கடல் வழயாக விரைவில் பயணம் செய்யும் வழியைக் கண்டறிந்தான். அதுமுதல் யவனக் கப்பல்கள் விரைவாகவும் அதிகமாகவும் தமிழகத்திற்கு வந்து சென்றன. எனவே யவனர்களின் வணிகம் பெருகியது.

தமிழகத்தில் ஏற்றுமதியாகும் பொருள்களைக் கிரேக்கர் வாயிலாகவே ரோமர் அறிந்திருந்தனர். கி.மு. 30இல் எகிப்தை வென்று ரோமப் பேரரசுடன் இணைத்தான் அகஸ்டஸ். அதுமுதல் தமிழகத்திற்கும் ரோமிற்குமிடையே நேரடியான வணிகத் தொடர்பு ஏற்பட்டது. எனவே யவன, தமிழக வணிகம் விரிவடைந்தது. அகஸ்டஸ் இவ்வணிகத்தை மேலும் விரிவுபடுத்தினான். பாண்டிய மன்னன் தூதுக்குழு ஒன்றை அகஸ்டஸ் மன்னனிடம் அனுப்பினான். சேரநாட்டு முசிறியில் அகஸ்டஸ் மன்னனுக்குக் கோயில் இருந்ததென்றும் அதனை யவன வீரர்கள் பாதுகாத்தனர் என்றும் பியூடிங்கர் நிலப்பட அட்டவணை கூறுகிறது. மேலும் ஸ்டிராபோ, தாலமி, பிளைனி, அர்ரியன் போன்றோர் நூல்களும் பெரிப்ளூஸ் செங்கடல் செலவு என்னும் நூலும் சங்கத் தமிழகத்திற்கும் மேற்கத்திய நாடுகளுக்குமிடையே நடந்த வணிகத்தை விவரிக்கின்றன. தமிழகத்தின் பல இடங்களில் ரோமப் பேரரசின் நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றில் பெரும்பாலானவை அகஸ்டஸ் காலத்தவை.

தமிழகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களில் பலவித மணப்பொருள்களும் முத்து, மிளகு, மஸ்லின் துணி வகைகளும் அதிக அளவு ஏற்றுமதியாயின. இந்த அளவிறந்த பொருள்களை இறக்குமதி செய்வதால் ரோமப் பேரரசின் செல்வம் வற்றியதாம். யவனர்கள் மிளகை அதிகம் விரும்பினர். எனவே மிளகுக்கு 'யவனப்பிரியா' என்னும் பெயர் ஏற்பட்டது. யவனர்கள் பொன்னைக் கொண்டு வந்து கொடுத்து அதற்கு நிகராக மிளகைப் பெற்றுச் சென்றனர். இதனை,

"சேரலர்

சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை கலங்க

யவனர் தந்த வினைமாண் நன்கலம்

பொன்னொடு வந்து கறியொடு பெயரும்”[31]

என்னும் பாடலில் எருக்காட்டூர் தாயங்கண்ணனார் குறிப்பிடுகிறார்.

பாண்டிய நாட்டில் விளைந்த கொற்கை முத்து ரோமப் பெண்களை மிகவும் வசீகரித்தது. எனவே முத்துக்களை அதிக அளவு இப்பெண்கள் அணிந்து கொண்டனர். பிளைனி ரோமானியப் பெண்களின் ஆடம்பர வாழ்க்கையைப் பற்றிப் பின்வருமாறு எழுதுகிறார். “எங்கள் நாட்டுப் பெண்கள் கைவிரல்களிலும் காதிலும் இரண்டு அல்லது மூன்று முத்துக்களைக் கட்டித் தொங்கவிடுகிறார்கள். அவை ஒன்றோடு ஒன்று மோதி அசைவதைக் கண்டு மகிழ்கிறார்கள். ஒருபோது யான் கயஸ் சக்கரவர்த்தியின் மனைவியைப் பார்த்தேன். யான் பார்த்த நேரம் விழாக்காலமோ பரிசுத்தமான கிரியைகளைப் புரியும் நேரமோ அன்று. அவள் அணிந்திருந்த முத்துக்களும் இரத்தினக் கற்களும் அவள் தலைமீது பந்திபந்தியாகக் கிடந்து ஒளிவிட்டன. கூந்தல் சூடியிருந்த பூமாலை காது, கழுத்துமாலைகள், கைவிரல்களில் அணிந்திருந்த முத்து, பவளம் என்பவைகளின் பெறுமதி 40,000,000 செஸ்டர்ஸ் ஆகும் எனக் குறிப்பிடுகிறார். மேலும் இவர் ஆண்டில் 55,00,000 செஸ்டர்ஸ் (4,86,979 தங்க நாணயம்) இந்தியா கவர்ந்து கொள்கிறது என்றும் இந்தியாவிலிருந்து வாங்கப்பட்ட பொருள்கள் ரோமில் நூறு மடங்கு அதிக விலைக்கு விற்கப்பட்டன என்றும் கூறியுள்ளார்”[32].

முத்துக்களைப் போன்றே தமிழகத்திலிருந்து ஏற்றுமதியான மணப்பொருள்களுக்கும் (அகில், சந்தனம்) ரோமப் பேரரசு அதிக செலவிட்டது. இறந்தவரின் உடலை எரிக்க இம்மணப் பொருள்கள் பயன்படுத்தப்பட்டன. பின்னாளில் தம் செல்வநிலையைக் காட்டுவதற்காக மணப்பொருள்களைக் கொட்டி எரித்தனர். எனவே இதனாலும் ரோமர்களில் செல்வம் வீணே கரைந்தது.

யவனர்கள் மது வகைகள், மதுக்கிண்ணங்கள், ஓதிம விளக்கு, பாவை விளக்கு, கலங்கள் போன்றவற்றை இறக்குமதி செய்தனர். இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் யவனர் செய்த பொன்னாலான அழகிய வேலைப்பாடுகள் மிக்க கிண்ணத்தில் மகளிர் கள்ளை ஊற்றித்தர உண்டு மகிழ்ந்திருந்தான் என்பதை,

"யவனர் நன்கலந் தந்த தண்கமழ் தேறல்

பொன்செய் புனைகலத் தேந்தி"[33]

என்னும் இப்புறப்பாடல் காட்டுகிறது. பொன்னாலான மதுக்கிண்ணங்கள் இறக்குமதி செய்யப்பட்டதை இப்பாடல் உறுதிபடுத்துகிறது. அகழ்வாராய்ச்சிகளிலும் இவ்வகை ஜாடிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

யவனர்கள் தொழில் மாட்சிமைப்பட்ட அழகிய வேலைப்பாடுகள் கூடிய பாவை விளக்கினைச் செய்து தமிழகத்திற்குக் கொண்டு வந்தனர். இது பாவை தன் கையில் அழகிய விளக்கினை ஏந்தியிருப்பதுபோல் செய்யப்பட்டிருக்கும். இவ்விளக்கினைப் பாண்டியனின் மனைவி கோப்பெருந்தேவியின் அந்தப்புரத்தில் வைத்திருந்தனர். ஒளிமங்கியபோது நெய் வார்த்துத் தூண்டி விட்டனர். இதனை,

"யவனர் இயற்றிய வினைமாண் பாவை

கையேந் தையகல் நிறையநெய் சொரிந்து

பரூஉத்திரி கொளீஇய குரூஉத்தலை நிமிரெரி"[34]

என நெடுநல்வாடை குறிப்பிடுகிறது. இப்பாவை விளக்கினைப் 'பாவை விளக்கிற் பரூஉச்சுடர் அழல' (முல்லை 85) என முல்லைப்பாட்டும் குறிப்பிடுகிறது.

யவனர் தம் மரக்கலங்களில் கூம்பின்மேல் ஓதிம விளக்குப் பொருத்தியிருப்பர். இவ்விளக்கு அன்னப்பறவை வடிவத்தில் அமைக்கப்பட்டிருக்கும். இதனையும் தமிகத்திற்குக் கொண்டு வந்து இறக்குமதி செய்தனர்.

"யவனர்

ஓதிம விளக்கின் உயர்மிசைக் கொண்ட

வைகுறு மீனின் பைபயத் தோன்றும்"[35]

என அன்ன விளக்கு வெள்ளி மீனைப்போல காட்சியளித்ததை உருத்திரங்கண்ணனார் குறிப்பிடுகிறார். மேலும் இவர் மரக்கலங்களில் வெண்மை நிறமான புரவிகளை இறக்குமதி செய்தனர் யவனர் எனப் பாடுவதை,

"பாற்கேழ்

வாலுளைப் புரவியொடு வடவந்த தரூஉம்

நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை"[36]

என்னும் இவ்வடிகள் காட்டுகின்றன. மேலும் மதுரைக்காஞ்சியும் (322 – 323) குதிரை இறக்குமதியைச் சுட்டுகிறது. யவனர்கள் முத்துக்களுக்குச் செலவிட்டதைப்போலத் தமிழக அரசர்கள் குதிரைகளை வாங்குவதில் செலவு செய்தனர். தமிழகத்தின் தட்பவெப்பம் குதிரைகளுக்கு ஏற்றதாக இல்லை. எனவே குறுகிய காலத்திலேயே இறந்தன. குதிரைகளைப் பாதுகாக்கும் காவலர்கள் இல்லாமையாலும் நோயுற்ற காலத்தில் நோய்க்கான மருந்து கிடைக்காமல் போனதாலும் குதிரைகளை வளர்ப்பதும் வாழ வைப்பதும் முடியாததாகவே இருந்தது. எனவே அரேபியா, பாரசீகம், ரோம் நாடுகளிலிருந்து அதிக அளவில் மூவேந்தர்க்கும் குதிரைகள் இறக்குமதியாயின.

யவனர்கள் அஞ்சாமையும் வலிமையும் உடையவர்களாகத் திகழ்ந்தனர். இடுப்பில் குதிரைச் சவுக்குக் கயிற்றைச் சுற்றிக் கட்டியிருப்பர். அதன்மேல் செறிவான உடையணிந்திருப்பர். பிறர் அஞ்சும் தோற்றத்துடன் காணப்படுவர். இவர்கள் பாண்டியர்களின் அரண்மனையில் படை வீரர்களாகவும் பாசறையில் மெய்க்காப்பாளர்களாகவும் விளங்கினர். இதனை,

"மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை

மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து

வலிபுணர் யாக்கை வண்கண் யவனர்

…….. …….. ……… …….

உடம்பி னுரைக்கு முறையா நாவின்

படம்புகு மிலேச்சர் உழைய ராக"[37]

என்னும் பாடலடிகள் வாயிலாக அறியமுடிகிறது. மெய்க்காப்பாளர்களை மிலேச்சர் என நப்பூதனார் குறிப்பிடுகிறார். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் யவனர்களைக் கைப்பற்றி அவர்கள் தலையில் நெய் ஊற்றியும் கைகளைப் பிணைத்தும் அவமானப்படுத்தினான். அவர்களிடமிருந்து விலைமிக்க

அணிகலன்கள் மற்றும் வைரங்களைத் திறையாகப் பெற்றான் எனப் பதிற்றுப்பத்துப் பதிகம் (2) கூறுகிறது.

யவனர்கள் மதுரை, பூம்புகார் போன்ற நகரங்களில் வசித்து வந்தனர். பூம்புகாரில் வாழ்ந்தோர் வணிகக் கூட்டத்தினர். இவர்கள் மாளிகைகளில் வாழ்ந்ததைப் பட்டினப்பாலையும்[38] சிலம்பும்[39] கூறுகின்றன. மதுரையில் தனிச்சேரியில் யவனர்கள் இருந்தனர். அவர்கள் தச்சு வேலையில் வல்லுநர்களாகத் திகழ்ந்தனர். எனவே யவனத் தச்சர் எனவும் அழைக்கப்பட்டனர்.

**வடநாடு**

கங்கைச் சமவெளிக்கு அப்பால் இமயமலைப் பகுதியிலான நாட்டை வடநாடு என்றும் சிந்துநாடு என்றும் அழைத்தனர். இந்நாடு பகைவர் செல்லுதற்கு அரிய காவற்காடு, ஆழ்ந்த அகழி, உயர்ந்த கோபுர வாயில்கள், நெடிய மதில், அதில் வரிசையாக அமைந்த ஞாயில் என்னும் கோட்டை உறுப்புகளையும் கொண்டிருந்தது. இதனைப் பாண்டியன் நெடுஞ்செழியன் கைப்பற்றினான் என மதுரைக்காஞ்சி[40] கூறுகிறது.

வடநாட்டிலிருந்து குதிரைகள், பொன்மணிகள், சந்தனம் அரைக்கும் வட்டக்கல் ஆகியவையும் கங்கை நதிக்கரையில் விளைந்த பொருள்கள் ஆகியவற்றையும் தமிழகம் இறக்குமதி செய்தது. உருத்திரங்கண்ணனார் காவிரிப்பூம்பட்டினத்தில் குவிந்து கிடக்கும் பொருள்களைப் பட்டியலிடும்போது புரவி, வடமலைப் பிறந்த மணி, பொன், கங்கை வாரி எனும் பொருள்களைக் குறிப்பிடுகிறார். இது வடநாட்டிலிருந்து வந்ததாகும். "நீரின் வந்த நிமிர்பரிப் புரவி (பட்டினப். 185) என்றது மேற்றிசையிலிருந்து வந்த புரவியும் வட (சிந்து) நாட்டுப் புரவியையும் குறித்தது என்பர்.

வடநாட்டார் வெண்மை நிறமான வட்ட வடிவச் சந்தனம் அரைக்கும் கல்லைக் கொணர்ந்து விற்றனர். "வடவர் தந்த வான்கேழ் வட்டம்" (அகம். 340). இதோடு ஒருவகைச் சந்தனத்தையும் கொண்டு வந்தனர். இவ்வட்டக்கல்லில் கருங்கொள்ளின் நிறத்தை ஒத்த சாத்தம்மியில் கஸ்தூரி முதலிய வாசனைப் பொருள்களையும் பொதிய மலைச் சந்தனத்தையும் அரைப்பர்.

"கொள்ளுறழ் நறுங்கல் பலகூட்டு மறுக
வடவர் தந்த வான்கேழ் வட்டம்
தென்புல மருங்கிற் சாந்தொடு"[41]

என்னும் இவ்வடிகள் வடநாட்டார் இறக்குமதி செய்த வட்டக் கல்லைக் குறிப்பிடுகின்றன.

**வடுகநாடு**

சங்கத் தமிழகத்தின் வட எல்லையான வேங்கட மலைக்கு அப்பால் வடுக நாடு இருந்தது. வடுகு என்பதற்குத் தெலுங்கு என்பது பொருளாகும். இன்றைய தெலுங்கு தேசமான ஆந்திரப் பிரதேசம், கர்நாடகப் பகுதி சங்க காலத்தில் வடுக தேசம் என அழைக்கப்பட்டது. இவர்களின் மொழி தெலுங்காகவே இருந்தது. சங்கப் புலவர்கள் வடுவரை வம்ப வடுகர், வடவடுகர் எனக் கூறுகின்றனர்.

வடுகர்கள் விற்போரில் வல்லவர்களாகத் திகழ்ந்தனர். மயிற்பீலியைத் தம் வில்லில் அழகுபெறக் கட்டியிருப்பர். இவர்கள் கேட்பவரை அச்சுறுத்தும் ஒலியெழுப்பும் பம்பையையும் சினமிக்க வேட்டை நாயையும் உடன்கொண்டு செல்வர். இவர்கள் கல்வியில்லாத நெடிய மொழியைப் பேசுவர். இதனை,

"கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்
வல்லாண் அருமுனை நீந்தி"[42]
"கடுங்குரல் பம்பைக் கதநாய் வடுகர்"[43]

என்னும் பாடல்கள் உணர்த்துகின்றன.

வலிய வில்லாளிகளான வடுகர்கள் பாதி இரவில் செறிவான உணவுமிக்க கோவலர்களின் தொழுவங்களுக்குச் சென்று அங்குள்ள ஆநிரைகளைக் கவர்ந்து கொண்டு வருவர் (அகம். 253). அவ்வாறு கன்று, காளைகளுடன் ஆநிரைக் கூட்டங்களைக் கைப்பற்றி வெற்றி பெறும் பொருட்டுத் தலையில் பூச்சூடிக் காலை நேரத்திலேயே தம் தெய்வத்திற்கு முதிர்ந்த கள்ளினைப் பலியாகச் செலுத்துவர். பின் புலால் கலந்த உணவினை உண்பர்.

“வேங்கடத் தும்பர்
கொய்குழை யதிரல் வைகுபுலர் அலரி
சுரியிரும் பித்தை சுரும்புபடச் சூடி
இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை
நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்
வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து”[44]

என்னும் அகப்பாடல் வடுகர்களின் வழிபாடு, வழக்கங்களை விளக்குகிறது.

தமிழகத்தைத் தனது அரசின்கீழ்க் கொண்டுவரும் பொருட்டுப் படையெடுத்து வநதவர் மோரியர். இவர்கள் படைகொண்டு வரும்போது தேர்கள் செல்லப் பாதையில்லாது போகவே மலைகளைப் பிளந்துகொண்டு மௌரியர்களின் தூசிப் படைகளாக விளங்கியவர் வடுகர்கள். இதனை

“முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்றிசை மாதிரம் முன்னிய வரவிற்கு”[45]

எனும் அகப்பாடலில் மாமூலனார் கூறுகிறார்.

நன்னனுக்குரிய பாழியைக் கைப்பற்றி வடுகர் ஆட்சி செய்து வந்தனர். அச்சமயத்தில் வெற்றி நீங்காத தோளினையுடைய சோழன் இளஞ்சேட்சென்னி தனது குடிக்கு ஆற்றும் கடனாக வடுகர்மீது போர் தொடுத்துச் சென்றான். பாழியின் மதிலை அழித்து அங்கு ஆட்சி புரிந்து வந்த வடுகரையும் கொன்று அழித்தான். எனவே இளஞ்சேட்சென்னி செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி என அழைக்கப்பட்டான். இதனை,

“சோழர் பெருமகன்
விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி
குடிக்கடன் ஆகலிற் குறைவினை முடிமார்
செம்புறழ் புரிசை பாழி நூறி
வம்ப வடுகர் பைந்தலை சவட்டிக்”[46]
“வடவடுகர் வாளோட்டிய”[47]

என்னும் இவ்விரு பாடல்களும் இளஞ்சேட் சென்னி வடுகரை வென்றதைப் பாடுகின்றன.

### அயலக ஊர்கள்

பழந்தமிழகத்திற்கு அப்பால் அமைந்த புகழ் பெற்ற ஊர்களையும் நகரங்களையும் சங்கப் புலவர் அறிந்திருந்தனர். அதனைத் தம் பாடல்களிலும் பதிவு செய்துள்ளனர். தண்டகாரண்யம், சாலியூர், பாடலிபுரம், வாரணவாசி முதலான ஊர்களைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணக் கிடக்கின்றன.

### தண்டகாரணியம்

தண்டகாரணியம் எனும் நிலப்பகுதி ஆரிய நாட்டிலுள்ள ஒரு நாடு எனப் பழைய உரையாசிரியர் குறிப்பிடுவர். இது இன்றைய மும்பையின் ஒரு பகுதியில் இருந்தது என்பர். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் இத்தண்டகாரணியத்தில் கைப்பற்றிய வரையாடுகளைத் தனது தொண்டி நகருக்குக் கொண்டு வந்து அங்குள்ள மக்களுக்குப் பகிர்ந்து கொடுத்தான்.

“தண்டா ரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுள் தந்து கொடுப்பித்து”[48]

என்னும் பதிற்றுப்பத்துப் பதிக வரிகள் வாயிலாக இதனை அறியமுடிகிறது.

### சாலியூர் (நெல்லூர்)

நெல்லூர் என்பது இன்றைய ஜாவாத் தீவில் உள்ள சாரியூர் என்னும் ஊராகும். சங்க காலத்தில் ஜாவாத்தீவை நெல்லூர், சாலியூர் எனக் குறித்தனர். இதனை உயர் நெல்லின் ஊர் - சாலியூர் என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. உயர் நெல் - யவம், யவம் என்பது சயம், ஜவ, ஜாவ, சாவகம், ஜாவா எனத் திரிந்தது என்பர். தற்போது ஜாவா, சுமத்ரா என அழைக்கப்பட்டு வருகிறது.

உயர்ந்த நெல் வகையான சாலி என்னும் நெல் மிகுதியாக விளையும் இடமாக விளங்கியதால் சாலியூர் என்றும் நெல்லூர் என்றும் அழைக்கப்பட்டது. இது கடலை அகழியாகக் கொண்டு அமைந்திருந்த தீவாகும். இவ்வூரின் எல்லாப் பக்கங்களிலும் கடலே இருந்ததால் அச்சம் பொருந்தியதாக இருந்தது. கடல் அலைகளைக் கிழித்துக்கொண்டு இவ்வூருக்குக் கப்பல்கள் சென்றன. கப்பல் கரை சேரும்போது பாய்மரத்தை

எடுத்து நெடுங்கொடியோடு இணைப்பர். அப்போது முரசுகள் முழக்கப்படும். இங்குள்ள மக்கள் கப்பலில் வந்த பொருள்களைப் பொன்னைக் கொடுத்து வாங்குவர். இங்கு வரும் கப்பல்கள் மிகப் பெரிய நாவாய்களாகவும் திகழ்ந்தன. எனவே அவை மேகங்களுக்கு நடுவே மலைகள் போலத் தோற்றமளித்தன. இத்தகைய சிறப்பு கொண்ட சாலியூரைப் பாண்டியன் நெடியோன் கைப்பற்றினான். இதனை,

"பொலந்தார் மார்பின் நெடியோன் உம்பல்
……….. …….
வானியைந்த இருமுந்நீர்ப்
பேஎநிலைஇய இரும்பெளவத்துக்
கொடும்புணரி விலங்குபோழ்க்
கடுங்காலொடு கரைசேர
நெடுங்கொடிமிசை யிதையெடுத்
தின்னியைச முரசமுழங்க
பொன்மலிந்த விழுப்பண்ட
நாடார நன்கிழிதரும்
ஆடியற் பெருநாவாய்
மழைமுற்றிய மலைபுரையத்
துறைமுற்றிய துளங்கிருக்கைத்
தென்கடற் குண்டகழிச்
சீர்சான்ற வுயர்நெல்லின்
ஊர்கொண்ட வுயர் கொற்றவ"[49]

என்னும் மதுரைக்காஞ்சியின் இவ்வடிகளில் புலவர் பாண்டியன் நெடியோனின் சாவக வெற்றியைப் பாண்டியன் நெடுஞ்செழியன்மேல் ஏற்றிக் கூறுகிறார்.

பாண்டியன் நெடியோனே நிலந்தரு திருவிற் பாண்டியன், வடிம்பலம்ப நின்ற பாண்டியன் என்று அழைக்கப்படுகிறான். இப்பாண்டியனே முந்நீர் விழா எடுத்து கடல்தெய்வத்தை வணங்கினான். இவன் சாவகத்தை வெற்றி பெற்ற பின்பு வெற்றியின் சின்னமாக அங்குள்ள பாறையில் தன் பாதச் சுவட்டைப் பொறித்துக் கடல் நீரால் அலம்பியதால் வடிம்பலம்ப நின்றான் என்ற

பெயரைப் பெற்றான். இவ்வாறு பேரரசன் தன் அடியைப் பாறையில் பொறித்து அதனை நீர் அலம்பும்படி வைக்கும் செய்தி ஜாவாவில் ஸ்ரீபூர்ணவர்மன் சாசனங்களிலும் காணப்படுகிறது. எனவே நெடியோனே சாவகத்தைக் கைப்பற்றினான் என்பது தெளிவாகிறது. "நெல்லூர் என்பது இக்காலத்து ஆந்திர மாநிலத்தில் உள்ள நெல்லூரே ஆகும்"[50] எனக் கூறுவார் ஆர். ஆளவந்தார். "உயர் நெல்லின் ஊர் - சாலியூர் என்று நச்சினார்க்கினியர் குறித்தார். G.E. Gerini என்பார் Further India என்னும் நூலில் யவத்தீவத்தின் தலைநகரை மதுரை என்றும் அதன் கடற்றுறைப் பட்டினம் இதற்கு நான்கு மைல் அளவில் சாரி (Sari) எனும் பெயரில் உள்ளது என்றும் யவத்தீவராஜன் மாரசீலு என்பவன் (கி.பி. 1027 – 75) மாலிக் உல்சாலி என முடிசூடி முஸ்லீம் ஆனான் என்றும் கூறியுள்ளார். எனவே யவத்தீவத்தின் (சாவகத்தின்) நீர் சான்ற நெல்லினூர் சாலியூராதலும் இது கடற்றுறைப் பட்டினம் என்பதும் துணியப்படும்"[51] என மா. இராசமாணிக்கனார் குறிப்பிடுவதால் சாலியூர் ஜாவாத் தீவில் அமைந்துள்ள துறைமுகம் என்பதை அறிய முடிகிறது.

### பாடலிபுரம்

பாடலிபுரம் தற்போது பாட்னா என்று அழைக்கப்படுகிறது. கங்கையும் சொர்ணவதி ஆறும் இணையுமிடத்தே இந்நகரம் அமைந்திருக்கிறது. கி.மு. ஆறாம் நூற்றாண்டளவிலேயே தலைநகரமாகத் திகழ்ந்தது. இந்தியாவின் முதல் பேரரசான மகதப் பேரரசின் தலைநகரமாகப் பாடலிபுரம் விளங்கியது. இதனைச் சங்கப் புலவரான மாமூலனார் தம் பாடலில் பதிவு செய்துள்ளதை,

> "பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
> சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
> நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ"[52]

என்னும் இப்பாடல் வாயிலாக அறியமுடிகிறது.

பாடலி நகரம் பொன் வளம் மிக்கதாக விளங்கியது. சொர்ணவதி என அழைக்கப்படும் சோணை ஆற்றின் கரையில் இந்நகரம் அமைந்திருந்தது. இங்குத் தந்தங்களையுடைய யானைகள் மிகுதியாக இருந்தன. இந்த யானைகள் சோணையாற்றில் நீராடுவதை,

"வெண்கோட்டி யானை சோணை படியும்

பொன்மலி பாடலி"[53]

என்னும் குறுந்தொகைப் பாடலில் படுமரத்து மோசிகீரனார் குறிப்பிடுகிறார்.

நந்தநர்களை வென்ற மௌரியரும் பாடலிபுத்திரத்தைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்தனர். மௌரியர் ஆட்சியின்போது பாடலிபுரம் மேலும் விரிவாக்கப்பட்டது. இதனை மெகஸ்தனிஸ் "கங்கை நதியின் அகலம் 100 ஸ்டேடியா ஆகும். அதன் குறைந்த ஆழம் 20 பாதம் ஆகும். இக்கங்கை நதியும் மற்றோர் ஆறும் இணையும் இடத்தில் பாலிபோத்ரா நகரம் இருக்கிறது. அந்நகரத்தின் அகலம் 15 ஸ்டேடியா. நீளம் 80 ஸ்டேடியா. அந்நகரம் நாற்கர இணைகரம் போன்ற வடிவத்தைக் கொண்டுள்ளது. அதைச் சுற்றிலும் மரத்தாலான மதிற்சுவர் எழுப்பப்பட்டுள்ளது. அச்சுவரில் ஆங்காங்கு அம்புகள் எய்யப்படுவதற்கு 64 துளைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. மற்றும் 570 கூடகோபுரங்களும் இருக்கின்றன. முன்னால் நீர் நிரம்பிய அகழி ஒன்று காணப்படுகின்றது. அதற்குச் சோன் நதியிலிருந்து நீர் வருகிறது. மற்றும் ஊரில் சேரும் கழிவு நீரை ஊருக்கு வெளியே எடுத்துச்செல்லச் சாதனங்களும் அமைக்கப்பட்டுள்ளன"[54] எனக் குறிப்பிடுகிறார். இந்நகரத்தைத் தாலமி பாலிம்போத்ரா எனவும் இது அரசர்களின் மாளிகை எனவும் கூறுகிறார். இதன் இருப்பிடம் $143^{0'}.0'$ கி, X $27^{0}$. 0' வ என்று குறித்துள்ளார்.

**வாரணாசி**

கங்கையாற்றின் கரையில் அமைந்த இவ்வூர் இன்றும் வாரணாசி, காசி என்றே அழைக்கப்படுகிறது. இது பழங்காலம் முதல் இன்று வரை புண்ணிய தலமாகக் கருதப்படுகிறது. இங்குள்ள மக்கள் தெருவில் செல்லும் முன்பின் அறியாத மக்களின் துன்பத்தைக் கண்டபோதும் தன் துன்பமாக எண்ணிக் கலங்கும் கருணை உள்ளம் படைத்தவர்களாக விளங்குவர். இதனை,

"தெருவின்கண் காரண மின்றிக் கலங்குவோர்க் கண்டுநீ

வாரண வாசிப் பதம்பெயர்த்தல் ஏதில"[55]

என்னும் கலித்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது.

# தொகுப்புரை

பழந்தமிழர்களும் அயல்நாட்டினரும் வணிகம் காரணமாகவும் போர் காரணமாகவும் தொடர்பு கொண்டனர். ஆரியரின் தாயகம் ஆசியாமைனர் ஆகும். இவர்கள் தமிழகத்தில் நுழைந்து பெரும் கலாச்சார மாற்றத்தை ஏற்படுத்தினர்.

இலங்கையும் தமிழகமும் நெருங்கிய வணிகத் தொடர்பு கொண்டிருந்தன. தமிழக வணிகர் இலங்கையின் அரசியலில் தாக்கத்தை ஏற்படுத்தினர். கோசர் தமிகத்தின் பல இடங்களிலும் பரவியிருந்தனர். எனினும் இவர் தமிழரல்லர்.

தமிழகத்தை வெல்லும் பொருட்டு மௌரிய கலிங்கப் பேரரசர்கள் முயன்று தோற்றதைச் சங்கப் பாடல்களும் கல்வெட்டுச் செய்திகளும் தெரிவிக்கின்றன.

பழந்தமிழகம் தென்கிழக்காசிய நாடுகளான மலேசியா, ஜாவா போன்ற நாடுகளுடன் வாணிகத் தொடர்பு கொண்டதுடன் ஜாவாவைக் கைப்பற்றித் தனது ஆட்சியைச் செலுத்தியது.

மேற்கத்திய நாடுகளான எகிப்து, கிரேக்கம், ரோம், அரேபியா, பாரசீக நாடுகளுடன் கடல் கடந்து வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் பழந்தமிழர். முத்து, மிளகு, துணி வகைகள், வாசனைப் பொருள்கள் போன்றவற்றை அதிக அளவு ஏற்றுமதி செய்தனர். குதிரை, மதுவகைகள், ஜாடி, பொன் விளக்குகள் போன்றவை இறக்குமதி செய்யப்பட்டன.

தண்டகாரணியம், பாடலிபுரம், வாரணாசி முதலான வட இந்திய நகரங்களையும் சங்கப் புலவர்கள் நன்கு அறிந்திருந்தனர்.

## குறிப்புகள்

1. பி.டி. சீனிவாச ஐயங்கார், தமிழ் வரலாறு, ப. 39
2. புறம். 66
3. மேலது. 9
4. ந.சி. கந்தையா, தமிழ் இந்தியா, ப. 24
5. ந. சுப்பிரமணியன், இந்திய வரலாறு, ப. 32
6. கே.கே. பிள்ளை, தென் இந்திய வரலாறு, ப. 29
7. குறுந். 7
8. அகம். 276
9. மேலது. 336
10. நற். 170
11. மா. ராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 51
12. பட்டினப். 190
13. சி.க. சிற்றம்பலம், பண்டைய தமிழகம், ப. 309
14. கணியன் பாலன், தமிழக அரசுகளும் மௌரியப் பேரரசும் (கட்டுரை) ப. 5
15. பட்டினப். 190 – 193
16. புறம். 169
17. அகம். 113
18. மதுரைக். 508 – 509
19. ரா. ராகவையங்கார், தமிழகக் குறுநில வேந்தர்கள், ப. 30, 39
20. டி.டி. கோசாம்பி, பண்டைய இந்தியா, ப. 268
21. ந. சுப்பிரமணியன், இந்திய வரலாறு, ப. 62
22. அகம். 265
23. மேலது. 251

24. வி.எஸ்.வி. இராகவன், மெகஸ்தனிஸ், ப. 108

25. புறம். 175

26. அகம். 69

27. மேலது. 251

28. மேலது. 281

29. டி.டி. கோசாம்பி, பண்டைய இந்தியா, ப. 295

30. ந.சி. கந்தையா, தமிழ் இந்தியா, ப. 215

31. அகம். 149

32. ந.சி. கந்தையா, தமிழ் இந்தியா, பக். 228 – 229

33. புறம். 56

34. நெடுநல். 101 – 103

35. பெரும்பாண். 316 – 318

36. மேலது. 319 – 321

37. முல்லை. 59 – 66

38. பட்டினப். 216 – 218

39. சிலம்பு. 6: 143, 5: 9 – 12

40. மதுரைக். 62 – 69

41. நெடுநல். 50 – 52

42. அகம். 107

43. நற். 212

44. அகம். 213

45. மேலது. 281

46. மேலது. 375

47. புறம். 378

48. பதிற். பதிகம், 2

49. மதுரைக். 61, 75 – 88

50. ஆர். ஆளவந்தார், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 134

51. மா. இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப. 477

52. அகம். 265

53. குறுந். 75

54. வி.எஸ்.வி. இராகவன், மெகஸ்தனிஸ், பக். 197 – 108

55. கலித். 60

# முடிவுரை

சங்க இலக்கியங்களில் நாடுகளும் ஊர்களும் என்னும் இவ்வாய்வானது 1. சங்க கால நாடுகள், 2. சங்க கால நகரங்கள், 3. சங்க கால ஊர்கள், 4. அயலக நாடுகளும் ஊர்களும் என ஆராயப்பட்டது. ஒவ்வொரு இயலின் இறுதியிலும் அந்தந்த இயலில் ஆராய்ந்து கண்ட உண்மைகள் தொகுத்துரைக்கப் பெற்றுள்ளன. அவை ஆய்வு முடிவுகளாக அமைகின்றன.

முல்லை நிலத்தில் அரசு தோற்றம் பெற்றது. பின் நால்வகை நிலங்களிலும் அரசு உருவானது. இந்த அரசுகள் எல்லையை வரையறுத்ததில் நாடுகள் தோற்றம் பெற்றன. வடக்கே வேங்கடம், தெற்கே குமரி வரையிலும் மற்ற இருபுறமும் கடல் சூழ்ந்த தமிழகம் பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டு பல்வேறு மன்னர்களாலும் வேந்தர்களாலும் ஆளப்பட்டன. நாட்டின் பாதுகாப்பிற்காக அரண்களும் படைகளும் நிறுவப்பட்டன. நாட்டின் நிர்வாகத்திற்காக வரி வசூலிக்கப்பட்டது.

சங்கத் தமிழகத்தில் உள்ள நாடுகளைப் பேரரசு நாடுகள், சிற்றரசு நாடுகள், எனப் பகுக்கலாம். பேரரசர்கள் வேந்தர் எனவும் சிற்றரசர்கள் மன்னர் எனவும் அழைக்கப்பட்டனர். மன்னர் மரபே தொன்மையானது. வேந்தர் மரபு பிற்காலத்தில் எழுந்தது.

சங்க காலத்தில் சேர, சோழ, பாண்டியப் பேரரசுகள் சிறப்பாக விளங்கின. இவற்றில் சேரநாடு மேற்கே அமைந்திருந்தது. மூன்று பேரரசு நாடுகளில் பரப்பளவில் பெரிய நாடு சேரநாடாகும். இதனை இரு தாயாதிகளான உதியன் சேரலாதன், இரும்பொறை குடிவழியினர் ஒற்றுமையுடன் ஆட்சி புரிந்தனர். போர்களில் ஈடுபட்டுப் பல பகுதிகளை இணைத்துப் பேரரசாக நிலைநிறுத்தினர். சோழ நாடு பேரரசு நாடுகளில் சிறிய அளவிலான பரப்பளவைக் கொண்டிருந்தது. சோழ நாட்டை ஒன்பது தாயாதி அரசர்கள் ஆண்டனர். பின்னர் சென்னி, கிள்ளி வழியினர் பலமடைந்தனர். சோழரிடையே உட்பூசல் மிகுந்திருந்தது. எனவே தனது ஆட்சியை நிலைப்படுத்தவே போராடினர். பின்பே மற்ற பகுதிகளை வென்று இணைத்துப் பேரரசாகப் பரப்பளவை விரிவுபடுத்த முயன்றனர். பாண்டியப் பேரரசு தென்பகுதியில் அமைந்திருந்தது. பாண்டியர் தன் அண்டைச்

சிற்றரசுப் பகுதிகளை வென்று தனது நாட்டின் பரப்பை விரிவுபடுத்தினர். இம்மூன்று நாடுகளும் சங்க கால இறுதிவரை நிலையான பேரரசுகளாகத் திகழ்ந்தன.

குறிஞ்சி, முல்லைப் பகுதிகளில் அமைந்த நாடு சிற்றரசு நாடுகள் எனப்பட்டன. மலை, அதனைச் சுற்றியமைந்த காடுகள் மற்றும் சிறு பகுதிகளையே தனது நாடாகக் கொண்டிருந்ததால் பொருளாதாரத்தில் பின்தங்கி இருந்தது. எனவே பெரிய படைகளை வைத்திருக்க இயலவில்லை. பெரும்படை கொண்டிருந்த பேரரசுகள் எளிதில் சிற்றரசு நாடுகளைத் தன்கீழ் கொண்டுவர முடிந்தது.

சங்கப் பாடல்கள் வாயிலாக ஏறத்தாழ இருபத்தைந்து சிற்றரசு நாடுகளைப் பற்றி அறியமுடிகிறது. இவற்றில் கொங்கு நாடு ஆறு சிற்றரசு நாடுகளை உள்ளடக்கிக் கொங்குமண்டலம் என வழங்கப்பட்டது. கொண்கான நாடு பேரரசாகும் நிலையைத் தொட முயல்கையில் சேரர்களால் முறியடிக்கப்பட்டு அவர் ஆட்சியின்கீழ் கொண்டுவரப்பட்டது. தொண்டை நாடு இருபத்து நான்கு கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது.

சிற்றரசு நாடுகளை ஆட்சி செய்த மன்னர்கள் பேரரசர்களின்கீழ் படைத்தளபதிகளாகப் பணியாற்றினர். இவர்களின் ஆட்சியும் பேரரசர்களின்கீழ் அமைந்தது. ஒருசில சிற்றரசர்கள் சுதந்திரமாக ஆட்சி புரியும் நோக்கோடு பேரரசரிடம் போரிட்டு அழிந்தனர். இதனைப் பாரி, அதியமான், ஓரி, கழுவுள், நன்னன், அஃகுதை முதலான சிற்றரசர்கள் அழிவில் காண முடிகிறது. சிற்றரசர்களிடையே உள்ள ஒற்றுமையின்மையும் அவர்கள் ஆட்சி செய்த நிலப்பகுதியும் சிற்றரசர்களின் தோல்விக்குக் காரணமானது.

சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள நகரங்கள் ஆற்றங்கரை ஓரங்களில் மருத நிலப்பகுதியில் அமைந்து செழிப்புடனும் பல்வகைத் தொழில் வளர்ச்சி பெற்றும் திகழ்ந்தன. நகரங்களின் முக்கியத் தொழில்களாக வேளாண்மையும் வணிகமும் விளங்கின.

தலைநகரங்கள் நாட்டின் நிர்வாக மையமாக விளங்கின. இவை மதில், அகழி போன்ற பாதுகாப்பு வசதிகளுடன் காணப்பட்டன. பழந்தமிழர்கள் நகரமைப்பு மற்றும் கட்டிடக் கலையில் சிறந்தவர்களாக விளங்கியதைப்

புகார், மதுரை, காஞ்சி போன்ற நகரங்களின் அமைப்பைக் கொண்டு அறியமுடிகிறது. இந்நகரங்கள் செல்வச் செழிப்புடனும் வணிக மையமாகவும் இயற்கை எழிலுடனும் மாடமாளிகைகளுடனும் காணப்பட்டன.

பண்டைய தமிழர்கள் உலகளாவிய வணிகத்தில் ஈடுபட்டதைச் சங்க காலத்திலிருந்த துறைமுகங்களும் தற்போது நடைபெறும் அகழ்வாராய்ச்சிகளும் உறுதிபடுத்துகின்றன. சங்க காலத் துறைமுகங்கள் கப்பல்களை அழைக்கும் கலங்கரை விளக்கம், பொருள்களைப் பாதுகாத்து வைக்கும் பண்டக சாலை, அவற்றிற்கு வரி வசூலிக்கும் சுங்கச் சாவடி போன்ற வசதிகளைக் கொண்டு அமைந்திருந்தன.

சங்க காலத்தில் பெரிய நகரங்களாக விளங்கியவை தற்போது சிற்றூர்களாகவும் சிதைந்தும் காணப்படுகின்றன. சில நகரங்கள் இருந்த சுவடே இல்லாது அழிந்துவிட்டன. மதுரை, காஞ்சி போன்ற நகரங்கள் இன்றும் நகரங்களாகவே நிலைபெற்றுள்ளன. சங்கப் புலவர்கள் அரசர்களுக்கிடையே நடந்த போரைக் குறிப்பிடும்போதும் அரசர்களை வாழ்த்தும் இடங்களில் சிலபோதும் நகரங்களைப் பதிவு செய்துள்ளனர்.

தலைவியின் அழகு நலனை வருணிக்கும்போதும் போர் பற்றிய குறிப்புகளைப் பதிவு செய்யுமிடத்தும் ஊர்ப்பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. பழந்தமிழர்கள் நில அடிப்படையிலும் இயற்கை அமைப்பிலும் குடியிருப்புகள் சார்ந்தும் ஊர்களுக்குப் பெயரிட்டுள்ளனர். சங்க கால ஊர்கள் நாற்பத்து மூன்று பொதுக்கூறுகளையும் நூற்றிரண்டு சிறப்புக் கூறுகளையும் பெற்றுள்ளன.

சங்க இலக்கியங்கள் சுட்டிய ஊர்ப்பெயர்களில் சில ஊர்ப்பெயர்களே தனது தொன்மையைத் தக்க வைத்துள்ளன. பெரும்பாலான ஊர்களின் பெயர்கள் சிதைந்தும் திரிந்தும் காணப்படுகின்றன. சில ஊர்கள் முற்றிலும் வேறு வடிவத்தைக் கொண்டுள்ளன.

எண்பத்திரண்டு ஊர்கள் நேரிடையாக சங்கப் பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. எழுபத்திரண்டு ஊர்ப்பெயர்களைப் புலவர் பெயர்களின் வாயிலாக அறியமுடிகிறது. பத்து ஊர்களை மன்னர்கள் வாயிலாக அறிந்துகொள்ள முடிகிறது.

பழந்தமிழர்கள் வணிகம் காரணமாகவும் போர் காரணமாகவும் தமிழகத்திற்கு அப்பால் உள்ள அயலக நாடுகளுடன் தொடர்பு கொண்டனர். இலங்கை, ஜாவா, சுமத்ரா போன்ற நாடுகளில் வணிகம் செய்தனர். பின்னர் வெற்றி பெற்றுத் தனது ஆட்சியைச் செலுத்தினர்.

வட இந்தியப் பேரரசர்களான மௌரியரும் கலிங்கரும் தமிழகத்தை வெல்லும் பொருட்டுப் படைகொண்டு வந்தனர். மௌரியர், வடுகர், கோசர் முதலானோரின் துணையோடு வந்தனர். எனினும் தோற்றோடினர். கலிங்க மன்னன் காரவேலன் தமிழர் கூட்டணியை உடைத்தான் எனினும் வெல்ல இயலவில்லை. தமிழக அரசர்கள் வலிமையோடு ஆட்சி செய்ததைக் காணமுடிகிறது.

மேற்கத்திய நாடுகளான எகிப்து, கிரேக்கம், ரோம், அரேபியா, பாரசீகம் முதலான நாடுகளுடன் வணிகத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டனர் பழந்தமிழர். கிரேக்க நாடுகளின் செல்வம் வற்றும் அளவுக்குத் தமிழகத்துப் பொருள்கள் முத்து, மிளகு, உடை ஆகியவை ஏற்றுமதியாயின. அந்நாடுகளிலிருந்து குதிரை, பொன் போன்றவை இறக்குமதி செய்யப்பட்டன.

இந்த ஆய்வுப் பொருள் தொடர்பாக மேலும் ஆராயப்பட வேண்டிய தளங்கள்:

சங்க கால வரலாற்றைச் சங்க இலக்கியங்களோடு கல்வெட்டுத்துறை, பழங்கால நாணயங்கள் துறை, அகழ்வாராய்ச்சித் துறைகளோடு இணைத்து ஆராய்வதால் சங்க காலத்தைப் பற்றிய தெளிவை ஏற்படுத்தலாம்.

சங்கத் தமிழக அரசியல் போர் முறைகளைப் பிறநாட்டு அரசியல் போர் முறைகளோடு ஒப்பிட்டு ஆராயலாம்.

# துணைநூற்பட்டியல்


## முதன்மை நூல்கள்

1. தொல்காப்பியம் - கழக வெளியீடு
(பொருளதிகாரம் இளம்பூரணர் உரை) 522, டி.டி.கே. சாலை
சென்னை – 18

2. எட்டுத்தொகை - கழக வெளியீடு
522, டி.டி.கே. சாலை
சென்னை – 18, 2007

3. எட்டுத்தொகை - கோவிலூர் மடலாயம்
கோவிலூர், 2003

4. பத்துப்பாட்டு - கழக வெளியீடு
522, டி.டி.கே. சாலை
சென்னை - 18. 2007

5. பத்துப்பாட்டு - கோவிலூர் மடாலயம்
கோவிலூர், 2003

## நிகண்டு

1. சேந்தன் திவாகரம் - கழக வெளியீடு
522, டி.டி.கே. சாலை,
சென்னை – 18

## துணைநூல்கள்


1. அப்பாதுரையார், கா. - **தென்னாட்டுப் போர்க்களங்கள்** செண்பகா பதிப்பகம், பாண்டி பஜார் சென்னை - 17. 2011

2. அப்பாதுரையார், கா. - **குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு,** இராமையா பதிப்பகம், சென்னை- 2012

3. ஆளவந்தார், ஆர். - **இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தரமணி, சென்னை - 113, 1984

4. இரத்தினசாமி, சு. - **பண்டைத் தமிழர் வரலாறும் பண்பாடும்** ஸ்ரீ வேலன் பதிப்பகம், சிதம்பரம் - 1

5. இளங்குமரன், இரா. - **தென்னாட்டு வணிகம்** பூவிழி பதிப்பகம் சென்னை - 15

6. இராகவன், வி.எஸ்.வி. - **மெகஸ்தனிஸ்**
மணிவாசகர் நூலகம்
12 – பி, மேலசன்னதி
சிதம்பரம் - 1, 1978

7. இராகவன், வி.எஸ்.வி. - **தாலமி**
மணிவாசகர் நூலகம்
12 – பி மேலசன்னதி
சிதம்பரம் - 1, 1978

8. இராகவன், வி.எஸ்.வி. - **பாஹியான்**
மணிவாசகர் நூலகம்
12 – பி, மேலசன்னதி
சிதம்பரம் - 1.

9. இராகவையங்கார், மு. - **வேளிர் வரலாறு**
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை – 5, 2010

10. இராகவையங்கார், இரா. - **வஞ்சி மாநகரம்**
தாம்ஸன் அச்சுக்கூடம்
சென்னை, 1934

11. இராகவையங்கார், இரா. - **தித்தன் - கோசர்**
ராமையா பதிப்பகம்
சென்னை - 14, 2012

12. இராகவையங்கார், இரா. - பெரும்பாணாற்றுப்படை பட்டினப்பாலை (ஆராய்ச்சியும் உரையும்)
சாரதா பதிப்பகம்
சென்னை, 2013

13. இராகவையங்கார், இரா. - தமிழகக் குறுநில வேந்தர்கள்
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை - 4, 2009

14. இராசமாணிக்கனார், மா. (தொ.ஆ. காவ்யா சண்முகசுந்தரம்) - சங்க இலக்கிய வரலாறு
காவ்யா, கோடம்பாக்கம்
சென்னை - 24, 2010

15. இராசமாணிக்கனார், மா. (தொ.ஆ. காவ்யா சண்முகசுந்தரம்) - தமிழ்நாட்டு வரலாறு
காவ்யா
கோடம்பாக்கம்
சென்னை - 24, 2008

16. இராசமாணிக்கனார், மா. - தமிழக வரலாறும் பண்பாடும்
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை
சென்னை – 14, 2011

17. இராசமாணிக்கனார், மா. - சோழர் வரலாறு
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை - 5, 2011

18. இராமலிங்கம், அரங்க. - **சங்க இலக்கியத்தில் வேந்தர்கள்**
பாரதி புத்தகாலயம்
பரங்கி மலை,
சென்னை - 16

19. கனகசபை, வி. (மொ.பெ. அப்பாதுரை, கா.) - **1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்**
பூம்புகார்ப் பதிப்பகம்
பிராட்வே
சென்னை – 108, 2008

20. கந்தையா, ந.சி., - **தமிழர் சரித்திரம்**
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்
பவழக்காரத் தெரு
சென்னை – 1, 1964

21. கந்தையா, ந.சி. - **தமிழ் இந்தியா**
கழக வெளியீடு
சென்னை – 18, 1945

22. குருசாமி, மா.ரா.போ. - **பழந்தமிழகம்**
மெய்யப்பன் பதிப்பகம்
53. புதுத்தெரு
சிதம்பரம் - 1, 2009

23. குழந்தை, புலவர் - **கொங்குநாடு**
சாரதா பதிப்பகம்
சென்னை, 2007

24. குழந்தைவேலன், க. - **ஊரும் பேரும்**

தமிழ்ச்சோலை

பெருங்குடி,

சென்னை – 96, 2001

25. கோசாம்பி, டி.டி. (மொ.பெ. ஆர்.எஸ்.நாராயணன்) - **பண்டைய இந்தியா பண்பாடும் நாகரிகமும்**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்

சென்னை – 98, 2008

26. கோவிந்தன், கா. புலவர் - **தமிழகத்தில் கோசர்கள்**

இராமையா பதிப்பகம்

சென்னை - 14, 2011

27. கோவிந்தன், கா. புலவர் - **வஞ்சி மூதூர்**

எழிலகம்

சென்னை – 98, 1998

28. கோவிந்தன், கா. புலவர் - **கழுமலப் போர்**

நாதன் பதிப்பகம்

சி.ஐ.டி. நகர்

சென்னை - 35, 1975

29. கோவிந்தன், கா. புலவர் - **தமிழக வரலாறு - சங்க காலம் - அரசர்கள்**

எழிலகம்

செய்யா - 7. 1993

30. சதாசிவ பண்டாரத்தார், தி.வை. - பாண்டியர் வரலாறு
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை – 5, 2007

31. சிதம்பரனார், சாமி. - பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை - 5. 2012

32. சிதம்பரனார், சாமி. - பழந்தமிழர் அரசியல்
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை – 5, 2009

33. சிவசுப்பிரமணியன், ஆ. - வரலாற்றுப் பொருள்முதல்வாதம் - ஓர் அரிச்சுவடி
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை - 98. 2009

34. சிவகாமி - ஆரியர் ஆதிவரலாறும் பண்பாடும்

35. சிவத்தம்பி, கா. - பண்டைத் தமிழ்ச் சமூகம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை – 98, 2010

36. சிற்றம்பலம், சி.க. - பண்டைய தமிழகம்
குமரன் பப்ளிஷர்ஸ்
வடபழநி
சென்னை - 26

37. சீனிவாச ஐயங்கார், பி.டி. - தமிழர் வரலாறு 1,2
(மொ.பெ. கா. கோவிந்தன்)
கழக வெளியீடு
டி.டி.கே. சாலை
சென்னை – 8, 1989

38. சுந்தரவேலு, குடவாயில் - சங்ககாலப் பேரூர்களும் சிற்றூர்களும்
அருள் பதிப்பகம்
சென்னை – 78, 2011

39. சுப்புராயலு, எ, முத்துசங்கர், கௌ.- இடைக்காலத் தமிழ்நாட்டில் நாடுகளும் ஊர்களும்
பாலமுருகன், பா.
தமிழகத் தொல்லியல் கழகம்
தஞ்சாவூர், 2014

40. சுப்ரமண்யன், ந. - சங்ககால வாழ்வியல்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை – 98

41. சுப்ரமண்யன், ந. - இந்திய வரலாறு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை – 98, 2009

42. சேதுப்பிள்ளை, ரா.பி. - தமிழகம் ஊரும் பேரும்
பழனியப்பா பிரதர்ஸ் பதிப்பகம்
கோவை – 1, 2010

43. நாச்சிமுத்து, கி. - தமிழ் இடப்பெயராய்வு
சோபிதப் பதிப்பகம்
நாகர்கோயில்

44. நீலகண்ட சாஸ்திரி, கே.ஏ. - **தென்னிந்திய வரலாறு**
இலங்கை அரசு வெளியீடு, 1966

45. நெடுமாறன், பழ. - **பழந்தமிழர் பரவிய நாடுகள்**
தமிழ்க்குலம் பதிப்பாலயம்
மயிலை
சென்னை – 4, 2006

46. தங்கவேலு, கோ. - **தாய்நில வரலாறு**
அமிழ்தம் பதிப்பகம்
இராயப்பேட்டை
சென்னை – 14

47. தணிகாசலம், கதிர். - **தமிழர் வரலாறும் இலங்கை இடப்பெயர் ஆய்வும்**
சரவணா வெளியீடு
இராகவ ரெட்டி காலணி
சென்னை – 95, 1992

48. துரைசாமிப்பிள்ளை, ஔவை சு. - **சேர மன்னர் வரலாறு**
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை – 4, 2008

49. துரைசாமிப்பிள்ளை, ஔவை சு. - **பரணர்**
சாரதா பதிப்பகம்
சென்னை – 14, 2012

50. துரைசாமிப்பிள்ளை, ஔவை சு. - **வரலாற்றுக் காட்சிகள்**
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை – 4, 2009

51. தெய்வம். இரா. - **மூவேந்தர்களின் குடிச்சிறப்புகள்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை – 98, 2012

52. தேவநேயப் பாவாணர், ஞா. - **பழந்தமிழாட்சி**
தமிழ்மண் பதிப்பகம்
இராயப்பேட்டை
சென்னை – 14

53. பகவதி கே. - **இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை- 113, 1984

54. பத்மஜா ரமேஷ்
புருஷோத்தமன், வி.பி. - **சங்க கால மன்னர்களின் காலநிலை I, II**
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்
சென்னை – 113, 2000

55. பழனிச்சாமி, செ. - **புறநானூற்றில் தமிழர் பண்பாடு**
வாணி பதிப்பகம்
402, அளகேசன் சாலை
கோவை - 11.

56. பார்த்தசாரதி, நா. - பழந்தமிழர் கட்டிடக் கலையும் நகரமைப்பும்
தமிழ்ப் புத்தகாலயம்
திருவல்லிக்கேணி
சென்னை – 5, 1992

57. பாலசுப்பிரமணியம், சி. - சேரநாட்டு செந்தமிழ் இலக்கியங்கள்
நறுமலர்ப் பதிப்பகம்
சென்னை - 29, 1985

58. பிள்ளை, கே.கே. - தென்னிந்திய வரலாறு, I, II
பழனியப்பா பிரதர்ஸ்
14, பீட்டர்ஸ் சாலை
சென்னை - 14, 2007

59. பிள்ளை, கே.கே. - தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை – 113, 2011

60. மாணிக்கம், வீ. - கொங்குநாடு
விடியல் பதிப்பகம்
கோவை – 15, 2014

61. மாதையன், பெ. - சங்க கால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்
பாவை பப்ளிகேசன்ஸ்
இராயப்பேட்டை
சென்னை – 14, 2012

62. மீனாட்சிசுந்தரனார், தெ.பொ. - சங்கத் தமிழ்
(தொ.ஆ. காவ்ய சண்முகசுந்தரம்) காவ்யா
கோடம்பாக்கம்
சென்னை – 24

63. முருகேசன், சி. எஸ். - தென்னிந்தியக் கோட்டைகள்
அசோகன் பதிப்பகம்
பெருங்குடி
சென்னை – 96, 2009

64. ராஜ் கௌதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும்
தமிழினி
இராயப்பேட்டை
சென்னை – 14, 2006

65. வேங்கடசாமி, மயிலை சீனி. - சங்ககாலத் தமிழக வரலாறு I,II
எம். வெற்றியரசி வெளியீடு
ஆதம்பாக்கம்
சென்னை – 88, 2003

66. வேங்கடசாமி, மயிலை சீனி. - கொங்குநாட்டு வரலாறு
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை – 5, 2008

67. வேங்கடசாமி, மயிலை சீனி. - துளு நாட்டு வரலாறு
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை – 5, 2009

68. வேங்கடசாமி, மயிலை சீனி. - சேரன் செங்குட்டுவன்
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை – 5, 2007

69. வேங்கடசாமி, மயிலை சீனி. - பழங்காலத் தமிழர் வாணிகம்
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை – 5, 2007

70. வேங்கடசாமி, மயிலை சீனி. - களப்பிரர் ஆட்சியில் தமிழகம்
விடியல் பதிப்பகம்
கோவை – 15, 2012

71. வேங்கடசாமிநாட்டார், ந.மு. - சோழர் சரித்திரம்
சாரதா பதிப்பகம்
சென்னை – 14, 2011

## ஆய்வேடுகள்

1. நாயகம், கோ. - **பண்டைத் தமிழர் வாணிகம்**
   பாரதியார் பல்கலைக்கழகம்
   கோவை

2. கார்த்திகேயன், மா. - **அகநானூற்றில் வரலாற்றுக் கூறுகள்**
   பெரியார் பல்கலைக்கழகம்
   சேலம் 636 011

## வலைதளங்கள்

1. www.noolagam.org
2. http://www.tamilvu.org/library/libindex.htm
3. http://ta.wikipedia.org/wiki
4. http://keetru.com/index.php
5. http://www.tamil heritage.org/old/text/etext/html
6. http://www.tamil paper.net
7. http://www.eegarai.net